# அமெரிக்கா

## வழிகாட்டுகிறது

டேவிட் குஷ்மன் காயில்

தமிழில் : ரா. நா.

# அமெரிக்கா வழி காட்டுகிறது

மூலம் :

டேவிட் குஷ்மன் காயில்

தமிழில் :

ரா. நாராயணன்

வெளியிட்டோர் :

மாணவர் இல்லம்

சென்னை—5.

# பதிப்புரை

உலகின் பல்வேறு நாடுகளில் தனது அரசியல் அமைப்பின் மூலம் ஒரு உன்னத நிலையை அடைந்த நாடு அமெரிக்கா என்பது மறுக்க முடியாத உண்மை.

அந்நாட்டின் முன்னேற்றத்திற்குப் பயன்பட்ட அரசியல் அமைப்பின் முறையினை நம்மவரும் அறிந்தால்........என்ற எண்ணமே இப்புத்தகம் வெளி வருவதின் நோக்கமாகும்.

நம் தலைவர் நேரு அமெரிக்க நாட்டினரிடையே பவனிவரும் இந்நிலையிலே இப் புத்தகத்தைத் தமிழ் அன்பர்களுக்கு அர்ப்பணிப்பதில் பெருமை கொள்கிறோம்.

சென்னை,
20—12—'56

**நா. வயிரவன்,**
உரிமையாளர்,
மாணவர் இல்லம்

# அமெரிக்க அரசியலமைப்பும் இயங்கு முறையும்

## 1. ஆரம்பம்

ஜனநாயக வாழ்க்கையில் மனித வர்க்கத்தின் அனுபவமே அரசியல். ஒரு ஜனநாயக சமூகத்தில் அரசாங்கத்தின் செயல்களையும், கொள்கைகளையும் பற்றி எழும் மாறுபட்ட கருத்துக்களை உள்நாட்டுச் சண்டை ஏற்படாமல் சர்ச்சை செய்து தீர்த்துக் கொள்கிறார்கள். விஷயங்களை மதிப்பிடும் தரத்தை அரசியல் மூலம் மக்கள் வகுக்கிறார்கள்; இதன் மூலம் சமூகத்தில் எந்தப் பகுதியினருக்கும் தீங்கு நேராத முறையில் ஆட்சியை நடத்துகிறார்கள்.

அமெரிக்க அரசியலில் காணப்படும் நல்லதும் கெட்டதும் அமெரிக்க மக்களின் குண விசேஷங்களையும், அரசாங்க ஸ்தாபனங்களும் அரசியல் பழக்க வழக்கங்களும் உருப்பெற்ற சரித்திரத்தையும், பிரதிபலிக்கின்றன. அமெரிக்க ஆட்சி முறை ஓரளவு 1700-ல் நிலவிய பிரிட்டிஷ் குடியேற்ற ஆட்சி முறையின் சாயலாகவும், அமெரிக்க வளர்ச்சியில் ஏற்படும் பிரத்யேகமான தேவைகளைப் பூர்த்தி செய்யும், புதிய சாதனமாகவும், அமைந்திருக்கிறது.

இன்று அமெரிக்க ஜனத் தொகையில் கிட்டத்தட்ட பாதிப் பேர் மாத்திரமே பிரிட்டிஷ் சந்ததிகள்; மற்றவர்கள் ஐரோப்பிய நாட்டைச் சேர்ந்தவர்களும், நீக்ரோக்களும், அமெரிக்க இந்தியர்களுமாவர். கிழக்கத்தி நாடுகளைச் சேர்ந்தவர்களும், ஒரு சிலர் இருக்கின்றனர். அமெரிக்கர் ஆட்சி புரிவதற்கான அரசியல் முறை தீர்மானமாகத் திட்டமிட்டு வகுக்கப்பட்டதல்ல. அது அவர்களின் இயல்பான உள்ளுணர்வின் விளைவாக அமைந்ததாகும். அது வெகுவாக பிரிட்டிஷ் வழக்கங்களையும், சம்பிரதாயங்களையும், அடிப்படையாகக் கொண்டது. ஆனால் அமெரிக்காவில் வசிக்கும், பல்வேறு இனத்தாரின் சேவையும், அதை உருவகப்படுத்துவதில் பயன்பட்டிருக்கிறது.

இந்த நாட்டில் அரசாங்கத்தின் பல்வேறு பகுதிகள் இயங்கு வதில், அரசியல் கட்சிகளும் அரசியல் நடவடிக்கைகளும் எவ்வளவு தூரம் பங்கு பற்றியிருக்கின்றன, என்பதைக் காட்டு வதே இந்நூலின் நோக்கம்.

1607-லிருந்து 1776 வரை பிரிட்டிஷ் ராஜ்யத்தின் குடி யேற்ற நாடாக, இப் பகுதிகள் இருந்த சமயத்தில், ஆங்கில ஆட்சிமுறை இங்கு அமுலிலிருந்தது. இதுதான் பின்னர் இங்கு தோன்றிய அரசியல் ஸ்தாபனங்களுக்கு அஸ்திவார மாயிற்று.

குடியேற்ற நாட்டுச் சட்டசபைகள் அந்நாடுகளுக்கான சட்டங்களை இயற்றின; ஸ்தல ஸ்தாபனங்கள் அமைப்பதற்கான சாஸனங்களை வெளியிட்டன; வரிகள் விதித்தன; பொதுச் செல வுக்கான பணங்களை அனுமதித்தன. பண நிர்வாகத்தில் தங்களுக்கிருந்த அதிகாரத்தின் மூலம் அந்தச் சட்ட சபைகள், கவர்னருடைய நடவடிக்கைகளைச் சில சமயம் கட்டுப்படுத்தவும் இயங்கின.

ஸ்தல ஆட்சிகள் இங்கிலாந்தில் உள்ளதுபோல் அமைந் திருந்தன. அந்தந்த இடத்து நிலைமைக்கேற்ப குடியேற்ற நாடு களில், கவுன்டிகள், டவுன் ஷிப்புகள், மேனர்கள், பரோக்கள் * இருந்தன. அவைகள் இன்றும் விசேஷ மாறுதலின்றி, அதே நிலைமையில் இருக்கின்றன. கவுன்டி கோர்ட்டுகள், அமைதி காக்கும் மாஜிஸ்டிரேட்டுகள், ஷெரிப்கள், கரோனர்கள் ஆகிய எல்லாம் அமெரிக்க சுதந்தரப் புரட்சிக்கு முன் குடியேறியவர்களுக் குத் தெரிந்தவைகளே. முக்கியமான வழக்குகளை விசாரிக்க ஒவ் வொரு குடியேற்ற நாட்டிலும் விசேஷ நீதி ஸ்தலங்கள் இருந்தன. அப்பீல்களை விசாரிக்க உயர்தர நீதி ஸ்தலங்கள் இருந்தன. கடைசியாக அப்பீல் செய்ய வேண்டுமானல் இங்கிலாந்திலுள்ள பிரிவி கவுன்ஸிலுக்குப் போகவேண்டும்.

ஆங்கிலேயர்கள் அனுபவித்த—கூட்டம் கூடும் உரிமை, சர்க்காருக்கு மனுச் செய்துகொள்ளும் உரிமை, வழக்குகளை ஜூரிகளின் உதவிகொண்டு விசாரணை கோரும் உரிமை, வரி

* இவை நம் நாட்டிலுள்ள ஜில்லா, தாலுக்கா, பிர்க்கா, முனிசிபல் நகரம் போன்றவை.

விதிக்கும் சட்டசபைகளுக்கு பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கும் உரிமை யாவும் தங்களுக்கும் உண்டு என்று நம்பினர். பிரிட்டன் குடியேற்ற நாடுகளை ஆட்சி புரிந்த காலங்களில் குடியேறியவர்கள் அநேகமாக இங்கிலாந்துக்கு வரி செலுத்தியதே இல்லை. பிரெஞ்சுக்காரர்களுடனும், கனடாவிலுள்ள பிரெஞ்சு இந்தியர்களுடனும், பிரிட்டிஷார் குடியேறியவர்களைச் சண்டையில் இழுத்துவிட்டாலும், இங்கிலாந்திலிருந்து அவர்கள் எவ்வித ராணுவ உதவியும் பெறவில்லை. வெஸ்ட் மினிஸ்டரிலுள்ள பார்லிமெண்டில் அமெரிக்கருக்குப் பிரதிநிதித்துவமளிக்காமல், அவர்கள் மீது வரி மட்டும் விதித்தவுடன், தங்களுக்குப் பரம்பரையாயிருந்த உரிமைகளைப் பறித்து விட்டதாக அமெரிக்கர் கருதினர்.

குடியேற்ற நாட்டுக்கும், ஆட்சி புரியும் நாட்டிற்கும், இடையில் பரந்த அட்லான்டிக் மகா சமுத்திரம் இருந்ததனுலும், துரிதமான போக்குவரத்து சாதனங்கள் இல்லாமையினுலும், சட்டப்படிக்கு அளிக்கப்பட்டதைவிட, அதிக சுதந்தரத்தை குடியேற்ற நாடுகள் நடைமுறையில் அனுபவித்தன. ஸ்தல ஆட்சியிலும், கொஞ்சங்கொஞ்சமாக விரிந்துகொண்டே வரும் எல்லைப்புற பிரதேசங்களிலும் அமெரிக்கர்களுக்குத் தங்களை ஆளும் பிரபுத்துவத்தின் சின்னங்கள் மிகக் குறைவாகவே காணப்பட்டன. பிரிட்டிஷ் கொடியின் கீழ் அவர்கள் வாழ்ந்த 170 ஆண்டுகளில் அவர்கள் வெகுவாக சுய ஆட்சி அனுபவத்துடன் சுய சக்தியின் மேல் ஆதாரப்பட்டு இயங்குவது ஓரளவு பழக்கமாகி விட்டது. எனினும், அக்காலத்தில் தங்களுடைய அரசியல் முறையின் தலைமை ஆட்சி பீடம் பிரிட்டிஷ் அரசனிடமும், தங்களுக்குப் பிரதிநிதித்துவமில்லாத ஒரு பார்லிமெண்டினிடமும் பொருந்தியிருந்ததால், அங்க நிர்மாணக் கட்டுப்பாடுகளுடன் கூடிய கட்சிப் பிரதிகட்சிகள் எனும் அமைப்பு இங்கு உருவாகவில்லை. அமெரிக்கக் காலனிகள் மீது தன்னுடைய ஆதிக்கம் முறிந்த பிறகுதான் இங்கிலாந்திலேயே அத்தகைய அமைப்பு ஏற்பட்டது.

இப்போது இந்தக் காலனிகளில் நடந்த அரசியலில் விவாதங்களெல்லாம் கவர்னர்களுக்கும் சட்டசபைகளுக்கும் இடை

யிலுமோ அல்லது ஸ்தல ஆட்சியில் பதவிக்காகப் போட்டியிடு பவர்களுக்குள்ளுமோ நிகழ்ந்தவையாம்.

குடியேற்ற நாட்டு ஆட்சி நிலவிய காலத்தில் அடிக்கடி பிரெஞ்சுக்காரர்களுடனும், இந்தியர்களுடனும் ஏற்பட்டு வந்த சண்டைகளைச் சமாளிக்க ஒருவகைக் குடியேற்ற நாட்டு ஆலோசனை சபை அமைக்கலாம் என்று யோசனை கூறப்பட்டு வந்தது. ஆனால் இந்த யோசனை நடைமுறையில் அனுஷ்டிக்கப்படவில்லை. ஆயினும் ஒன்றுபட்டுச் செயல் புரிய வேண்டுமென்கிற எண்ணம் மாத்திரம் அமெரிக்கர் மனத்தில் பதிந்திருந்தது, 1770-ம் ஆண்டு ஆரம்பத்தில் இங்கிலாந்துடன் சச்சரவு முற்றவே, அமெரிக்கர் ஒன்றுபட்டு இயங்கும் எண்ணத்தைத் தீவிரமாகக் கருத்தில் கொண்டனர். 1774-ம் ஆண்டில் அவர்கள் 'கான்டினென்டல் காங்கிரஸ்' (தேசிய மகாநாடு) ஒன்றைக் கூட்டினர்.

இந்தக் காண்டினென்டல் காங்கிரஸ் மகாநாட்டுக்குச் சட்ட பூர்வமான ஆதாரம் எதுவும் கிடையாது. மக்கள் தங்கள் மனக்கசப்பை வெளிப்படுத்துவதற்காகக் கூட்டப் பட்டதே அது. அந்தக் கூட்டத்தில் தங்கள் உரிமைகளையும், குறைபாடுகளையும், திட்டமாகப் பிரகடனம் செய்து விட்டு மீண்டும் காங்கிரஸ் 1775-ல் கூட வேண்டுமெனத் தீர்மானித் தனர். மாஸாசூஸெட்ஸ் மாகாணப் பிரதேசத்தில் கடுமையான சண்டை துவங்கியதன் விளைவாக, இந்தக் காங்கிரஸ் மேலும் திட்டவட்டமான உருப்பெற்றது. குடியேற்ற நாடுகளை ஆளும் உரிமையை மேற்கொண்டது. அது ஒரு தேசியப் படைதிரட்டி ஜார்ஜ் வாஷிங்டனை அதற்குத் தளகர்த்தராக நியமித்தது.

1776-ல் இரண்டாவது கான்டினென்டல் காங்கிரஸ் சுதந்திரப் பிரகடனம் செய்தது. இந்தப் பிரகடனம், பரம்பரையாக ஆங்கிலேயர் அனுபவித்து வந்த உரிமைகளை வற்புறுத்தி, சுதந்திர மக்களின் பறிக்க முடியாத உரிமைகளை அடிப்படையாகக்கொண்டே அமெரிக்கா, சுய ஆட்சியை ஸ்தாபித்ததாகப் பறை சாற்றியது. இந்த சுதந்திரப் பிரகடனத்திற்கு, சட்ட பூர்வமான அரசியல் சாஸனத்திற்குள்ள அதிகாரம் இல்லை யென்றாலும் அது அமெரிக்காவின் அரசியல் நிகழ்ச்சிகள் எந்த

தார்மீகக் கொள்கைகளை ஆதாரமாகக்கொண்டு இயங்குகின்றன என்பதை மதிப்பிடுவதற்குச் சிறந்த பிரமாண வெளியீடாகும்.

1777-ல் 'காண்டினென்டல் காங்கிரஸ்' அமெரிக்காவின் பல பகுதிகளும் ஒரு வகை சமஷ்டி ராஜ்ய அமைப்பின் கீழ் இயங்க வேண்டும் எனத் தீர்மானித்து, அதைப் பல்வேறு ராஜ்யங்களின் அங்கிகாரத்துக்கு அனுப்பிற்று. 1781-க்குள் எல்லா ராஜ்யங்களும் இதை ஆதரித்துத் தீர்மானம் செய்தன. 'சமஷ்டி அமைப்பின் ஷரத்துக்கள் என அழைக்கப்படும் அந்த சாஸனம்தான், குடியரசின், அரசியலமைப்பாகும்.

இதன் மூலம் நிறுவப்பட்ட சமஷ்டி அரசாங்கம் மிகவும் சாமானிய முறையில் அமைந்திருந்ததால் போதிய அளவு பலனளிப்பதற்கு அது பலமற்றதாக இருந்தது. ஆனால் இந்த அளவுக்குத்தான் உறுப்பு ராஜ்யங்கள் இசையத் தயாராயிருந்தன. மத்திய அரசாங்கத்திற்கு ராஜ்யங்கள் அளித்த அதிகாரங்களை அது காங்கிரசிடம்* ஒப்படைத்தது. காங்கிரஸ் ஒரே சட்ட சபை அடங்கியது. அதில் ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் ஒரு பிரதிநிதியுண்டு, மத்திய ஸ்தாபனத்தில் நிர்வாகப் பகுதியோ, நீதி பரிபாலனப் பகுதியோ கிடையாது.

சமஷ்டி ஷாரத்துக்களின்படி தேசமும், உட்பிரிவான ராஜ்யங்களும் வேகமாகச் சிதறுண்டு போகும் நிலைக்கு வந்து விட்டன. அமெரிக்க நாணயத்தின் மதிப்பு இறங்கி விட்டது. இன்றுகூட பணத்திற்கு மதிப்பு குறைந்தால் 'காண்டினென்டல் நாணயம் மாதிரி மதிப்பிழந்து விட்டது' என்று சொல்வது வழக்கமாகி விட்டது. ராஜ்யங்களுக்குள் வியாபாரம் மிக மிக மந்தமடைந்து விட்டது. வியாபாரத்தை ஒழுங்குபடுத்தி, வரிகள் விதித்து, பொருளாதார முறை சீர்குலையாமல் செய்ய இன்னும் அதிக பலம் பொருந்திய சமஷ்டி அரசாங்கம் தேவையென்று அமெரிக்க வர்த்தகர்கள் கோர ஆரம்பித்து விட்டனர். 1785-லும் 1786-லும் இராஜ்ஜியங்களுக்குள் வர்த்தகர் மகாநாடுகள் இரண்டு நடந்தன. இவைகளின் விளைவாக 1787-ல்

---

* காங்கிரஸ் எனும் பதம் அமெரிக்காவிலுள்ள மக்கள் சட்ட சபையைக் குறிக்கிறது.

பிலடல்பியாவில் ஒரு மகாநாடு(கன்வென்ஷன்)கூட்டப்பட்டது. இதில்தான் அரசியலமைப்பு வகுக்கப்பட்டது. வர்த்தகத் தேவையை அடிப்படையாகக் கொண்டே அரசியலமைப்பு உருப் பெற்றது. சமஷ்டி அரசாங்கத்திற்கு பலவித பொருளாதார அதிகாரங்கள் அளிக்கும் ஷரத்துக்களும் சேர்க்கப்பட்டன.

இந்த ஷரத்துக்கள் கன்வென்ஷன் கூட்டியவர்கள், அதற்கு வந்திருந்தவர்கள் யாவருடைய நோக்கங்களையும் பிரதிபலித்தன.

பிலடல்பியா கன்வென்ஷனுக்கு வந்திருந்தவர்களில் பெரும்பாலோர் வக்கீல்கள், நிலச்சுவான்தார்கள், வர்த்தகர்களாவர் இவர்கள் காங்கிரஸ் உறுப்பினராகவும், அரசாங்க உத்தியோகஸ்தர்களாகவும் பணி புரிந்து அநுபவம் பெற்றவர்கள். கூலி பெற்றுப் பிழைப்பவர்கள், சிறு விவசாயிகள், ஆதியில் குடியேறியவர்கள் ஆகியவர்களின் பிரதிநிதிகள் அங்கு காணவில்லை. வர்த்தகம் வளர உதவி புரியும், பலம் வாய்ந்த நிலைத்திருக்கக்கூடிய அரசாங்கம் அமைக்கவே பிரதிநிதிகள் விரும்பினர். 'மக்களுக்குப்' பொறுப்பு வகிக்கும் அரசாங்கத்தையே அவர்கள் விரும்பினர்: ஆனால் பாமரமக்கள் ஜனாதிபதியையோ அல்லது காங்கிரஸ் உறுப்பினரையோ தேர்ந்தெடுக்க அனுமதிக்கப்படும் எண்ணம் அவர்களுக்கில்லை. பெரிய ராஜ்யங்களுக்கும், சிறிய ராஜ்யங்களுக்கும், பரஸ்பரம் அச்சம் பொருமை ஏற்படாமல் தடுப்பதற்கு ஒரு சமரஸ முறையை அவர்கள் கண்டு பிடிக்கவேண்டி யிருந்தது.

அரசியலமைப்புக்கு சமஷ்டி அத்யாவசியமான அம்சமா யிருந்தது. வன்மையான ஒரு மத்திய அரசாங்கம் இயங்க வேண்டுமென்பது உத்தேசமாகையால் அரசாங்க சாஸனத்தில் சமஷ்டி அமைப்பு அவசியமா யிருந்தது. அதே சமயத்தில், தேசத்தின் சமஷ்டி பரிபாலனத்திற்கு இன்றியமையாத அம்சங்களைத் தவிர, மற்றவற்றின் அதிகாரங்கள் யாவற்றையும் உறுப்பு ராஜ்யங்களின் கையில்விட வேண்டியும் இருந்தது. இந்த இரட்டை நோக்கத்திற்கு மூலகாரணம் சமஷ்டி அரசாங்கம் மிகப் பேரளவு பலம் பொருந்தியதா யிருந்தா கொடுங்கோல்

லாட்சி நேரிடும் என்கிற அச்சம்தான். சட்டசபை, நிர்வாகம், நீதி இலாக்காக்கள் மூன்றுமோ, அல்லது அவைகளில் இரண்டோ ஒரே கூட்டத்தினரின் கையிலிருந்தால், ஆபத்து நேரிடும் என்கிற பயம்தான், மூன்றையும் பிரித்து வைக்கவேண்டும் எனும் யோசனையின் முக்கிய காரணம்.

1778-லிருந்து அமெரிக்க அரசியலமைப்பு எவ்வித எதிர்ப்புக்கும் உள்ளாகாமல் நிலைத்திருப்பதே அமெரிக்கரின் சுபாவத்திற்கும், தேவைகளுக்கும் ஏற்றபடி அது அமைந்திருக்கிறது என்பதற்குச் சான்றாகும். அதை எழுதித் தயாரித்தவர்களுக்கு அமெரிக்க குறைநிறைகளைப் பற்றியும், பிறநாடுகள் பிற்காலங்களின் சரித்திரப்படிப்பினை பற்றியும் அபார உணர்வு இருந்தது. அவர்கள் உழைப்பின் பயன் 1788-ல் எழுந்த பிரச்னைகளுக்கு முடிவு கண்டதுமின்றி, ஆதிகர்த்தாக்கள் எதிர்பார்த்திருக்க முடியாத சந்தர்ப்பங்களைச் சமாளிக்கவும் உதவியது.

இதற்கு ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு புகழ்பெற்ற பிரிட்டிஷ் சரித்திர ஆசிரியர் ஜேம்ஸ் பிரைஸ் அமெரிக்க அரசியலமைப்பைப்பற்றி பின்வரும் விமர்சனத்தை வெளியிட்டுள்ளார்:

"எழுத்தில் அமைந்த இதர எல்லா அரசியலமைப்புக்களையும்விட இது சிறப்பானது; இதன் கட்டுக்கோப்பு மக்களுடைய நிலைமைக்கேற்ப அமைக்கப் பட்டிருக்கிறது; இதன் வாசகம் சுலபமாகவும் விளங்கக்கூடியது; சுருக்கமானது; தெளிவானது.

"மூலக் கொள்கைகள் வரையறுக்கப் பட்டிருப்பினும் நடைமுறை அனுஷ்டானத்தில் யுக்தா யுக்தப்படி நெகிழ்ந்து கொடுக்கும் தன்மையில் அமைந்திருந்தன.''

ஒரு ஸ்தாபனமோ, மின்சார மூளையோ, செயற்கை முறை சிந்தனை யந்திரமோ, எப்படி செயற்கையால் உருவாக்கப்பட்டதோ அம்மாதிரியே, அரசியலமைப்பின் மூலம் உருவான சமஷ்டி அரசாங்கமும், செயற்கையாக அமைந்த பூரண உரிமையுள்ள ஸ்தாபனம். அது இயற்கையாக அமைந்ததல்ல. மனிதர்களால் சிருஷ்டிக்கப் பட்டது. இன்று அதன் எலும்புக் கூடுகளை மூடும் உயிருள்ள தசைகள், மனிதர்களால்—அதாவது

அரசியல் கலை பயிலும் அமெரிக்கர்களாலும், சில சந்தர்ப்பங் களில் ராஜ தந்திரிகளாலும் இயங்கும்படி செய்யப்பட்டது.

உறுப்புக்களாயுள்ள ராஜ்யங்கள் தாம் இயற்கையாக அமைந்த பூரண சுதந்திர நாடுகள். ஆங்கிலேயருக்கு இயல் பாயுள்ள பூரண சுதந்திர உரிமைகளை யுத்தத்தின் மூலம் தத்தம் ராஜ்யங்களில் அனுபவிக்கும் அதிகாரம் பெற்றனர். அப்படி உரிமை பெற்ற காலத்திலிருந்து, சர்வதேச சட்டத் துக்கு மாத்திரம் உட்பட்டுத் தங்கள் பூரண சுதந்திர அதி காரத்தை வகுத்துக் கொண்டு வாழ்ந்து வருகின்றனர்.

புரட்சி யுத்தம் தொடங்கிய பொழுது நடைமுறையில் ஒவ்வொரு ராஜ்யமும் சட்டசபை அமைத்துக் கொண்டது. 1776-லிருந்து 1780-க்குள் அவைகள் தங்களுக்கென அரசிய லமைப்பு வகுத்துக் கொண்டு ஒழுங்கான ஆட்சி முறையையும் அமைத்துக் கொண்டன. சமஷ்டி அமைப்புக்கு அடிப்படை யான பல கொள்கைகள் சில ராஜ்யங்களில் முன்பு நடைமுறை யில் அனுஷ்டிக்கப் பட்டவை. சில ராஜ்யங்கள் வகுத்துக் கொண்ட அரசியமைப்பின் ஷரத்துகள் சுருக்கமா யிருந்தாலும் பூரணமானதா யிருக்க வேண்டும் எனும் நோக்கத்துடன் அமைக்கப்பட்டவை. உதாரணமாக, ராஜ்யங்களில் தனித்தனி யாக, சட்டசபைகள், நிர்வாகம், நீதி இலாகாப் பகுதிகள் இருந் தன. ஆனால் சமஷ்டி ஷரத்துக்கள்படி, ஒவ்வொரு ராஜ்யமும் இயல்பாகவே, பூரண சுதந்திரம் பெற்றதென்கிற கொள்கை உறுதிப்பட்டு விட்டது. ஐக்கிய அமெரிக்க அரசாங்கத்திற்கு ராஜ்யங்கள் தாமாகவே உவந்தளித்த அதிகாரம் தவிர வேறெதுவும் இல்லை. புதிய அரசியலமைப்பு எழுதப்படு கையில், இதே கொள்கையின் அடிப்படையில் அதை வகுக்க வேண்டி யிருந்தது. ஆனால் சமஷ்டி ஷரத்துக்களுக்கும், புது அரசியலமைப்புக்கும் ஒரு முக்கியமான வித்தியாசமிருந்தது. புதிய யூனியனுக்கு அதிகப்படியான அதிகாரங்களை ராஜ்யங் கள் அளித்தன.

1787-ல் பிலடல்பியாவில் பிரதிநிதிகள் கூடுகையில் சமஷ்டி ஷரத்துகளுக்குத் திருத்தங்கள் கூறும்படி மட்டும்

பணிக்கப் பட்டார்கள், சமஷ்டி ஷரத்துக்கள்படி ராஜ்யங்கள் ஏகோபித்துச் செய்யும் திருத்தங்களே செல்லுபடியாகும். ஆனால் பிரதிநிதிகள் கூடி வேலை செய்யத் தொடங்கியவுடன், எல்லா விதத்திலும் புத்தம் புதிய அரசாங்கம் அமைத்தால் தான் பயனுண்டு என்று கண்டனர். ஆகையால் சமஷ்டி ஷரத்துக்களை மட்டுமின்றி அவைகளைத் திருத்துவதற்காக அனுமதி யளித்திருக்கும் அடிப்படைச் சட்டத்தையும் ரத்து செய்தனர். அதற்குப் பதிலாக புதிய அரசியலமைப்பில் முதலில் இருந்த ஒன்பது ராஜ்யங்கள் ஒன்று கூடி எந்த யோசனையையும் அங்கீகரிக்க வேண்டுமென்று திட்டமிட்டனர். இந்த ஒன்பது தவிர, பிற ராஜ்யங்கள் எல்லா விதத்திலும், தகுதியானவுடன் சமஷ்டியில் சேரலாம் எனவும் முடிவு செய்தனர்.

பிலடல்பியா கன்வென்ஷனின் முக்கியமான வேலை அங்கு கூடிய பிரதிநிதிகள் விரும்பியளிக்கும் பொறுப்புக்களை நிர்வகிக்கக் கூடியதும், அதற்கு எழக்கூடிய ஆட்சேபனைகளை சமாளிக்கக்கூடிய ஆட்சி முறையை வகுப்பதும்தான். இன்று மேற்கு, ஐரோப்பிய நாடுகள் ஒன்று கூடி யிருப்பதற்காகச் செய்யப்படும் முயற்சிகளை அமெரிக்கர் அனுதாபத்துடன் கவனிக்கின்றனர். ஏனெனில் ஆதி அமெரிக்கர் இதே சந்தர்ப் பத்தில் இதே மாதிரி சிக்கல்களைத் தீர்த்ததில் பட்ட கஷ்டங் களைப் பற்றிப் பள்ளியில் சரித்திரப் பாடங்களைப் படித்து அவர்கள் அறிந்து கொண்டிருக்கின்றனர்.

கன்வென்ஷன் கூடிய சமயம் பெரிய ராஜ்யங்களின் நலன்களை அடிப்படையாகக் கொண்ட விரிவான யோசனைகள் கூறப்பட்டன. இதுதான் "வர்ஜினியா திட்டம்" என்று கூறப் படுவது. இதற்கு எதிராகச் சிறு ராஜ்யங்கள் முற்றும் மாறான கருத்துகளடங்கிய திட்டத்தைச் சமர்ப்பித்தன. இதற்கு "நியூ ஜெர்ஸி திட்டம்" எனப் பெயர். இந்த இரு திட்டங்களில் எதை ஏற்றுக் கொள்வது என்பது பற்றி, வாதப் பிரதிவாதங்கள் நடைபெற்றன.

இந்த இரு திட்டங்களுக்கும் பொதுவான சில அம்சங்கள் இருந்தன. உதாரணமாக அதிகாரப் பிரிவினை ; இரு திட்டங்

களும், அரசாங்கத்தில் சட்டசபை, நிர்வாகம், நீதி பரிபாலனம், மூன்றும் தனித் தனியானவர்களிடம் ஒப்படைக்க வேண்டு மென்று கோரின. இரு தரத்தாருக்குள்ளும், கடுமையான அபிப்ராயபேதம், சட்டசபை அமைப்பு, சட்ட சபைக்கும் பெரிய ராஜ்யங்களுக்கும் சிறு ராஜ்யங்களுக்கும் இருக்க வேண்டிய தொடர்பு பற்றித்தான் ஏற்பட்டது. இந்த முரண் பாட்டினுல் கன்வென்ஷனே சிதைந்து விடுமோ என்று கூட அஞ்சும் நிலை ஏற்பட்டது. இதே பிரச்னை ஐக்கிய நாடுகள் (யுனைடட் நேஷன்ஸ்) ஸ்தாபனத்தில் சாஸனம் வகுப்பதிலும் ஏற்பட்டது. பெரிய ராஜ்யங்களும் சிறு ராஜ்யங்களும் ஒன்று கூடி விவாதத்திற்கிடமான பிரச்னைகளைத் தீர்க்க முற்படுகை யில் இதே கஷ்டம் எழத்தான் செய்யும்.

வர்ஜீனியா திட்டம், குடியேற்ற நாட்டு அரசியல் அமைப்பு முறையை ஒட்டி மேல்சபை கீழ்சபை என இரு சட்ட சபைகளை அமைக்க விரும்பியது. ஒரு சபைக்கு ஜனங்களே பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பார்கள். இப்படித் தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள் கூடி மேல் சபை அங்கத்தினரைத் தேர்ந் தெடுப்பர். இரு சபைகளுக்கும் ராஜ்யங்கள் தங்கள் ஜனத் தொகை விகிதப்படியோ, அல்லது வரி செலுத்தும் அளவை ஒட்டியோ, அல்லது இரு அம்சங்களும், சேர்ந்த அடிப்படை யிலோ பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பர் எனும் யோசனைகளைப் பற்றியே முக்கியமாக விவாதம் நடந்தது. இந்த ஏற்பாட்டின் படி பெரிய ராஜ்யங்கள், அதிக பலம் பெற்றிருக்கும் காண்டி னென்டல் காங்கிரஸின் ஷரத்துப்படி, ராஜ்யங்கள் பெரிதானு லும் சிறிதானுலும், ஒவ்வொன்றிற்கும் ஒரு ஓட்டுத்தான் உண்டு.

அப்பொழுது இருந்த அமைப்பில் நியூ ஜெர்ஸி திட்டம் இவ்வளவு தீவிரமான மாறுதல் கோரவில்லை. அந்த திட்டப்படி சமஷ்டி ஷரத்துக்களிலிருந்தபடி மத்திய சட்டசபை ஒன்றுதா னிருக்கும். அதில் ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் ஒரு ஓட்டுதா னுண்டு.

இந்தச் சிக்கலான பிரச்னையைப் பற்றிப் பிரதிநிதிகள் பல வாரங்களுக்குக் கடுமையாக விவாதம் செய்தனர்.

அதிகாரத்தை நீதியாகப் பாகுபாடு செய்து, எவ்வாறு பெரிய ராஜ்யங்களும், சிறிய ராஜ்யங்களும் ஒரே அரசாங்கத்தின் கீழ் இருக்க முடியும்? இதற்குப் பூரண திருப்தியளிக்கும் பதில் கூற முடியாததினால் அனுபவ சாத்தியமான ஐக்கிய அரசாங்கம், அமைய முடியுமா என்பது பற்றியே சந்தேகம் ஏற்பட ஆரம்பித்து விட்டது.

கடைசியாக கனெக்டிகட் வாசியான வில்லியம் ஸாமுவேல் ஜான்ஸ்டன் இதற்கு முடிவு கண்டார். இதற்கு "கனெக்டிகட் சமரஸம்" என்று பெயர். ஒரு ஜனப் பிரதிநிதி சபையுண்டு; அதில் ஒவ்வொரு ராஜ்யமும், தனது ஜனத்தொகைக்கேற்ப பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கும். இதுதான் வரி விதிக்கும் மசோதாக்களைக் கொண்டுவரலாம். மேல்சபை ஒன்றும் உண்டு. இதில் ராஜ்யங்களுக்கு சமப் பிரதிநிதித்வம் உண்டு. இந்த திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

ஒரு மசோதா சட்டமாக இரு சபைகளின் அங்கீகாரமும் பெற வேண்டுமாகையால் சிறு ராஜ்யங்கள் செனட் சபையில் ஒன்றுகூடி, தங்கள் நலனைப் பாதிக்கக்கூடிய மசோதாக்கள் நிறைவேறாமல் தடுத்து விடலாம். பெரிய ராஜ்யங்கள் தங்கள் அதிகப்படி ஓட்டுக்களால், பிரதிநிதிகள் சபையில் தங்களுக்கு சங்கடம் விளைவிக்கக்கூடிய மசோதாக்களைத் தடுத்து விடலாம். இந்த ஏற்பாடு ஒழுங்காக வேலை செய்வதால், பெரிய ராஜ்யங்களுக்கும், சிறு ராஜ்யங்களுக்கும் ஏற்படக்கூடிய மாறுபட்ட அக்கறைகளால் சிதைவு ஏற்படுமோ என 1787-ல் அமைப்பின் ஆதிகர்த்தாக்கள் அஞ்சியபடி நெருக்கடி ஏற்படவில்லை. பல பகுதிகளுக்குப் பொதுவான வசதிகள் பற்றியோ, அல்லது ஆலைத் தொழில், விவசாயம், சுரங்கத் தொழில், இவைகளுக்குள், முரண்பாடு காரணமாகவோதான் தகராறுகள் ஏற்படலாம்.

உதாரணமாக, நியூமெக்ஸிகோவும், அரிஜோனாவும், கலிபோர்னியாவைவிடக் குறைந்த ஜனத் தொகையுள்ளவைகள். ஹூவர் அணைக்கட்டில் தேக்கப்பட்ட கொலராடோ நதி நீர் சம்பந்தமாக இந்த ராஜ்யங்களுக்குள் தகராறுகள்

நீண்டகாலமாக இருந்து வந்தன; ஆனால் சிறிய ராஜ்யங்கள் பெரிய ராஜ்யங்கள் என சட்டசபையில் எதிரும், புதிருமாய் நின்று இவைகள் சச்சரவு செய்து கொள்ளவில்லை.

அரசியலமைப்புப்படி கீழ் சபை உறுப்பினர் ஓட்டுரிமை யுள்ள மக்களால் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். மதத்தையும் சொத்துரிமையையும் அடிப்படையாகக் கொண்ட சுதந்திர வெள்ளையருக்கன்றி மற்றவர்க்கு வாக்குரிமையைக் குறைக்கும் அதிகாரத்தை இவ்விராஜ்யங்கள் தங்கள் வசம் வைத்துக் கொண்டன.

வுட்ரோ வில்ஸன் எழுதிய அமெரிக்க மக்களின் சரித்திரம் எனும் நூலில், ஆரம்ப காலத்தில் 4,000,000 ஜனத்தொகையில் 120,000 மக்களே ஓட்டுரிமை பெற்றிருந்தனர் என மதிப் பிடுகிறார்.

18-வது நூற்றாண்டில் இந்த அளவுக்கு ஓட்டுரிமை யளிப்பதைக்கூட அபாயகரமானதாகக் கருதினார்கள். அடுத்த நூறு ஆண்டுகளில் பலபல வகையான பகுதியினருக்கு ஓட்டுரிமை அளிக்கப்பட்டது. மேற்கு எல்லை துரிதமாக விரி வடைந்த பிறகே புதிய ராஜ்யங்கள் அமையலாயின. எல்லைப் புற மக்களின் செல்வாக்கினாலும், நிர்ப்பந்தத்தினாலும் நாடு சமத்வ நிலையை நோக்கி முன்னேறி வந்தது. 1860-க்குள் எல்லா ராஜ்யங்களும் 21 வயது நிரம்பிய வெள்ளையர்களுக் கெல்லாம் ஓட்டுரிமை வழங்கின. உள்நாட்டுச் சண்டைக்குப் பிறகு நீக்ரோக்களுக்கும் ஓட்டுரிமை வழங்க வேண்டுமென அரசியலமைப்பு திருத்தப்பட்டது. ஆனால் சில தெற்கத்தி ராஜ்யங்கள், அவர்கள் ஓட்டுரிமையைக் கையாள முடியாமல் தடை செய்து வந்தன. 1920-ல் அரசியலமைப்பைத் திருத்தி ஸ்திரீகளுக்கும் ஓட்டுரிமை யளித்தனர்.

பிரதிநிதிகள் சபையைவிட மேல்சபையாகிய ஸெனட்டுக்கு மக்களுடன் உறவு குறைவாக இருக்கவேண்டுமென்று கருதப் பட்டது. ஆகையால் ஒவ்வொரு ராஜ்யமும் ஸெனட்டுக்கு அனுப்பவேண்டிய இரு பிரதிநிதிகளை ராஜ்ய சட்டசபைகளே தேர்ந்தெடுக்க வேண்டுமென்று விதி வகுக்கப்பட்டது. இதன்

விளைவாக பிரதிநிதிகள் சபையைவிட ஸெனட் பிற்போக்காக இருந்தது. ஸெனடர்கள் ஒன்றுபணக்காரர்களாகவோ அல்லது பெரிய வர்த்தகர்கள் அல்லது பாங்க் முதலாளிகளுக்கு வேண்டியவர்களாகவோ இருந்தனர். பிற்போக்காளர்களின் எதிரிகளாயுள்ள வர்க்கத்தினர் கிளர்ச்சியால் சற்று விரிவுபட்ட ஜனநாயகம் வேண்டும் எனும் இயக்கம் வலுப்பெற்று கடைசியாக 1913-ல் இராச்சியமக்களே தங்கள் பிரதிநிதிகளை ஸெனட் சபைக்குத் தேர்ந்தெடுக்கும் உரிமை யளித்து அதற்கேற்ப அரசியலமைப்பு திருத்தப்பட்டது.

*1913*-லிருந்து ஸெனடர்கள் இராச்சிய சர்க்காரின் தூதர்களாக வாஷிங்டன் சென்றது மாறி கிட்டத்தட்ட ஜனப் பிரதிநிதிகளைவிடச் சிறந்தவர்கள் மாதிரியே அங்கு அமைந்தனர்.

சமீப காலத்தில் பழம் கொள்கைப்பற்றுக் கொண்டவர்களின் எண்ணிக்கை மக்கள் சபையில்விட ஸெனட்டில் குறைந்துகொண்டு வந்தது. மக்கள் சபை அங்கத்தினர்களில் பெரும்பாலோர் செல்வாக்கும் சக்தியும் மிகுந்த சில கோஷ்டியினரின் வற்புறுத்ததலால் நிறைவேற்றும் பொறுப்பற்ற மசோதாக்களை ஸெனட் நிராகரிக்காதா என மக்கள் சபை எதிர்பார்க்கும் நிலைக்கு வந்துவிட்டது எனச் சில விமர்சகர்கள் கருதுகிறார்கள். ஓட்டகர்கள் உத்வேகத்தினால் தவறு செய்ய நேரிடுகையில், ஸெனட், பொது ஜனக் கொந்தளிப்பு தணிந்து மனம் மாறும் வரையில் மசோதாக்களை தடைசெய்து வைக்கிறது. மக்கள் சபைக்கு இரண்டு வருஷத்திற்கொரு முறை தேர்தல் நடக்கையில் ஸெனட் மெம்பர்கள் பதவி காலம் ஆறு வருஷங்களாகையால், அவர்கள் மக்கள் சபையினரைவிட சுதந்திரமாக தங்கள் கடனை ஆற்றுகின்றனர். மக்கள் சபையினர் சில சமயம் சர்க்கார் செலவை சிக்கனத்தின் பெயரால் நடை முறையில் சாத்தியமில்லாத அளவுக்குக் குறைத்து விடுகின்றனர் ஆனால் ஸெனட் சபையினர் அரசாங்கம் நடப்பதற்கு வேண்டிய அளவுபணம் அனுமதித்து விடுவர் என்பது மக்கள் சபையினருக்குத் தெரியும்.

ஜனாதிபதியை ஒரு "எலக்டரல் காலேஜ்" தேர்ந்தெடுக்க வேண்டும் என அரசியலமைப்பு விதித்திருந்தது. இந்த

காலேஜில் ஒவ்வொரு ராஜ்யத்திலிருந்தும் சிலர் நியமனம் பெற்றிருந்தனர். இவர்களை அந்த ராஜ்யத்தின் இஷ்டப்படி நியமிக்கலாம், சட்டசபையோ, ஓட்டர்களோ அல்லது கவர்னரோ, தேர்ந்து அனுப்பலாம். ஜனாதிபதியை தேர்ந்தெடுக்கவோ, அல்லது எலக்டரல் காலேஜுக்கு உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கவோ, அந்தந்த ராஜ்யம், அங்கீகரித்தாலொழியமக்களை அனுமதிக்கும் உத்தேசம் அமைப்பாளர்களுக்கில்லை.

ஜனநாயகம் வேண்டும் என்கிற ஆர்வத்தின் விளைவாக, அமைப்பில் திருத்தம் செய்யாமலே அதன் பொருள் மாறியது. ஒவ்வொரு அரசியல் கட்சியும், எலக்டரல் காலேஜ் உறுப்பினர் பதவிக்கு அபேட்சகர்களைப் பொறுக்குகிறது. அவர்கள் வெற்றி பெற்ருல், ஜனாதிபதி, உபஜனாதிபதி பதவிகளுக்கு, யாரைத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்று பணிக்கப்பட்டிருந்தனர். தேர்ந்தெடுக்கப்பட்ட காலேஜ் உறுப்பினர் சுதந்திரமாக ஓட்டுச்செய்ய முடியாது. ஜனாதிபதியைத் தேர்ந்தெடுப்பதற்கு எவ்வித விசேஷத்;தகுதியில்லாத கட்சி நிர்வாகிகள் சில சமயம் எலக்டரல் காலேஜுக்கு தேர்ந்தெடுக்கப்பட்டதன் மூலம், உயர்வு பெற்றனர். இந்தப் பழக்கம் பாழ்பட்டு விடுமோ என்று அஞ்ச வேண்டிய நிலை 1948-ல் ஏற்பட்டது. தென் ராஜ்யங்களில் உள்ள சில ஓட்டர்கள் ஜனநாயகக் கட்சியின ராயிருந்தாலும், அந்தக் கட்சி அபேட்சகரான ட்ரூமனுக்கு எதிராக ஓட்டுச் செய்தனர். ட்ரூமன் வெற்றி பெற்ருலும் ஜனாதிபதியைத் தேர்ந்தெடுப்பதில் மக்கள் உரிமை பாதிக்கப்படுகின்றதே என்கிற மனக்கசப்பினுல் ஏற்பட்ட பொதுஜனக் குழப்பம் ஒரு அபாய அறிவிப்பு போலிருந்தது.

அரசியலமைப்பில் குறிப்பிடப்படாத எலக்டரல் காலேஜின் மற்ருெரு அம்சம் யாதெனில், ஒரு ராஜ்யத்தில் எந்தக் கட்சி ஜெயிக்கிறதோ அந்தக் கட்சிக்கே எல்லா எலக்டரல் காலேஜ் ஓட்டுக்களையும் ஒப்படைப்பது. தோற்ற காட்சி மொத்த ஓட்டில் 49 சதம் பெற்ருலும் எலக்டரல் காலேஜில் ஒரு ஸ்தானம் கூடப் பெறமுடியாது. இதன் மூலம் மக்கள் ஓட்டு சத விகிதத்திற்கும் எலக்டரல் காலேஜ் உறுப்பினர் சத விகிதத்திற்கும் மிகுந்த தாரதம்யம் காணப்பட்டது. ஜெயித்தவர் பொதுஜன ஓட்டில்

55 சதம் பெறலாம். ஆனுல் அவருடைய எலக்டரல் காலேஜ் ஆதரவு 80 அல்லது 90 சதம் இருக்கலாம். இந்த நிலை ஜனுதிபதி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் எனும் பிரமையை உண்டாக்கலாம். இதன் விளைவாக குறிப்பாக உலக விவகாரங் களில் ஜனுதிபதியின் வாக்குக்கு அதிக மதிப்பு அளிக்கலாம்.

இதனுல் மற்றெரு விளைவு ஏற்படலாம். ஒரு அபேட்சகர் சில ராஜ்யங்களில் அதிகப்படி ஓட்டுகள் பெற்று பெரும்பான்மை ஆதரவு பெறலாம். ஆனுல் மற்றெரு அபேட்சகர் ராஜ்யங் களில் எலக்டரல் காலேஜ் ஓட்டுகள் பெற்று ஜனுதிபதியாக வந்துவிடலாம். உதாரணமாக 1888-ல் கவர்னர் கிளீவ்லண்ட் பெரும்பான்மையான மக்கள் ஓட்டுகள் பெற்ருர். ஆனுல் பெஞ் சமின் ஹாரிஸன் ஜனுதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இப்படி நேருவது இந்தத் தேர்தல் முறையின் தீய அம்சம் என பொதுவாகக் கருதப்படுகிறது. ஆனுல் இது ராஜ்யங்களில் ஒரு கட்சி ஆதிக்கம் ஏற்படாமல் பெரிதும் தவிர்க்கிறது.

ஜனுதிபதியைத் தேர்ந்தெடுப்பதில் இரு கட்சிகள் தீவிர மாக இயங்காத ராஜ்யத்திற்கு, இருகட்சிகள் ஒழுங்காக வேலை செய்யும் ராஜ்யத்திற்குள்ள பங்கு அளிப்பதா என்கிற பிரச்னை எழலாம்.

மக்களின் பெரும்பான்மை பலத்திற்கும் மதிப்பளித்து எலக்டரல் காலேஜ் உறுப்பினர் தங்களுடைய சுதந்திரம் என்று சொல்லி தங்களிஷ்டப்படி ஓட்டுச் செய்வதை தவிர்க்கக்கூடிய ஒரு நீதியான முறையை வகுக்கவேண்டும் எனும் கருத்திற்கு ஆதரவு அமெரிக்கரிடையே வலுத்து வருகிறது. பொது ஜன இஷ்டம் நிறை வேறவில்லை என்கிற மனத்தாங்கல் ஏற்படாத வரையில், இருக்கும் நிலையில் மாறுதல் வேண்டாம் என்பவர் களும் பெருவாரியாயிருக்கின்றனர். அரசாங்கத்தின் எந்தப் பகுதியும், தான் தோன்றித்தனமாகப் பிறழமுடியாத நிலையில் அரசியலமைப்பு மிகுந்த கவனத்துடன் வகுக்கப்பட்டிருக்கிறது.

உதாரணமாக சட்டசபையின் முடிவை ஜனுதிபதி நிரா கரிக்கலாம். அப்படித் தள்ளப்பட்ட மசோதா மீண்டும் சட்ட சபையின் பரிசீலனைக்குப் போகிறது. இரண்டு சபைகளும்

சேர்ந்து 3-ல் 2 பங்கு அதிகப்படி ஓட்டுகளால் நிறைவேற்றி ஞல்தான் அது சட்டமாகும்.

தேச தளபதி எனும் முறையில் ஜனுதிபதியின் உத்திரவு கள் உள்பட அவருடைய முடிவுகளை நிறைவேற்றுவதற்கான செலவை அனுமதிக்காமல் சட்டசபைகள் நிராகரிக்கலாம்.

ஜனுதிபதியால் ஏற்பாடு செய்யப்பட்ட பிற நாடுகளுடன் உடன்பாட்டை ஸெனட் நிராகரிக்கலாம். ஸெனட் அனுமதி பெற்ருல்தான் ஜனுதிபதி நிர்வாகப்பகுதியின் பிரதான உத்யோ கஸ்தர்களேயோ, சமஷ்டி நீதிபதிகளேயோ நியமிக்கலாம். சட்ட சபைகளின் முடிவுகளை பிரதம நீதிஸ்தலம், செல்லுபடி யாகாது என தீர்ப்பளிக்க அரசியலமைப்பு அதிகாரமளிக்கவில்லை. ஆனுல் வழக்கத்தில் நீதிஸ்தலம் அந்த அதிகாரத்தை மேற் கொள்ள இடமளித்து விட்டது.

ஜனுதிபதி, பிரதம நீதிபதிகள், நிர்வாகப் பகுதியின் பிரதான உத்தியோகஸ்தர்கள், நீதி இலாகா அதிகாரிகள் முத லானவர்கள் மீது சட்டசபை வழக்குத் தொடரலாம். இந்த வழக்கை மக்கள் சபை நடத்துகிறது. இதை விசாரிக்கும் நீதி ஸ்தலம் ஸெனட் சபை. இம் மாதிரி வழக்கில் ஸெனட் சபை யில் ஒரு வோட்டு வித்தியாசத்தால் ஜனுதிபதி ஜான்ஸன் தண்டனை பெருமல் தப்பினுர். இம்மாதிரி வழக்குகளில் ஸெனட்டால் தண்டிக்கப்பட்ட நால்வரும் சமஷ்டி நீதிபதிகள். எந்தப் பகுதியும் அளவுக்கு மிஞ்சிப் போகாமலிருப்பதற்கான தடைகள், அதிகாரப் பிரிவினைக் கொள்கைக்கு மாருயிருக் கின்றன. இந்தத் தடைகளை அனுபவ சாத்தியமான சமரஸம் என்று கூறலாம். இந்த சமரஸ முறைதான் அமெரிக்கருக்குப் பெரிதும் பிடித்திருக்கிறது. சட்ட சபை, நிர்வாகம், நீதி பரிபா லனம் மூன்றையும், ஒன்றுக்கொன்று சம்பந்த மில்லாமல் பிரிப் பது அசாத்தியம். ஆனுல் மூன்றில் இரண்டையாவது சர்வாதி கார வெறிபிடித்தவரிடமாவது ரகஸ்ய போலீஸ் முறைக்கா வது உட்படாமல் செய்வது விரும்பத்தக்கதாகும். ஓரளவு பிரிவினையும், எப்பகுதியும் மிஞ்சிப் போகாமலிருப்பதற்கான தடைகளும், இந்நாடு சர்வாதிகாரத்திற்கு உட்படாமலிருப்பதற் காக வகுக்கப்பட்டன. இதுவரையில் இந்த ஏற்பாடுகள் திருப்திகரமாகவே வேலை செய்து வந்திருக்கின்றன.

பிரஜைகளை சமஷ்டி அரசாங்கத்தின் அடக்கு முறை அமுலிலிருந்து, காப்பாற்றுவதற்கான ஜீவாதார உரிமைகளை அரசியலமைப்பைத் தயார் செய்தவர்கள் சேர்க்கவில்லை. ஆதிகாலத்தில் பிரிட்டிஷ் மன்னரிடமும், பார்லிமெண்டிடமும் பட்ட கஷ்டங்களை மனத்தில் கொண்டு அம்மாதிரி அநீதிகள் நேரா வண்ணம் அங்கு மிங்கும் அரசியலமைப்பில் ஷரத்துகள் காணப்படுகின்றன. தனிப்பட்டவர் மீதும், அவர் குடும்பத்தின் மீதும், தண்டனை விதிப்பதற்கான சட்டம் அரசாங்கம் கொண்டுவரலாகாது, என அரசியலமைப்பின் முதல் ஷரத்து விதிக்கிறது. ஒரு குற்றம் செய்த சமயத்தில் அது குற்ற மாகக் கருதப்படாமலிருந்து, அதைக் குற்றமாக்கி பின்னர் சட்டம் இயற்றுவதும், தடை செய்யப்பட்டது.

சர்வாதிகார நாடுகளில் சகஜமாக நடப்பதுபோல்' போலீஸார் தங்களிஷ்டப்படி எவரையும் கைது செய்து தண்டிப்பது தடை செய்யப்பட்டு கைது செய்யப்பட்டவரை நீதிஸ்தலத்தில் ஆஜர் செய்யும்படி கோரும் உரிமையளிக்கப்பட்டது. 3-வது ஷரத்துப்படி சமஷ்டி சட்டத்தின் கீழ் நடைபெறும் வழக்குகளை ஜூரியின் உதவி கொண்டு விசாரிக்க வேண்டும். தேசத் துரோகம் என்று அக்கால அரசர்கள் குற்றம் சாட்டி கம்யூ னிஸ்டுகள் தங்களுக்கு வேண்டாதவர்களை ஒழித்துக் கட்டிய மாதிரி பழி தீர்த்துக் கொள்ளும் முறை துஷ்பிரயோகத்திற் கிடமின்றி வகுக்கப்பட்டது.

இந்த அரசியலமைப்பை இராச்சியங்களின் அங்கீகாரத் துக்கு அனுப்பியதும் எதிர்க் கட்சியினர் அதில் உரிமை ஜாபிதா இல்லை என்று குறை கூறினர். புதிய சட்ட சபைகள் முதல் காரியமாக உரிமை ஜாபிதா அரசியல் அமைப்பில் இடம் பெறும்படி அதைத் திருத்த வேண்டும் எனும் நிபந்தனையின் பேரில் சில இராச்சியங்கள் அதை அங்கீகரித்தன.

அரசியல் அமைப்பிற்கு முதல் 10 திருத்தங்களில் உரிமைப் பட்டியல் அடங்கி இருக்கிறது. அதற்கும் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் நிறைவேற்றிய மனிதவர்க்கத்தின் உரிமைகளுக்கும், பல வித்தியாசங்கள் இருக்கின்றன.

17-ஆம் நூற்றுண்டு இறுதியில் ஆங்கிலேயர்கள் அவர்களு டைய ஆட்சியினரிடம் பட்ட கஷ்டங்களையும், அவர்களுடைய மூதாதையர் பலத்த கடுமையான போராட்டம் நடத்தி அகற்றிய தீங்குகளையும் மனத்தில் கொண்டு அமெரிக்கர்களுக்கு அவர் களுடைய அரசியலமைப்பு உரிமைகளை உத்தரவாதம் செய் தது. ஆனால் ஹிட்லரும், ஸோவியத் ஆட்சியினரும், அந்தப் பழைய கொடுமைகளுக்குப் புத்துயிரும், புது ரூபமும் கொடுத் திருக்கின்றனர். ஆனால் இரு சாஸனங்களுக்கும் அடிப்படைக் கொள்கை ஒன்றேதான்.

இவைதான் அரசியல் அமைப்பின் முக்கியமான அம்சங் கள். இந்தக் கெட்டியான அஸ்திவாரத்தின் மீது அமெரிக்க மக்கள் பூரண சுதந்திரத்துடன், எம்மாதிரி கோபுரம் எழுப்ப விரும்பினாலும், அமைத்துக் கொள்ளலாம். சட்டசபைகளுக்குத் தேர்தலிலும், அவைகளின் அதிகாரங்களிலும் விசேஷ மாறுதல் ஏற்படவில்லை. ஆனால் ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்கும் எலக்டரல் காலேஜின் அதிகாரங்கள், பிரதம நீதி ஸ்தலத்தின் அதிகாரங்கள் முதலியவை மாறுதலடைந் திருக்கின்றன. ஆனால் அரசியலமைப்பு வகுக்கப்பட்ட நோக்கத்தை அது நீடித்து நிறைவேற்றி வருகிறது. அமெரிக்க மக்கள் யாவருக்கும் சேவை செய்யத் தக்க பலமுடையதாகவும், அதே சமயத்தில் யஜமானர்களான அமெரிக்க மக்களுக்குட்பட்டு நடப்பதாகவும் உள்ள ஆட்சி முறையை வகுப்பதே அந்த நோக்கம்.

## 2. கட்சிகள்

இரு கட்சிகளுள்ள அரசியலையேதான் அமெரிக்க மக்கள் விரும்புகின்றனர் என்பது நிதர்சனம். சென்ற இருநூறு ஆண்டுகளாக இந்நாட்டுச் சரித்திரத்தில் ஒரே கட்சி நிலவிய, தருணங்களில், அதையே இரண்டாகப் பிளந்து போகும்படி செய்திருக்கின்றனர். அல்லது ஒரு புதுக்கட்சி ஆரம்பித்திருக் கின்றனர். மூன்று கட்சிகள் போட்டியிட்ட காலங்களில் தேர் தலில் ஒரு கட்சியை முறியடித்திருக்கின்றனர்.

குடியேற்ற நாட்டாட்சி அமுலிலிருந்த காலத்தில் 'விக்கு (Whig), 'டோரி' (Tory) கட்சிகள் இருந்தன. அவைகளுக்குள்

மிருந்த மாறுபாடுகள் காணப்பட்டன. இந்த மாறுபாடுகளினுல் 1775-ல் யுத்தம் ஏற்பட்டது. தற்சமயமுள்ள இரு கட்சிகள் கிட்டத்தட்ட ஒரேமாதிரி இருக்கின்றன இரண்டு வருஷத்திற் கொருதரம், இருகட்சிகளும் முன்னேற்பாடு செய்து கொண்டது போல் போட்டியிடுகின்றன. ஆனுல் அந்தத் தேர்தல் ஒழுங் காக நடப்பதனுல் தோற்கும் கட்சிக்கு விசேஷமான நஷ்டமோ தீங்மோ ஏற்படுவதில்லை.

அமெரிக்க அரசியல் கட்சிகளின் விசேஷ அம்சங்கள், அந் நாட்டின் சரித்திரப்போக்கு, சந்தர்ப்பங்களின் விளைவாக ஏற்பட்டவையே ஒழிய, அரசியல் தலைவர்களின் திட்டத்தினு லல்ல. அரசியலமைப்பில் கட்சிகள்பற்றிய பிரஸ்தாபமே இல்லை என்பதுதான் அதன் தனிச் சிறப்பு.

புரட்சிக்கு முன்பு தற்காலத்திலுள்ளதுபோல், அங்கு கட்சிகள் அமையவில்லை. ஆனுல் மன்னருக்கோ, அவரால் நியமிக்கப்பட்ட கவர்னர்களுக்கோ, ஆதரவளிக்கும் சிலர் "டோரிகள்" எனப் பெயர் சூட்டப்பட்டனர். குடியேற்ற நாட்டுச் சட்ட சபைகளையோ, அல்லது சுய ஆட்சிக் கொள்கை களையோ, ஆதரித்த பிறரை அநேகமாக "விக்குகள்" (Whigs) என அழைத்தனர். இவ்விருதரத்தாருக்குள் ஏற்படும் தகராறு கள், யுத்த மூலம் தீர்க்கப்பட்டன. "விக்"குகள் அல்லது "தேசாபிமானிகள்" யுத்தத்தில் வெற்றிபெற்றது மின்றி, எதிர்க் கட்சியை அறவே ஒழித்துக் கட்டினர். டோரிகள் விரட்டப் பட்டு, கானடாவிலோ, பஹாமாவிலோ குடியேறினுர்கள்.

அமெரிக்காவிலுள்ள பிற்போக்காளர்களை சில சமயம் டோரிகள் என அழைத்தாலும், புரட்சிக்குப் பிறகு, இங் கிலாந்து மன்னரை, மீண்டும் இந் நாட்டு மன்னராக்க வேண்டும் என்று வாதாடும் கட்சி இந்நாட்டில் கிடையாது.

எல்லாப் புரட்சி நாடுகளையும் போலவே அமெரிக்காவிலும் ஒரு கட்சி முறையுடன்தான் அரசியல் வாழ்க்கை ஆரம்பமா யிற்று. வாஷிங்டனும், பிற புரட்சித் தலைவர்களும் அதே முறை நீடிக்கவேண்டுமென்றே விரும்பினுர்கள். வாஷிங்டன் தனது இறுதிப் பிரசங்கத்தில் அரசியல் கட்சிகள் கூடாது

என்றே வற்புறுத்திப் பேசினார். குறிப்பாக பிராந்திய அடிப் படையில் கட்சிகள் தோன்றுவதை அவர் கண்டித்தார். அரசியல் கட்சிகளினால், ஏற்படக்கூடிய தீமைகளைப் பற்றி மனப்பூர்வமாக எச்சரித்தார். பல கட்சிகள் இருப்பதினால் சில சமயம் கலகங்களும், நாசமும் ஏற்படும் என்றும் எடுத்துக் கூறினார். ''விக்''குகளுக்கும் ''டோரி''களுக்கும் நடந்த கடுமையான சண்டை வாஷிங்டனுக்கு ஞாபகமிருந்தது. நாட்டில் பல்வேறு பகுதிகளில், பல்வேறு கட்சிகள் அமைந்தால் என்ன நிலை ஏற்படும் என்பதை அவர் ஊகித்தறிந்து கொண்டார்; 1861-க்குப் பிறகு நேர்ந்த மாதிரி கட்சிகள் போட்டி அரசாங்கங்கள் அமைத்துப் போட்டிப்படைகள் திரட்டுவர் என்பதையும் அவர் உணர்ந்திருந்தார்.

சமஷ்டியை ஆதரிக்கும் பத்திரிகைகளில் அரசியல் அமைப்புப்பற்றி ஜேம்ஸ் மாடிஸன் எழுதிய கட்டுரையில் கட்சி மனப்பான்மையைத் தகர்க்க, அதனால் ஏற்படக் கூடிய தீமைகளை அடக்கி ஒடுக்கக்கூடிய வகையில் புதிய அரசாங்கம் அமைந்திருக்கிறது, என்பதை எடுத்துக் காட்டினார். உதாரணமாக, ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்கும் 'எல்க்டரல் காலேஜ்', கட்சி அடிப்படையில் தேர்தல் நடப்பதைத் தவிர்க்கும் முறையில் அமைக்கப்பட்டிருந்தது. தற்கால பிரஞ்சு ஜனாதிபதியையும், இங்கிலாந்து மன்னரையும்போல் அமெரிக்க ஜனாதிபதியும் கட்சிகளுக்கு அப்பாற்பட்டவராயிருப்பர், என்றே அரசியல் அமைப்பின் ஆதிகர்த்தாக்களில் பலர் எண்ணியிருந்தனர். அரசியலமைப்பின் முதல் நகலில் ஒவ்வொரு ராஜ்ய ஓட்டர்களும், இருவருக்கு ஓட்டு செய்யவேண்டுமென்று விதித்திருந்தது. இவ்விருவரில் அதிகப்படி ஓட்டுப் பெற்றவர் ஜனாதிபதியாகவும் மற்றவர் துணை ஜனாதிபதியாகவும், வருவர். நாட்டின் பிரமுகர்கள் விருப்பப்படி அதிகப்படி ஓட்டுகள் பெற்றவர் ஜனாதிபதியாகவும், அடுத்தபடியானவர் துணை ஜனாதிபதியாகவும் வர இந்த முறை உத்தரவாதம் அளிக்கும் எனக் கருதப்பட்டது.

1787-ல் கூட அரசியல் அமைப்பு வகுக்கப்பட்டபோது, உருப்படியான அரசியல் கட்சிகள் ஏற்படா விட்டாலும், அந்த

அமைப்பை ஏற்பதா வேண்டாமா என்பதுபற்றி அபிப்ராய பேதம் இருந்தது. பொதுவாக அலெக்ஸாண்டர் ஹமில்டன் தலைமையில் பாங்கர்கள், வியாபாரிகள், பழமையில் பற்றுள்ள நிலச்சுவான்தார்கள் ஆகியோர் அரசியலமைப்பை ஆதரித்தனர். தொழிலாளிகளும், விவசாயிகளும், ராஜ்ய சுய ஆட்சியும் ஸ்தல சுய ஆட்சியும் பறி போய்விடும் எனப் பயந்து அரசியலமைப்பை எதிர்த்தனர். ஜனத்தொகையில் சொத்துரிமையுள்ளவர்களான ஒரு சிறு தொகையினருக்கு மட்டும், ஓட்டுரிமை இருந்ததால் அரசியலமைப்பு சிறிதளவு அதிகப்படி ஓட்டுகளால் தான் அங்கீகரிக்கப்பட்டது.

ஜார்ஜ் வாஷிங்டனுக்கிருந்த பொதுஜன செல்வாக்கினுலும், அரசியல் அமைப்பு அங்கீகாரத்தின் விளைவால் வர்த்தகம் பெருகி, சுபிட்சம் ஏற்பட்டதினுலும் வாஷிங்டன் இரண்டாம் முறை ஜனாதிபதி பதவி வகிக்கும் வரையில் எதிர்க்கட்சி அமைப்பது துர்லபமாக இருந்தது. வாஷிங்டனுக்குப் பிறகு யார் ஜனாதிபதியாய் இருக்கவேண்டும் என்பதுபற்றி மக்களிடம் அபிப்ராய பேதம் எழுந்ததனுல் அந்தந்த அபேட்சரை ஆதரிக்கும் நோக்குடன் கட்சிகள் தோன்றலாயின. ஒரு பக்கம் சமஷ்டி ஆதரிப்பாளர்கள் இருந்தனர். இவர்கள் பணம் படைத்தவர்கள், வர்த்தகர்கள், நகரங்களிலுள்ள மத்திய தர வகுப்பினரின் பிரதிநிதிகள். இவர்களுக்கு வடகிழக்கு ராஜ்யங்களில் மிகுந்த செல்வாக்கிருந்தது. மற்ருெரு புறம் தாமஸ் ஜெபர்ஸன் தலைமையில் "குடியரசினர்" அணிவகுத்து நின்றனர். இவர்கள், வர்ஜீனியா பிரமுகர்களிலிருந்து டென்னஸி ஆதிவாசிகள் வரை பெரிதும் கிராம வாசிகள், நகரிலுள்ள கூலிக்கு உழைப்பவர்களின் பிரதிநிதிகள்.

இம்மாதிரி போட்டிக் கட்சிகள் தோன்றுவதைக் கண்டு வாஷிங்டன் மனம் நொந்து போனுர். ஆனுல் அவர் பேச்சு எடுபடவில்லை. ஏனெனில் சுதந்திர ஆர்வமுள்ள, மக்கள் தங்களிடையே இயல்பாக எழும் பிரச்னைகளுக்குத் தாங்களே முடிவு காண வேண்டும்.

இவ்வாருக ஒரே கட்சி அடிப்படையில் அமைந்த அமெரிக்கப் புரட்சி அரசாங்கம், பிளவுபட்டு இரண்டு கட்சி முறைக்கு மாறிற்று.

1796-ல் சமஷ்டிக் கட்சியினர் வெற்றி பெற்றனர். ஜான் ஆடெம்ஸை ஜனுதிபதியாகத் தேர்ந்தெடுத்தனர். 1800-ல் ஜனுதிபதி உபஜனுதிபதி பதவிகளுக்குத் தத்தம் அபேட்சகர் யார் என்பதை திட்டமாக வகுத்துக்கொண்டு இரு கட்சிகளாகப் பிரிந்து நின்றன. குடியரசுக் கட்சியினர் வெற்றி பெற்று தாமஸ் ஜெபர்ஸனுக்கும், ஆரோன்பர் என்பவருக்கும் ஓட்டுச் செய்தனர். ஆனுல் இவ்விருவருக்கும் சம ஓட்டுக்கள் கிடைத்தன. அரசியல் அமைப்பில் வகுக்கப்பட்ட முறைப்படி சபை ஜெபர்ஸனைத் தேர்ந்தெடுத்தது. ஆனுல் 35 தடவை ஓட்டெடுக்கப்பட்ட பின்தான் ஜெபர்ஸன் வெற்றி பெற்ருர். தோற்கும் கட்சி சூழ்ச்சி செய்து வெற்றி பெற்ற கட்சியின் எண்ணம் ஈடேருமல் ஓட்டுகளைத் தந்திரமாகக் கையாளலாமாகையால் இத்தனை தடவை ஓட்டெடுத்து முடிவுகாண வேண்டியிருந்தது.

இம்மாதிரி அசட்டுத்தனமான முறையைத் தவிர்ப்பதற்காக அரசியலமைப்பில் 12-வது திருத்தம் செய்யப்பட்டது. இந்தத் திருத்தத்தின்படி ஓட்டர்கள், ஜனுதிபதி, உபஜனுதிபதி பதவிகளுக்குத் தனித்தனியே ஓட்டுச் செய்கிருர்கள். சமஷ்டி காணும் முறை நீக்கப்பட்டது. ஆனுல் எலக்டரல் காலேஜ் அமைத்ததின் நோக்கத்தை இந்தத் திருத்தம் பாழ்படுத்தி விட்டது. இதன் மூலம் அரசியல் கட்சிகள் உண்டு என்றும், கட்சிகளின் முடிவை அங்கீகரிக்கும் தலையாட்டித் தம்பிரான்களே (ரப்பர் ஸ்டாம்புகளே) ஓட்டர்கள் என்றும் ஏற்பட்டுவிட்டது.

தற்காலத்திய ஜனநாயக் கட்சியின் மூதாதையர் எனக் கருதப்பட்ட ஜெபர்ஸன் கட்சி ஏன் ஆதியில் குடியரசுக் கட்சி என்று அழைக்கப்பட்டது என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் ஆராய்வது நலம்.

1800-ல் ஜெபர்ஸன் கட்சியினர் தங்களுக்குக் குடியரசுக் கட்சியினர் என்று பெயர் சூட்டிக்கொண்டார்கள். அதற்குக் காரணம் மன்னர்கள் ஆட்சியை அவர்கள் விரும்பாததுதான்.

அமெரிக்கப் புரட்சியைப் பின்பற்றி நடந்ததால், அவர்கள் பிரஞ்சுப் புரட்சியை ஆதரித்தனர். சமஷ்டியை ஆதரித்தவர்கள், பிரஞ்சுப் புரட்சியில், நடந்த குத்து, கொலை, தூக்குமேடை முறை முதலியவற்றை வெறுத்தனர். பிரஞ்சு மன்னரிடம் அவர்கள் மிகுதியான அனுதாபம் காட்டினார்கள். ஜெபர்ஸன் கட்சியினரை "ஜனநாயக வாதிகள்" என்றும் பிரஞ்சுப் புரட்சியை ஆர்வத்துடன் ஆதரிப்பவர்கள் குற்றம் சாட்டினர். அக்காலத்தில் ஜனநாயகம் என்றால் தெருக் கூட்டத்தின் ஆட்சி என்று கருதப்பட்டது. இன்று நாம் தீவிர வாதத்தை எப்படி ஏளனம் செய்கிறோமோ, அம்மாதிரியே "ஜனநாயகம்" எனும் பதம் அக்காலத்தில் கேலி செய்யப்பட்டது. பின்னர் நெப்போலியன் புகழ் பெற்று மறைந்த பிறகு, அப்பதத்தின் தீவிரத் தன்மை மங்கி விட்டது. ஆனால் பிராங்களின் ரூஸ்வெல்ட் தன்னைத் தீவிர வாதியென எப்படிக் கருதிக் கொள்ளமாட்டாரோ, அம்மாதிரியே ஜெபர்ஸனும், தான் ஜனாதிபதியாக வந்ததும் தன்னை "ஜனநாயக" வாதி என அழைத்துக்கொள்ள விரும்பவில்லை.

அவர்கள் அமைத்த சமஷ்டி அரசாங்கம் வெற்றிகரமாக நடந்ததின் விளைவாக சமஷ்டி கட்சினரின் கட்டுக்கோப்பு சிதைந்துவிட்டது. சமஷ்டி யூனியன் வேரூன்றி விட்டதும் நாடு துரிதமாக முன்னேறியது. மக்கள் ஏராளமாக ஓஹியோவிலும், டென்னெஸியிலும் குடியேறினார்கள். இதன் விளைவாக, பின் தங்கிய பகுதிகள் வடகிழக்கு நகரங்களைவிட அதிக ஓட்டர்கள் உள்ள பகுதிகளாக மாறிவிட்டன.

ஜெபர்ஸன் 1801-ல் பதவிக்கு வந்ததும் அமெரிக்க நாடு விரிவடைதற்கான சேவை செய்தார் பலம் வாய்ந்த சமஷ்டி அரசாங்கம் அமைவதற்கு அவர் காட்டிய எதிர்ப்பை ஓரளவு கைவிட்டார். மிஸ்ஸிஸிபி நதிக்கு மேற்கேயுள்ள, மிஸ்ஸிஸிபி பள்ளத்தாக்கு அடங்கிய லூயிஸியானாவைச் சேர்த்துக்கொண்டார்.

சமஷ்டிக் கட்சியினரால் இவருடன் போட்டியிட முடியவில்லை. அவர்கள் கட்சி மடிந்துவிட்டது. 1800-ம் வருஷத்திய

தேர்தலுக்கு அவர்கள் அபேட்சகரே நியமனம் செய்யவில்லை. மீண்டும் ஒரே கட்சி ஆதிக்கம் தொடங்கியது. சில வருஷங் களுக்கு எதிர்க்கட்சியே இல்லாததால் இக்காலத்தை நல்லெண் ணம் நிலவிய காலம் எனக் கருதப்பட்டது. குடியரசுக் கட்சியின ரிடையே பிளவு ஏற்பட்டது. மீண்டும் இரு கட்சிகள் தோன் றின. குடியரசுக் கட்சியினர் ஒரு கோஷ்டிகளாகப் பிரிந்தனர். ஒரு பகுதிக்கு ஜான் குவின்ஸி ஆடம்ஸ் தலைவர். இவர்களுக்கு தேசீயக் குடியரசுக் கட்சியினர் என்ற பெயர் வழங்கியது. இவர்கள் மற்றப் பிரிவினரைவிட பிற்போக்காளர்கள். 1824-ல் ஆடம்ஸ் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1828-ல் இவர்களில் மற்றப் பகுதியினர் ஜனநாயகக் குடியரசினர் எனும் பெயர் பூண்டு ஆண்ட்ரூ ஜாக்ஸனை ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுத்தனர்.

தேசீயக் குடியரசுக் கட்சியினர் 1832-ல் "விக்"குகளாக மாறினார்கள். இந்தப் போலி "விக்"குகளுக்கும், புரட்சி "விக்" குகளுக்கும், அல்லது "தேசாபிமானிகளுக்கும்", அல்லது இங்கிலாந்திலுள்ள "விக்"குகளுக்கும், எவ்வித சம்பந்தமும் கிடையாது. இவர்கள் பிற்போக்காளர்கள். ஓட்டு சேகரிப் பதற்கு, எந்தப்பெயர் சூட்டிக் கொண்டால், கவர்ச்சிகரமா யிருக்கும் என்றே கவலைப்பட்டார்கள். இந்தக் காலத்தில் சமஷ்டி தேசீயக் குடியரசு "விக்" கட்சியின் வெற்றி காணாத தற்குக் காரணம், எல்லைப் புறத்தில் புதிதாகத் தோன்றிய ராஜ்யங்கள் பெரிதும் ஜாக்ஸன் ரக அரசியலை விரும்பியது தான். ஆனாலும் "விக்"குகள் இரண்டு ராணுவ வீரர்களைத் தேர்ந்தெடுப்பதில் வெற்றி பெற்றார்கள்—1840-ல் வில்லியம் ஹென்றி ஹாரிஸனையும், 1848-ல் ஜகாரி டெய்லரையும்.

1850-ம் வருஷ காலத்தில் அடிமைப்பிரச்னை அதி மும்மர மாய் இருந்தது. "விக்"குகளுக்கும் ஜனநாயகவாதிகள் எனும் பெயர் பூண்ட ஜனநாயகக் குடியரசுக் கட்சியினருக்கும், அடி மைத்தனம் பற்றி பலத்த அபிப்ராயபேதம் ஏற்பட்டது. வடக் கத்திய ஜனநாயக வாதிகளும், தெற்கத்திய ஜனநாயக வாதி களும், எதிரும் புதிருமாய், நின்றார்கள். "விக்" கட்சி சிதறுண் டது. குடியரசுக்கட்சி எனும் பெயர் பூண்டு, அடிமைத்தன எதிர்ப்பு அடிப்படையில் ஒரு கட்சி தோன்றிற்று. இந்தக்கட்சி

அப்ரஹாம் லிங்கனை அபேட்சகராக நியமித்து, 1860-ல் அவரை ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுத்தது.

வாஷிங்டன் எச்சரித்தபடியே 1860-ல் பிராந்திய வித்தியாச அடிப்படையில் தோன்றிய இரு கட்சிகளும், உணர்ச்சிமேலிட்டு இயங்கியதால், நிலைமை அபாயமாயிருந்தது. அடிமைத்தனம் காரணமாக, உணர்ச்சி வேகம் உந்தியது ஒருபுற மிக்க, அதிக வரி செலுத்திய வடகிழக்கு வர்த்தக நலனுக்கும், குறைந்த வரி செலுத்தும் தெற்கத்திய பருத்தி வியாபார நலனுக்கும் அபிப்ராய பேதம், கடுமையாயிருந்தது. ஆனால் இந்தப் போராட்டங்களும் கட்சிகளும் நாட்டு அமைப்பு மாறுபாட்டு அடிப்படையிலேயே தோன்றின. ஆகையால் இரு கட்சியினரும் உள்நாட்டுச் சண்டை தொடங்குவது சாத்தியமாயிருந்தது. லிங்கன் தேர்ந்தெடுக்கப்பட்டதும் உள்நாட்டுச் சண்டை தொடங்கியது.

இந்தச் சண்டைக்குப் பிறகு அமெரிக்கர் இந்த முறையில் மாறுபட்டு நிற்கவில்லை. தொழிலாளர் சம்பந்தமான சட்டங்கள், சர்க்கார் செலவினங்கள், சமூகத் பாதுகாப்பு, ஏகபோக வியாபார அமைப்புக்கு எதிர்ப்பு போன்ற பிரச்னைகள் சம்பந்தமாக எழும் விவாதங்கள் மறைந்துபோகும் அளவுக்கு அடிமைத்தனம் சம்பந்தமான சச்சரவு கடுமையாக வில்லை. முக்கியமாக பணக்காரன் ஏழை, நகர மக்கள், விவசாயிகளுக்குள் ஏற்படும் தகராறுகள், வடக்கு, தெற்கு, வடகிழக்கு, மேற்குப் பகுதிகள் எனும் அடிப்படையில் ஏற்படும் தகராறுகளைவிட கடுமையாயிருந்தன. உள்நாட்டுச் சண்டைக் கேற்ற சூழ்நிலை பின்னர் ஏற்பட வில்லை.

புரட்சி ஏற்படுவதைத் தவிர்ப்பதற்கான முறையில் அமெரிக்கா அமைந்திருக்கிறது. ருஷ்யாவில் கெரன்ஸ்கி புரட்சி, ஜெர்மனியிலும், இத்தாலியிலும், முறையே ஹிட்லர், முஸோலினி ஏற்படுத்திய புரட்சிமாதிரி, அமெரிக்காவில் ஏற்படத்தக்க சூழ்நிலை 1775-க்குப் பிறகு வளரவில்லை. பொதுஜனக் குழப்பத்திற்கான உற்சாகம், அமெரிக்கா பிரம்மாண்டமாயிருப்பதனால் தடைப்படுகிறது. பலாத்கார குழப்பங்கள், சிறு பகுதிகளிலேயே ஏற்பட்டிருக்கின்றன. முஸோலினி இதாலியில் படையெடுத்துச்

சென்று ஆட்சியைக் கைப்பற்றிய மாதிரி, அமெரிக்காவில் வாஷிங்டனுக்குப் படையெடுத்துச் சென்று அரசாங்கத்தைக் கவிழ்த்து விடமுடியும் என்று கற்பனை கூடச் செய்ய முடியாது.

தற்போதுள்ள ஜனநாயக, குடியரசுக் கட்சிகள் தோன்றிய முறைக்கு, இந்தச் சுபசந்தர்ப்பங்கள், விளக்கம் தருகின்றன. ஒரு நூற்றாண்டு இரு கட்சி முறையின் பல்வேறு வழிகளை, ஆய்ந்தோய்ந்து பார்த்தபிறகு, அமெரிக்க மக்கள், ஒரு நல்ல முறையைக் கண்டு பிடித்தார்கள். இதில் பல்வேறு அரசியல் தகராறுகள் நிகழ்வதற்கு இடமிருந்தாலும் அவைகளால், உள் நாட்டுச் சண்டையோ, புரட்சியோ நிகழாமல் பாதுகாக்கிறது

இன்று நாம் அமெரிக்காவில் காணும் இரு அரசியல் கட்சி முறை, திட்டம் செய்து உருவாக்கப் படுத்தப்பட்டதல்ல ; பெரிதும் மக்களின் உள்ளுணர்வால் உருப்பெற்றது. இதன் மூலம் இரு கட்சிகளில் வெற்றி பெற்றவர்கள், பெரும்பான்மை பலத்தினால் ஆட்சி புரிகிறார்கள். ஜனாதிபதி, ஸெனட், பிரதிநிதிகள் சபை எல்லாம் அநேகமாக ஒரே கட்சியின் ஆதிக்கத்தில் நடக்கின்றன தோல்வியுற்ற சிறுபான்மைக் கட்சினர் மீண்டும் ஆட்சிப்பொறுப்பு வகிக்கமாட்டோம் என்று நம்பிக்கை இழக்கும் அளவுக்குத் தோல்வியுறுவதில்லை.

இந்த முறை, பல கட்சிகள் இயங்கும் முறைக்கும், பிரிட்டனில் நிலவும் இரு கட்சி முறைக்கும் மாறுபட்டது. அமெரிக்க முறையின் காரண காரியங்கள் ஐரோப்பியர்களுக்கும்,ஆங்கிலேயருக்கும் புரியாது.

ஐரோப்பிய ஜனநாயகத்திற்கு எடுத்துக்காட்டாக உள்ள இடத்தில் பல திட்டமான கொள்கைகளில் ஒவ்வொரு கட்சிக்கும் நம்பிக்கை உண்டு. ஒரு கட்சி கிறிஸ்தவ சோஷலிஸ்டாயிருக்கலாம். மற்றொரு கட்சி, பழமையில் பற்றுக்கொண்ட கத்தோலிக்கர்களடங்கியதா யிருக்கலாம். சரித்திரத்தின் விசித்திர விளையாட்டினால் தீவிர சோஷலிஸ்டுகள் அடங்கிய ஒரு கட்சி மத்திய வகுப்பினரின் வியாபார நலனில் அக்கறையுள்ளதாயிருக்கலாம். மிகுந்த கட்டுப்பாடுள்ள கம்யூனிஸ்டுகள் எங்கு மிருக்கின்றனர். அவர்கள் முன்யோசனையில்லாத அதி

சுதந்தரவாதிகளுடன் சேர்ந்து கொண்டு அவர்களை முன் நிறுத்தி தங்கள் காரியத்தைச் சாதித்துக்கொள்வார்கள்.

பல கட்சி முறையின் சித்தாந்தம் யாதெனில், தங்கள் கொள்கையைக் கைவிடாமல் அதற்கு உதவியாயுள்ளவர்களைச் சேர்த்துக் கொண்டு தங்கள் நோக்கத்தை நிறைவேற்றிக்கொள் வது. தற்கால வாழ்க்கை சிக்கல் நிறைந்ததாயிருப்பதாலும் பல்வேறு அரசியல், பொருளாதார, சமயக் கொள்கைகள் நிலவி வருவதாலும், ஒவ்வொன்றையும் ஆதரிக்கும் சிறு கூட்டங்கள், நிரம்ப இருக்கலாம்; அப்படியே இருக்கவும் செய்கின்றன.

பார்லிமெண்டரி முறையில் நடக்கும் ஜனநாயக அரசாங் கம் நிலைக்க வேண்டுமானால், பார்லிமென்டில் அதற்குப் பெரும் பான்மை ஆதரவு இருக்கவேண்டும். எந்தச் சமயத்தில் பிரதம மந்திரியும், மந்திரி சபையும் கொண்டுவரும் முக்கிய மசோதா நிறைவேற வில்லையோ, அப்பொழுது அரசாங்கம் விழுந்து விடும். இந்தச் சந்தர்ப்பங்களில், பிரதமரும், மந்திரி சபையும் ராஜீநாமா செய்ய வேண்டும்; அல்லது அரசியமைப்பு இடங் கொடுக்குமானால், பார்லிமென்டைக் கலைத்துவிட்டு மாறு தேர் தல் நடத்தவேண்டும்.

ஆகையால் ஐரோப்பிய ஜனநாயக நாடுகள், அரசாங்கம் அமைக்கவேண்டுமானால் பெரும்பான்மை பலம் பெறுமளவுக்கு பல கட்சிகள் ஒன்று சேரவேண்டும். ஒவ்வொரு கட்சியும் தன்னிடம்தான் கலப்படமில்லாத பால் கிடைக்கும் என்று கூறும். ஆனால் பார்லிமென்டரி ஜனநாயகத்தைக் கைவிட்டு, சர்வாதிகாரத்தை ஸ்தாபித்தாலொழிய, எந்தக் கட்சியும் தனித்து நின்று தன் கொள்கையை நிலைநாட்ட முடியாது. ஒரு ஜனநாயக அரசாங்கம் அமைப்பதில் பங்குகொள்ள ஒவ்வொரு கட்சியும் தன்னிடமுள்ள சுத்தமான பாலுடன், மற்ற இரண்டு அல்லது மூன்று கட்சிகளின் அழுக்கு ஜலத்தையும் கலந்து, பால் வழங்கத் தயாராயிருக்கவேண்டும். ஆகையால் பல கட்சி கள் ஒன்றுபட்டு சில காலம் ஆட்சி நடத்தி, பின்பு பிரிந்து போவது இயல்பாகி விடுகிறது.

அமெரிக்க நோக்கிலிருந்து இந்த நிலை மனச்சோர்வளிக்கத் தக்கது ஏனெனில் நிதானப் போக்குள்ள மத்தியதரக் கட்சி கள் சேர்ந்த்தால்தான் நாட்டின் சுதந்திரத்தைக் காக்கமுடியும்.

அரசியலில் பாஸிஸ்டுகள் வலதுசாரியிலிருப்பவர்கள் என்று கூறுவதுண்டு. அவர்கள் எப்பொழுதும், உள்ள அர சாங்கத்தைக் கவிழ்த்து முஸோலினி அல்லது ஹிட்லர்போன்ற வர்கள் அதிகாரத்திற்குவர இடமளிப்பார்கள். இடதுசாரியில் கம்யூனிஸ்ட்கள் இருந்துகொண்டு ஸெக்கோஸ்லாவேகியாவில் செய்ததுபோல் அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொள்வார்கள். இந்த நிலையிலிருந்து பார்த்தால் ஜனநாயக ஆதரவாளர்கள் நடுவிலிருந்துகொண்டு சிலர் வலதுசாரிகளுடனும், மற்றும் சிலர் இடதுசாரிகளுடனும் இணைவார்கள்.

இம்மாதிரி நிலை திருப்திகரமாயிருக்க முடியாது. ஏனெனில் சுதந்திர ஆர்வமுள்ள கட்சிகளை சர்வாதிகார நோக்குள்ளவர் கள் தாங்கள் இழுத்த இழுப்புக்கு வரும்படி சேர்க்க முயற்சி செய்வார்கள். உதாரணமாக பாஸிஸ்டுகள் அல்லது நவீன நாஜிகள் எல்லா வலதுசாரிகளின் உள்ளமும் ஒரே மாதிரி இயங்குகிறது என்று கூறி சில பிற்போக்காளர்களைத் தங்களு டன் சேர்த்துக் கொள்ளலாம். தாராள நோக்குள்ளவர்களை ஏமாற்றித் தங்களுடன் சேர்த்துக்கொண்டு ஐக்கிய முன்னணி அமைப்பதில் கம்யூனிஸ்ட்கள் வெற்றிபெற்றதை நாம் கண் கூடாகப் பார்த்திருக்கிறோம். இந்தச் சூழ்ச்சிகள் பலித்தால், அரசியல் பாக்குவெட்டியில் அகப்பட்டுக்கொண்டதைப் போல் ஆகிவிடும். ஓட்டர்கள் பாஸிஸ்ட் சர்வாதிகாரம் அல்லது கம்யூனிஸ்ட் சர்வாதிகாரம், இரண்டில் ஒன்றிற்கு ஓட்டு செய் யும் நிலை ஏற்பட்டுவிடும். இருவிதமான தற்கொலைகளில் ஒன் றுக்கு ஓட்டு செய்யவேண்டிய நிலை ஏற்படாமல் தவிர்க்கவேண் டும். ஒன்று பேய்க்கு வாழ்க்கைப்பட வேண்டும். அல்லது சமுத்திரத்தில் விழுந்து சாகவேண்டும் என்பது விரும்பத்தக்க தல்ல.

இதைவிட ஜனநாயக ஸ்தாபனங்களும் கட்சிகளும் ஒரு புறமும், சர்வாதிகாரக் கும்பல்கள் மற்றொருபுறமும் இருப்பது தான் சிறந்தது. பாஸிஸ்டுகள் அல்லது தீவிர முற்போக்காளர்

களும், முறையே சர்வாதிகார அல்லது போலீஸ் ஆட்சியையே அமைக்க விரும்புகின்றனர். இரு ரகஸ்ய கொள்ளைக் கூட்டத்தினர் அக்கிரமக் கொள்ளையை யார் நடத்துவது என்பதைப் பற்றி போட்டியிடுவதுபோல் இருக்கிறது. இந்த சர்வாதிகாரப் போராட்டம், 1939-ல் ஹிட்லரும் ஸ்டாலினும் ஒன்று சேர்ந்த மாதிரி சில சமயம் இந்த நாசக் கட்சிகள் ஒன்று சேரலாம். அரசாங்கத்தைக் கவிழ்க்கக்கூடிய அளவுக்கு ஒரு பார்லிமென்டில் பாஸிஸ்டுகளுக்கும் கம்யூனிஸ்ட்களுக்கும் ஸ்தானங்கள் இருந்தால் அவர்கள் அடிக்கடி ஒன்றுகூடி ஓட்டுச் செய்து அரசாங்கத்தைக் கவிழ்க்கப் பார்த்திருக்கிறார்கள்.

ஜனநாயக எதிர்ப்புக் கட்சிகள் தங்கள் கொள்கை லாபகரமாக நடப்பதற்கேற்ப கூடுவிட்டுக் கூடுபாய்வார்கள். உதாரணமாக, கிழக்கு ஜெர்மனியார்கள் மாஜி நாஜிகளை குறிப்பாக ராணுவத்திற்கு பயன்படுத்திக் கொள்கின்றனர்.

பல கட்சிகள் இருப்பதில் அமெரிக்கர் காணும் அபாயம், நாட்டின் சுதந்திரத்திற்கு ஒவ்வொரு தேர்தலிலும், ஜனநாயக மனப்பாங்குள்ள நடுத்தரக் கட்சிகளை நம்பி இருக்கவேண்டியிருக்கிறது என்பதுதான். அதாவது ஒவ்வொரு தேர்தலும், சுதந்திரத்திற்கும், நாசத்திற்கும் போட்டியாக முடிகிறது. தகிக்கும் சட்டியிலிருந்து தப்பி தீயில் குதிக்க வேண்டியது போலாகிவிடுகிறது. இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பிறகு பல ஐரோப்பிய நாடுகள் இம்மாதிரி இப்பந்தி நிலையிலிருந்திருக்கின்றன. ஒரு அரசாங்கம் தங்களுக்குப் பிடித்தாலும், பிடிக்காவிட்டாலும், அதைத் கட்டிக்கொண்டே அழவேண்டியிருக்கிறது. அப்படி கட்டியழத் தவறினால், கிழக்கு ஐரோப்பிய நாட்டு மக்கள் தகித்துக் கொண்டிருக்கும் சர்வாதிகாரக் காட்டுத் தீயில் வெந்து தீய வேண்டியதுதான்.

அமெரிக்க முறையில் குறைபாடு இருந்தாலும் அதில் ஒரு நல்ல அம்சம் இருக்கிறது. ஒரு சுதந்திர அரசாங்கத்தை நடத்துவதற்கான, இரு திட்டங்களில் ஒன்றை ஓட்டர்கள் ஆதரிக்கலாம். சுபிட்சத்தை நிலைக்கச் செய்வதில், தேசீய பாதுகாப்பை அமைப்பதில், வீண் செலவைத் தவிர்ப்பதில், ஊழலை ஒழிப்பதில், ஒரு கட்சியைவிட மற்ற கட்சி சிறந்-

தது என மக்கள் நினைக்கலாம். தாங்கள் எதிர்க்கும் கட்சி ஜெயித்தால்கூட, அது அமெரிக்காவைப் போற்றி, ஜனநாய கத்தை வளர்க்கும் என—தேர்தல் உஷ்ணம் நிலவும் காலம் தவிர—மக்கள் நம்புகிறார்கள். தப்பித்தவறி கம்யூனிஸ்ட் பைத்தியம் பிடித்து ஆட்சியைக் கவிழ்த்தால்கூட இந்நாட்டை சோவியத் ரஷ்யாவுக்குக் காட்டிக்கொடுக்க எண்ணும் தற் கொலைக் கட்சி இந் நாட்டில் இல்லை.

சுதந்திரமாக அரசாங்கம் அமைத்துக்கொள்ளும் உரிமைக் கேற்ற விலை அமெரிக்கர்கள் கொடுக்கவேண்டும். அந்த விலை யாதெனில், இரண்டு அரசியல் கட்சிகளும், அந்த உரிமையை அனுபவிக்கத்தக்க தலைவர்களையும், அவர்களைப் பின்பற்றும் மக்களையும் அமெரிக்க அரசாங்கத்தைச் சீராக நடத்துவதற் கான கொள்கைகளையும் உடையவர்களாக இருக்கவேண்டும். அரசாங்கம் கைக்கொண்டு காப்பாற்ற வேண்டும் என ஜனங்கள் விரும்பும் தேர்ந்த நற்கொள்கைகளை ஜெயிக்கும் கட்சி ஏற்றுக் கொள்ள வேண்டும்.

அமெரிக்காவில் உள்ள இருகட்சி முறைப்படி பெருவாரி மான ஓட்டர்கள் விரும்பும் எல்லாக் கொள்கைகளையும், இரு கட்சிகளும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதை ஒப்புக்கொண் டால், அவைகளுக்குள் விஷே ஒருமைப்பாடு இருப்பது புத்தி சாலித்தனமானது. அவசியம்கூட என்பது புலனாகும். தாங்கள் அரசாங்கம் அமைத்தால் அது எப்படிப் பணிபுரியும் என்பதைத் தேர்தலுக்கு முன்பு ஒவ்வொரு கட்சியும் அறிவிக்க முயற்சிப்ப தால், மக்களுடைய முக்கியமான தேவைகள் யாவை என்பதை யும் அவைகள் வெளியிட வேண்டும். குடியரசுக் கட்சி, ஜன நாயகக் கட்சி, இரண்டின் திட்டங்களும் அநேகமாக ஒன்று தான். அபேட்சகர்கள் மட்டும்தான் வெவ்வேறு என்று அமெ ரிக்க ஓட்டர்கள் நினைப்பதில் தவறில்லை. கட்சி என்பது தேர் தலில் ஜெயிப்பதற்கும், அரசாங்கத்தைக் கைப்பற்றுவதற்கும் ஆனஸ்தாபனமே ஒழிய, ஒரு லட்சியத்திற்குப் பதிலாக மற்றொரு லட்சியத்தை நடைமுறைக்குக் கொண்டு வருவதற்கல்ல,

கட்சிகள் ஒரே மாதிரி, கொள்கைகள் திட்டங்கள் உள் ளவை. ஆனால் வெவ்வேறு அபேட்சகர்களை நிறுத்துகின்றன,

என்பது 100-க்கு 100 உண்மை என்று நினைத்து விடலா காது.

அயல் நாட்டிலிருந்து இங்கு வருபவர்களுக்கோ, இரு கட்சி முறையில் ஊறிப் பழகிய ஆங்கிலேயருக்கோ குடியரசுக் கட்சிக்கும், ஜனநாயகக் கட்சிக்கும் என்ன வித்தியாசம் என் பதை ஒரு அமெரிக்கன் விளக்கிக் கூறுவது கடினம். தேர்தல் பிரசாரம் ஒருபுறமிருக்க, இரு கட்சிகளுக்குள்ளும் கொஞ்சம் வித்தியாசம் இருக்கிறது. ஒவ்வொரு கட்சியிலும், எந்த அள வுக்கு பிற்போக்காளர்கள் தாராள நோக்குள்ளவர்கள் உள்ள னர் என்பதிலும் நாட்டின் எந்தப் பகுதியில் அவற்றின் செல் வாக்கு அதிகம் என்பதிலும் வித்தியாசம் இருக்கிறது. சிறு பான்மைக் கட்சி, அதிகாரம் வகிக்கும் கட்சியைவிட வரவு செலவு திட்டத்தில், திட்டமான குறைவு செய்ய அதிக ஆர்வ முள்ளவர்களா யிருப்பார்கள். மேலும் சிறுபான்மையினர் ராஜ் யங்களுக்கு அதிக உரிமைகள் வழங்க வேண்டும் என்றும் கோருவர். ஸ்தல, வகுப்பு நலன்களில், ஒரு கட்சியை விட மற்ற கட்சி அதிக ஆர்வம் காட்டலாம்.

பழைய சமஷ்டி கட்சிக்கும், ஜெபர்ஸன் கட்சிக்கு முள்ள வித்தியாசங்களின் சின்னம் இன்றும் தென்படுகிறது. சில குடியரசுக் கட்சியினர் வர்த்தக நலன்களில் அதிக அக்கறை கொண்டவர்கள். இரு கட்சியிலும் இந்தக் கோட்பாட்டுக்கு விலக்கானவர்கள் நிரம்ப இருக்கின்றனர். நடைமுறையில் பார்த்தால் அயல் நாட்டு அல்லது உள்நாட்டு விவகாரங்கள் சம்பந்தமான மசோதாக்கள் பற்றி சமஷ்டி சட்டசபைகளில் இரு கட்சிகளிலும் மாறுபட்ட கருத்துள்ளவர்கள் இருப்பதைப் பார்க்கலாம். ஆனால் ஒரு விஷயத்தில் ஒரு கருத்தை ஆதரித் தவர்கள் மற்றொரு விஷயத்தில் அம்மாதிரியே ஓட்டுச் செய்வர் என்று சொல்வதற்கில்லை.

அபேட்சகர் யாராயிருந்தாலும் சரி, இரு கட்சிகளின் கொள்கை, திட்டம் யாதாயிருந்தாலும் சரி, குறிப்பிட்ட ஓட் டர்கள் குடியரசுக் கட்சிக்குத்தான் ஓட்டுச் செய்வர் அல்லது ஜனநாயகக் கட்சிக்குத்தான் ஓட்டுச் செய்வர் என்று சொல்லக் கூடியவர்கள் எந்தக் கட்சியிலும் பெரும்பான்மையில்லை.

அமெரிக்கர் அறிந்துள்ள இருகட்சி அமைப்பில் இதுவும் ஒரு அவசியமான லட்சணம். குறிப்பிட்ட ஒரு கட்சிதான் நிச்சயமாக ஜெயிக்கும் எனும் நிலை ஏற்பட்டால் ஓட்டர்கள் ஒரே கட்சியின் ஆட்சியில்தான் அகப்பட்டு உழலவேண்டி வரும். 1824-ல் ஜனநாயகக் குடியரசினர் பிரிந்த மாதிரி ஒரு கட்சி பின்னர் இரண்டாகப் பிரிய வேண்டி வரும். இரண்டு கட்சி முறை ஒழுங்காக நடந்து வந்தால் தேர்தல்கள் முடிவு சுயேச்சையாயுள்ள மத்திய கோஷ்டியினரால்தான் முடிவாகும். (இரு கட்சிகளின் வாக்குறுதிகளை நன்கு ஆராய்ந்து கடைசியில் யாருக்கு ஓட்டுச் செய்வது என்று முடிவு செய்பவர்கள் தான் மத்திய கட்சியினர்) ஒவ்வொரு தேர்தலிலும், இந்த சுயேச்சையாளர்கள் இருகட்சிகளுக்குள் அச்சமயத்தில் எது பற்றி அபிப்பிராயபேதம் ஏற்படுகிறதோ அதை ஏற்று தங்கள் ஓட்டை அளிப்பார்கள். குடியரசுக் கட்சியினர், ஜனநாயகக் கட்சியினரை விடப் பிற்போக்காளர்கள் என வாக்காளர்கள் கருதுவது வழக்கம். சுபிட்சம், ஊழல், அமைதி பற்றி இரு கட்சிகளின் கருத்து என்ன என்பதை அறிந்து ஓட்டுச்செய்வதுமுண்டு. ஜனாதிபதி பதவிக்கு போட்டி போடுபவர்களின் சிறப்பை அடிப்படையாகக் கொண்டே பெரிதும் ஓட்டுச் செய்வார்கள்.

அமெரிக்காவில் சில ராஜ்யங்கள் தீர்மானமாக ஜனநாயகக் கட்சியையும், மற்றும் சில ராஜ்யங்கள் தீர்மானமாகக் குடியரசுக் கட்சியையும் ஆதரிப்பது ஜனநாயக முறையின் குறைபாடு, என்று கருதப்படுகிறது. சக்தி வாய்ந்த கட்சியின் அபேட்சகர்களில் சிறந்தவர்களை கட்சிக் கூட்டத்தில் நடக்கும் முதல் தேர்தலில் இக்கட்சிகள் தங்கள் பலத்தை காட்டலா மாயினும், சமஷ்டி தேர்தலில் இவர்களுடைய ஓட்டு பலம் பலிக்காது. தேசீயத் தேர்தலில் பலம் வாய்ந்த ஒரு கட்சி தன்னிஷ்டப்படி முடிவுகட்ட முடியாது என்பதுதான் நாட்டின் ஜனநாயகத்தைக் காப்பாற்றுகிறது. யார் அபேட்சகர்கள், எந்தப் பிரச்னைகளின் அடிப்படையில் தேர்தல் போட்டி நடக்கிறது. என்பதை லட்சியம் செய்யாமல் ஜாதிவெறி, மதவெறியின் தூண்டுதலால் ஓட்டுச் செய்யும் கும்பல்கள் அதிர்ஷ்டவசமாக

அமெரிக்காவில் இல்லே. அமெரிக்க மக்கள் அறிந்த மட்டில் ஜனநாயகம் தழைத்தோங்குவதற்கு, அபேட்சகர்கள், பிரச்னே கள் யாவற்றையும் ஆராய்ந்து அறிந்து சுதந்திரமாக ஓட்டுச் செய்பவர்கள் இருக்க வேண்டும்.

அமெரிக்க முறைக்குச் சிறிது மாறுபட்ட இரு கட்சி முறை பிரிட்டனில் இருக்கிறது. அமெரிக்காவில் ஜனநாயக, குடியர சுக் கட்சிகளுள் இருப்பதை விட, பிரிட்டிஷ் கன்ஸர்வேடிவ், தொழில் கட்சிகளுக்குள் கொள்கைகளிலும் அரசு முறைகளி லும் அதிக வித்தியாச மிருப்பதாக பிரிடிஷார் நம்புகின்றனர். இது உண்மையாஞல் இதற்குச் சிறிது விளக்கம் தேவை.

ஒழுங்காக நடக்கும் இரு கட்சி முறையில் உள்நாட்டுச் சண்டையின்றி ஏதாவது ஒரு கட்சியைத் தேர்ந்தெடுக்க முடிந் தாலும், இரு கட்சிகளின் கொள்கைகள் திட்டங்களித மிகப் பயன் தரக் கூடியவைகள், வெற்றிபெற வேண்டுமென்று ஓட் டர்கள் விரும்புகின்றனர். அமெரிக்காவிலுள்ள இரு கட்சிகளின் முன்னேற்றப் போக்கைப்பற்றி அமெரிக்கருக்குச் சந்தேகமில்லே. இங்கு எந்தக் கட்சியும் சர்வாதிகாரப் பாதையை விரும்ப வில்லே. பொருளாதாரச் சிதைவையோ, மற்றெந்த நாசத் தையோ அவர்கள் விரும்பவில்லே. ஆனுல் இரு கட்சிகளும் செல்லும் பாதை விரிவானது. அந்தப் பாதையின் இருமருங்கி லும் சிறு சந்துகள், வளேவுகள் இருக்கலாம். அந்தச் சந்து கள் வளேவுகள் பற்றி இருகட்சிகளுள் அபிப்பிராயபேதம் இருக்கலாம். இந்த மாறுபட்ட அபிப்பிராயங்களின் அடிப் படையில் மக்கள் தாங்கள் இஷ்டப்பட்ட கட்சிக்கு ஓட்டுச் செய்யலாம்.

அதிகாரம் வகிக்கும் கட்சியின் செயல்கள் பற்றி மக்கள் அதிருப்திக்குக் காரணமான முக்கியப் பிரச்னேகளேத் தெரிந்து கொண்டு, அதைப்பற்றிப் பிரசாரம் செய்து எதிர்க் கட்சியினர் தங்கள் பக்கத்திற்கு ஓட்டர்களின் ஆதரவைத் தேடுவார்கள். ஓட்டர்களேக் கலவரப்படுத்தக்கூடிய பிரச்னேகளே இரு கட்சி களும் தொடமாட்டா. அனுபவம் மிகுந்த அரசியல் வாதிகள் தேர்தலுக்கான பிரச்னேகளேத் தேர்ந்தெடுப்பதில், எவ்வளவு

அபிப்பிராய பேதமிருந்தாலும், அரசாங்க அமைப்பு சீர்குலையா மல் பார்த்துக்கொள்வார்கள்.

அமெரிக்கக் கட்சிகளைவிட பிரிட்டனிலுள்ள கட்சி களுக்குள், வித்தியாசம் விஷேசமாயிருக்கிறதென்றால், அங்கு ஓட்டர்களைக் கலவரப்படுத்தி, தேர்தலில் தோற்றுப்போக இடம் கொடாமல், அப்போதைய நிலைமையில் தீவிர மாறுதல் செய்யப் போவதாக வாக்களிக்க முடியும்.

முதல் மகா யுத்தத்திற்கு முன் வடக்கு அயர்லாந்து புரட்சி செய்யப் போவதாக, பயமுறுத்தியதற்குப் பிறகு, அமெரிக்க மக்களைப்போல், பிரிட்டிஷ் மக்கள், எளிதில் எதைப் பற்றியும், கலவரமடையக் கூடியவர்களல்ல. ஒரு துப்பாக்கியை முடுக் காமல் பிரிட்டிஷ் மக்கள், சர்ச்சிலிடமிருந்து ஆட்லியிடமும், மீண்டும் சர்ச்சிலிடமும், தங்கள் விசுவாசத்தை மாற்றமுடியும். சோஷலிஸ்ட்கள் வெற்றியடைவதை அமெரிக்கர்கள் நிம்மதி யாகச் சகித்துக் கொள்ள முடியாவிட்டாலும், ஹூவரைவிட்டு, ரூஸ்வெல்டிடமும், ட்ரூமனைவிட்டு ஐஸன்ஹோவரிடமும், உள்நாட்டு சண்டையின்றி தங்கள் பக்தியை மாற்றக்கூடிய வர்கள். இரண்டு கட்சிகளுக்குமுள்ள வித்தியாசத்தை இந்த மட்டில்தான் விளக்கிக் கூறமுடியும்.

ஜனநாயகக் கட்சியிலும், குடியரசுக் கட்சியிலும் மாறு பட்ட கருத்துள்ளவர்கள் இருக்கின்றனர். இவர்களுடைய எண்ணிக்கை கட்சிக்குக்கட்சி கூடுதலாகவோ, குறைவா கவோ இருக்கலாம். இந்தக் கட்சிகள் சிதைந்து போகும் என்று கூறக்கூடிய அளவுக்கு நெருக்கடி நேர்ந்து கொண்டு தானிருக்கிறது. அப்படி இருந்தும் இந்தக் கட்சிகளை சிதை யாமல் காத்து வருவது, கட்சித்தலைவர்கள் அடுத்த தேர்தலில் வெற்றிபெற வேண்டும், என்று விரும்புவதுதான். சில சமயங் களில் மாறுபட்ட எண்ணமுள்ள தலைவர், தனது கட்சி பிற்போக்காய் இருக்கிறது எனச் சொல்லி, வெளியேறி, மூன்று வது கட்சி ஆரம்பிக்கலாம். இப்படித்தான் 1912-ல் தியடோர் ரூஸ்வெல்ட் குடியரசுக் கட்சியிலிருந்து விலகி, முற்போக்கு அல்லது புல்மூஸ் கட்சி என்று ஒன்றை ஆரம்பித்தார். ராபர்ட்

லா பாலெட் மூத்தவர் 1924-ல் முற்போக்காளராகப் பிரசாரம் செய்தார். இவருடைய கட்சியும் குடியரசுக் கட்சியிலிருந்து பிரிந்து போனதுதான். 1948-ல் ஜனநாயகக் கட்சியிலிருந்து. இரு சிறு குழுவினர் பிரிந்து சென்றனர். வாலேஸைத் தலைவராக் கொண்ட கூட்டம், ஜனநாயகக் கட்சி ரொம்ப பிற்போக்கானது என்று குறை கூறிற்று. டிக்ஸிகிராட்டுகள் (Dixicerato பண்டைய அடிமை ராஜ்யங்களைச் சேர்ந்தவர்கள்) ஜனநாயகக் கட்சி ரொம்ப தீவிரமானது என்று குறைகூறினார்கள். 1912-ல் புல்மூஸர்கள் பிரிந்ததால், குடியரசுக் கட்சியினர் தோல்வியுற்று, வுட்ரோ வில்ஸன் ஜெயிப்பதற்கு வழிதேடினாலும், இம் மாதிரி பிளவுகளால், பழைய கட்சிகளின் கட்டுக்கோப்புச் சிதைவுறவில்லை.

பெரிய கட்சியிலிருந்து பிரிந்து போகும் மூன்றாவது கட்சியின் பலஹீனம் என்னவெனில், அவர்கள் கொள்கை வித்தியாசத்தால் வெளியேறுகிறார்கள்; அந்தக்கொள்கையை ஆதரிக்கும் ஓட்டர்கள் பெரிய அளவு சேர்ந்தால்தான், அவர்கள் பலம் பெற முடியும். இந்த உதிரிக் கட்சிகளைச் சேர்ந்தவர்களுக்கு, இரு பெரிய கட்சிகளும், கிட்டத்தட்ட ஒரே மாதிரிக் கொள்கைகளை மேற்கொண்டிருப்பது பிடிக்கவில்லை. கொள்கை அடிப்படையில் கட்சிகளைத் திருத்தி அமைக்கவே அவர்கள் விரும்புகின்றனர்.

பாஸிஸ்டுகள், மற்றும் வலது சாரி வெறியர்கள் உள்பட எல்லா பழமைப் பற்றுள்ளவர்களும் சேர்ந்த ஒரு கன்ஸர்வேடிவ் கட்சியிருக்கவேண்டும், கம்யூனிஸ்ட்கள் அவர்களை ஒட்டிய இடதுசாரி வெறியர்கள் அடங்கிய தாராள மனப்பான்மையுள்ளவர்களெல்லாம், ஒரு முற்போக்குக் கட்சியிலிருக்க வேண்டும். இதுதான் உதிரிக் கட்சி அமைப்பாளர்களின் ஆசை. இப்படி இருந்தால்தான் மாறுபட்ட கட்சிகளுள் தங்களுக்குப் பிடித்தமானவர்களை ஓட்டர்கள் தேர்ந்தெடுக்க முடியும் என இவர்கள் கருதுகிறார்கள். இம்மாதிரி பாகுபாடு செய்து திட்டமாகப் பிரித்தால் இரு சர்வாதிகாரப் போக்குள்ள தற்கொலைக் கட்சியினருக்கிடையே அகப்பட்டு, தவிக்க வேண்டிவரும். எந்த ஜனநாயக முறையும் நிலைத்து வாழ விரும்பினால் மக்கள்

தங்கள் சுதந்திரத்திற்குப் பாதுகாப்பளிக்கத்தக்க ஒரு கட்சி முறையை—அது எவ்வளவு குறைபாடுகளுள்ள தாலுைம் சரி—வகுக்க வேண்டும். அமெரிக்க ஜனநாயக, குடியரசு கட்சிகளின் அமைப்பு முறை மாறுபட்ட கருத்துள்ளவர்கள் ஒருவரை யொருவர் சுட்டுக் கொள்ளாமல், கூடிவாழலாம் என்று நம்ப இடமளிக்கிறது. அந்த அமைப்பில் குறைபாடுகள் இருக்கின்றன. தர்க்க வாதத்திற்கு ஒவ்வாத சமரஸ ஏற்பாடுகள் இருக்கின்றன. ஆனால் இதுவரை அது நாசமாகாமல் நிலைத்து, நின்று வந்திருக்கிறது.

அமெரிக்காவில் இரு கட்சிகளையும் நடத்தும் பிரத்தியட்ச நிலையறிந்த அரசியல் தலைவர்கள் திட்டமான கொள்கையடிப்படையில் கட்சிகள் அமைய வேண்டும் எனும் யோசனையை விரும்பவில்லை. அதிருப்தி அடைந்த ஓட்டர்கள் வெளியேறி மூன்ருவது கட்சி அமைந்தால், இவர்கள் திரும்பி வரமுடியாமல், அவர்கள் தடை செய்வதில்லை. முடிந்தமட்டில் ஓட்டர்கள் திரும்பி வருவதற்கான சமரஸ வழிகளை வகுக்கிருர்கள். ஆனால் உதிரிக் கட்சியின் தலைவர்கள் ஓட்டர்களைக் கலவரப்படுத்தி, விரட்டக் கூடியவர்களாயிருந்தால், அவர்கள் மீண்டும் பழைய கட்சிக்கு வராமல் தடுப்பதற்கு ஏற்பாடு செய்கிருர்கள். மாறுபட்ட கருத்துடையவர்களைத் திரும்ப அழைப்பதற்கான ஏற்பாடுதான் இரு கட்சி முறையின் உறுதியான அம்சம்.

பலம்வாய்ந்த பெரிய கட்சிகளை ஆட்சேபித்துக் கொண்டிருக்கும் மூன்றும் கட்சிகள் தவிர, பல சில்லறைக் கட்சிகளும் இருக்கின்றன. இவைகள் தங்களுடைய வட்டாரங்களில் இருக்கலாம். உதாரணமாக விவசாயத் தொழிலாளர் கட்சி, முற்போக்குக்கட்சிகள், இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் மத்திய மேற்குப் பகுதிகளில் ராஜ்யத் தேர்தல்களில் வெற்றி பெற்றன.

மற்றும் சில கட்சிகள் தேசீயநோக்கு உடையவை. ஆனால் அவைகள் சில லட்ச ஓட்டுகளுக்குமேல் பெறுவதில்லை. சோஷலிஸ்டுகள், மில்வாக்கி, பிரிட்ஜ்போர்ட் எனும் இடங்களில் நகராட்சியை நீண்ட காலத்திற்குக் கைப்பற்றியிருந்தாலும்,

இவற்றின் அங்கத்தினர்களுக்கு, ராஜ்ய தேர்தல்களில் கூட வெற்றி கிட்டும் என்கிற நம்பிக்கையில்லை. இச் சிறு கட்சியினர் ஓட்டர் ஜாபிதாவில் இருப்பதாலும், தங்களுடைய சொற்ப அங்கத்தினர்களை ஒன்று கூட்டிக் கட்டுக்கோப்பாக வைத்திருப்பதாலும், தங்கள் ஓட்டுகளைப் பெறுவதற்காகத் தங்களுடைய திட்டங்களில் சிலவற்றைப் பெரிய கட்சிகள் நாளாவட்டத்தில் ஏற்றுக்கொள்ளும்படி செய்யலாம் என எதிர்பார்க்கிறார்கள். சிறு கோஷ்டிகளின் தலைவர்களை ஆட்சியில் பங்குகொள்ள அழைக்க வேண்டிய அவசிய மில்லாதவகையில், நாடு பொதுவாக ஏற்றுக்கொள்ளப் பக்குவமாகாத வாதங்களைப் பிரகாசப்படுத்த முயலும் அக் கோஷ்டிகளுக்கு அவகாசமளிக்க இச் சிறு கட்சிகள் பயன்படுகின்றன. உதாரணமாக 1900-ல் பிரபலமாயிருந்த சோஷலிட் யோசனைகள் இன்று வேறு ரூபத்தில், குடியரசு ஜனநாயக கட்சி திட்டங்களில் இடம் பெற்றிருக்கின்றன. ஒரு சந்தர்ப்பத்தில் மதுவிலக்குக் கட்சி, தனது கொள்கையை அரசியல் சாஸனத்தில் ஒரு திருத்தப்பிரேரணையாக ஏற்கும்படி செய்தது. யூனியனிஸ்ட் கட்சிக்கு ஒரு சில ஓட்டுகளே கிடைத்தாலும், தேர்தல்களை அவை ஓரளவு பாதித்திருக்கின்றன. எப்படி யெனில் இந்தக்கட்சி ஒரு சமயம் பிற்போக்கான அபேட்சகர்களுக்குத் தன்னுடைய ஓட்டுக்களை அளிக்கும். மற்றொரு சமயம் தாராளப் போக்குள்ள அபேட்சகருக்குத் தன்னுடைய ஓட்டுகளை வலுவில் அளித்து, அவர் வெற்றிபெற முடியாமல் பாழ்படுத்தும்.

தேர்தல்களில் தீவிரமாகக் கலந்துகொண்டு, தங்கள் செல்வாக்கினால் கட்சிகளைப் பயன்படுத்திக்கொள்ளும் ஸ்தாபனங்களைப் பற்றி விவரித்தால்தான் அமெரிக்கக் கட்சி அமைப்பின் வரலாறு பூர்த்தியாகும். இந்த ஸ்தாபனங்கள் தேர்தலில் பகிரங்கமாகக் கலந்துகொள்வதில்லை. ஏதாவது ஒரு பதவிக்குத் தாங்கள் விரும்பும் அபேட்சகரை இருகட்சிகளில் ஒன்று நியமனம் செய்யும்படி பார்த்துக்கொள்வாகள்.

உதாரணமாக, அமெரிக்காவில் ஏன் ஒரு தேசீய தொழிற் கட்சி இல்லை என்றால், இரு பெரிய கட்சிகளும், தங்கள் ஓட்டுகளை நாடி வரட்டுமே என்று அமெரிக்கத் தொழிலாளர் பெட

ரேஷன் வெகு காலத்திற்கு முன் முடிவு செய்துவிட்டது. தொழிலாளர் தலைவர்கள் தங்களுக்கு உதவியாயிருப்பவர்களை ஆதரிக்கிறார்கள். ஒரு இடத்தில் இவர்கள் ஒரு குடியரசு அபேட்சகரை நியமிக்கலாம். மற்றொரு இடத்தில் ஜனநாயகக் கட்சி அபேட்சகரை நியமிக்கலாம். தங்கள் ஓட்டுகளை பணயம் வைத்துத் தோற்கும் கட்சியிலிருப்பதைவிட ஜெயிக்கும் கட்சி யின் சார்பாகத் தங்கள் ஆதரவைப் பயன் படுத்துவதனால், அதிக லாபம் பெறலாம் என அவர்கள் நம்புகின்றனர்.

மேலும் அமெரிக்காவில் தொழிலாளர் ஓட்டு என்று தனியாக இருப்பதாகக் கூறமுடியாது. அமெரிக்கத் தொழி லாளர்கள் எப்பொழுதுமே தங்கள் தலைவர்கள் இஷ்டப்படி ஓட்டுச் செய்வதில்லை. இதிலிருந்து சில ஐரோப்பிய நாடு களிலிருப்பது போல், அமெரிக்காவில் வகுப்பு உணர்ச்சி அவ் வளவு முக்கியத்துவம் வகிக்க வில்லை என்பதை அறிந்து கொள்ளலாம்.

அமெரிக்க அரசியலில் கலந்துகொள்ளும் மற்ற ஸ்தாப னங்கள், அமெரிக்க வர்த்தகசபை, வியாபார பிரதிநிதிகளான உற்பத்தியாளர் தேசீய சங்கம், குடியானவர் சங்க சமஷ்டி, விவசாயத் தொழிலாளர் யூனியன், பெண் ஓட்டர்கள் சங்கம், பெண்கள் கிளப்புகளின் பொது சமஷ்டி, அயல்நாட்டு யுத்தங் களில் பங்குகொண்ட வீரர் சங்கம், அமெரிக்கப் புரட்சியின் பெண்கள் முதலியன.

வரி விதிப்பதற்காக அரசியல் ஸ்தாபனங்களுக்குள் சட்டம் சில பாகுபாடுகள் பார்க்கின்றன. தங்கள் சுய நலத்தை வளர்ப் பதற்காக சட்டசபை பிரதிநிதிகளிடையே வேலைசெய்யும் ஸ்தா பனம் என்றும், நாட்டு நலனுக்காகப் பொது விஷயங்களை ஆராயும் ஸ்தாபனங்கள் என்றும், வித்தியாசம் பாராட்டு கிறது.

சமஷ்டி வரிக்குட்பட்ட வருமானத்திலிருந்து அரசியல் ஸ்தாபனங்களுக்குக் கொடுக்கப்படும் நன்கொடைகளைக் கழிக்க முடியாது.

ஆகையால் பெரிய அரசியல் கட்சிகள் பலவித செல் வாக்குகள், நிர்ப்பந்தங்கள் முதலியவைகளுக் குட்பட்டு வேலை செய்கின்றன. இவைகள் தனிப்பட்ட ஓட்டர்களின் தேவைகள் யாவை என்பதை அறிந்துகொள்வதுடன், திரை மறைவி லிருந்து அரசியல் ஸ்தாபனங்களை ஆட்டிவைக்கும் சக்திகளை யும் திருப்தி செய்யவேண்டி இருக்கிறது.

சுயநல நோக்குள்ள பல சிறு கட்சிகளும் தனிப்பட்ட சங் கங்களும் பிரதானமான இரு கட்சிகளைச் சூழ்ந்துகொண்டு எந்தக் கட்சி தங்கள் இச்சையைப் பூர்த்தி செய்கிறதோ, அந்தக் கட்சிக்கு ஏராளமாக ஓட்டு செய்யக் கூடியவர்கள் ஆயிரக்கணக்கில் தங்கள் வசம் இருப்பதாக ஆசை காட்டு கின்றன. கட்சித் தலைவர்களின் கடமை என்ன வென்றால் வெற்றிதரக்கூடிய வகையில் வாக்குறுதிகள் அளித்து நாளடை வில் அவைகளை ஒழுங்காக நிறைவேற்றுவதுதான்.

## 3. கட்சி அமைப்பும், நடை முறையும்

அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் முதன் முதலாக கட்சி கள் தோன்றுகையில், அவைகள் தேசீய ரீதியில் அமைந் திருக்கவில்லை. தேசீயக் கொள்கைகள் பற்றி அபிப்பிராய பேதம் மட்டுமிருந்தது. ஜனாதிபதிப் பதவி வகிக்க விரும்பும் தேசீயத் தலைவர்கள் இருந்தனர். காங்கிரஸ் (அமெரிக்க சமஷ்டி சட்ட சபை) இரு கூருகப் பிரிந்து ஒவ்வொரு பகுதியும் சிறு குழுவாகக் கூடி, தத்தம் அபேட்சகரை நியமித்தது. இந்தச்சிறுகுழு சீக்கிரத்தில் பொதுஜன ஆதரவை இழந் தது.காங்கிரஸ் உறுப்பினரல்லாத கட்சித் தலைவர்களும், ஜனாதி பதி தேர்தல் மட்டுமல்ல, அபேட்சகர் நியமிப்பதிலும், தங்க ளுக்குப் பங்குவேண்டும் என்று கோரினர். கட்சிகள் வளர்ந்த வரலாற்றில் பெரும் பகுதி ஓட்டர்கள் மனதைப் புண்படுத்தி தேர்தலில் தோற்காமல் அபேட்சகர் நியமனத்தில் அரசியல் நிபுணர்கள் பங்கு கொள்வதற்காக நடத்திய போராட்டம் பற்றி யதுதான்.

1824-ல் ஜனநாயக, குடியரசு உட்குழு ஆண்டிரு ஜாக்ஸனை அபேட்சகராக நியமனம் செய்யத் தவறியதால், ஓட்டர்களுக்கு அதிருப்தி ஏற்பட்டது. இந்தத் தவறுக்கு 4 வருடத்திற்கப்புறம் பரிகாரம் தேடப்பட்டது. ஜாக்ஸன் தேர்ந்தெடுக்கப்பட்டார்; ஆனால் அபேட்சகரை கட்சியின் உட்குழு நியமிக்கும் முறை வெறுக்கப்பட்டது. இரு கட்சியினரும், தத்தம் கட்சி மகாநாடுகள் (Conventions) கூட்ட ஏற்பாடு செய்தன. ஸ்தல கன்வென்ஷன்கள் கூடி ராஜ்ய கன்வென்ஷனுக்குப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுத்தனுப்பின. ராஜ்ய கன்வென்ஷன்கள், தேசீயக் கன்வென்ஷனுக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தன. இம்மாதிரி கன்வென்ஷன்கள், ஸ்தல, ராஜ்ய தேசீயப் பதவிகளுக்கு அபேட்சகர்களைத் தேர்ந்தெடுத்தன. இந்த முறை ஓரளவு ஜனநாயகத் தன்மை வாய்ந்தது. ஏனெனில் இம்முறை மூலம் கட்சி அங்கத்தினர்கள் சந்தித்து, அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்கும் சந்தர்ப்பம் பெற்றனர். ஆனால் இதில் ஒரு குறையுமிருந்தது. சாதாரண ஓட்டர், கட்சிஅங்கத்தினராய் இருந்தாலொழிய, தேர்தல் தினம் தவிர, மற்ற சந்தர்ப்பங்களில் தனது அபிப்பிராயத்தைத் தெரிவிக்க இடமில்லை. இதன் விளைவாக இம்முறையில் குறைகூறப்பட்டு நேரடி (Primary) தேர்தல் முறை உருவாயிற்று,

அநேக ராஜ்யங்களில் வசந்த காலம் அல்லது கோடை கால ஆரம்பத்தில், தேர்தல் வருஷங்களில் கட்சிகள் ஸ்தல, ராஜ்ய, மத்ய காங்கிரஸுக்கு, அபேட்சகர்கள் தேர்ந்தெடுக்கையில், தேர்தல்களும் நடக்கின்றன. சில ராஜ்யங்களில் தேசீய கன்வென்ஷன் பிரதிநிதிகள் தேர்தல்களிலேயே தேர்ந்தெடுக்கப்பட்டனர். இப்படித் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் தேசீய கன்வென்ஷனில் குறிப்பிட்ட அபேட்சகரையே ஜனாதிபதி பதவிக்குத் தேர்ந்தெடுப்பதாக உத்திரவாதம் கொடுக்கும்படி வற்புறுத்தப்படுவதுண்டு.

குடியரசு அல்லது ஜனநாயக தேசீய கன்வென்ஷன் கூடு முன்பே ஜனாதிபதி பதவிக்கு ஒவ்வொரு கட்சியின் அபேட்சகர் யார் என்று திட்டமாகக் கூறும் அளவுக்கு நேரடி (Primary) தேர்தல் முறை முன்னேற்றம் அடையவில்லை. தேர்தலில்

சீரான ஆதரவு பெற்று தேசீயக் கன்வென்ஷனில் வெற்றி பெரு தவர்கள் தேர்தலின் முடிவுக்கு அதிக பிரதான்யம் கொடுக்க விரும்புகின்றனர். கன்வென்ஷனை நடத்துபவர்களில் அரசியலையே தங்களது தொழிலாகக் கொண்டவர்கள் ஜனாதிபதி தேர்தலில் சூத்திரக் கயிறு தங்கள் கையிலேயே இருக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள்.

ஜனாதிபதி பதவிக்கு அபேட்சகரை நியமிக்கும் அதிகாரம் தேசீயக் கன்வென்ஷனிடம் இருக்கும் வரையில் அது சம்பந்தமான நிகழ்ச்சிகள் அமெரிக்க மக்களைப் பெரிதும் கவர்ந்து கொண்டுதானிருக்கும்.

கன்வென்ஷனில் கூட்டங் கூடி கூக்குரலிடுவதைப் பார்ப்பவர்கள் ஒரு ஜனநாயக ஆர்வமுள்ள மக்கள் தங்களது ஜனாதிபதியை எப்படி கட்டுக் கடங்காத வெறியர் கூட்டத்தில் தேர்ந்தெடுக்கிறார்கள் என ஆச்சரியப்படலாம். இப்படி ஆச்சரியப்படுவது, வெளித் தோற்றத்தை நம்பி உட்பொருளை அறிந்து கொள்ளாததாகும். கன்வென்ஷன் மேடையில் கூடுபவர்கள் ஜனாதிபதியைத் தேர்ந்தெடுப்பதில்லை. அவர்கள் அந்தக் கூட்டத்தில் இதர அங்கத்தினர்களை அறிந்து பழகுகிறார்கள். பரஸ்பர அளவளாவுதல் மூலம் உற்சாகம் உச்ச நிலையடைகிறது. இப்படி உணர்ச்சிப் பெருக்குப் பொங்கி வழிகையில், கைதேர்ந்த அரசியல் தலைவர்கள் திரை மறைவில் கட்சியாளரைத் தேர்ந்தெடுத்தால் கட்சி ஒன்றுபட்டு சுயேச்சை ஓட்டர்களை கவர முடியும் என்பதற்கு வகை செய்கிறார்கள். பிரதிநிதிகளின் அபிப்பிராயத்தை தலைவர்கள் அவமதிப்பதில்லை. சிறுசிறு கூட்டத்தினரைச் சந்தித்து அவர்கள் ஆதரவைத் திரட்டுகின்றனர். இந்த அந்தரங்க பலம் திரட்டல், டெலிவிஷன் திரையில் காட்சி யளிக்காது.

இதற்கிடையில் கன்வென்ஷன் மேடையில், பாண்டு வாத்தியம், அணிவகுப்பு முதலிய ஆர்ப்பாட்டங்கள் மூலம் பிரதிநிதிகளுக்கு உற்சாகமளிக்கப்பட்டு வரும். கடைசியாக ஜனாதிபதி பதவிக்கு அபேட்சகர் பொறுக்கப்பட்டவுடன், கட்சியில் தோற்றவர்களும் இந்தக் கூக்குரலில் சேர்ந்து கொள்ளும் வரை, இந்தக் கும்மாளம் மும்முரமாயிருக்கும்.

டெலிவிஷனில் இந்தக் கூத்தைக் காண்பவர்கள் இதெல்லாம் என்ன அநாகரீகம் என வியப்படைவார்கள். உண்மையில் இந்தக்கொந்தளிப்பு அநாகரிகமாகத்தானிருக்கிறது. ஆனால் அமெரிக்க மக்களின் வளர்ச்சியில் இந்த யுத்தக் கூப்பாட்டின் நீண்ட வரலாற்றிற்கு இடமுண்டு. உலகமெங்குமுள்ள காட்டுமிராண்டிகள் யுத்த ஆர்ப்பாட்டத்தின் மூலம் தத்தம் ஜாதியினரை ஒன்றுபடுத்தி யிருக்கின்றனர். இதன் மூலம், சோர்வுற்றிருப்பவர்களைப் போரில் ஈடுபட்டுச் சமர் புரியத் தூண்டி இருக்கின்றனர். மக்களின் இந்த சுபாவத்தை அறிந்து, அதைப் பயன்படுத்திக் கொண்ட தேசிய கன்வென்ஷன் ஆரம்பித்த அரசியல் நிபுணர்களின் மேதையை லேசாகத் தள்ளிவிட முடியாது.

ஆனால் டெலிவிஷனைப் பயன் படுத்துவதனால், கன்வென்ஷனில் வழக்கமாக உள்ள பல அம்சங்களைக் கட்டாயம் மாற்றிவிடும். ஒவ்வொருவருக்கும் பாதி ஓட்டுரிமையுடன் இருவகைப் பிரதிநிதிகள் அனுப்புவதை மாற்ற வேண்டிவரும். இந்த அம்சத்தின் மூலம் ஓட்டுப்போடுவதில் மிகுந்தக் காலதாமதம் ஏற்படுகிறது. கூட்டம் சற்று நிதானமாக நடந்தால் தங்களுக்கு நல்லது என்று நம்பும் அரசியல் நிர்வாகிகளுக்கு இதன் மூலம் நன்மை ஏற்படலாம். இது பிரதிநிதிகளின் காட்சிகாணும் ஆர்வத்தை திருப்தி செய்கிறது. ஆனால் இது டெலிவிஷன் பார்ப்பவர்களை சலிப்படையச் செய்கிறது. ஓட்டர்களை சலிப்படையச் செய்வது அரசியல் புத்திசாலித்தனத்திற்கு அறிகுறியல்ல. டெலிவிஷன் இருப்பதனால் பிரதிநிதிகளின் நடவடிக்கையும் சீர்படலாம். ஏனெனில் காது செவிடா யிருப்பவர்கள் கூட உதடசைவதன் மூலம் பிரதிகளின் கூத்தாடித்தனத்தை அறிந்துகொள்வர்.

தேசீய கன்வென்ஷன் நடத்தும் முறையில் எவ்வித மாறுதல்கள் செய்தாலும், அந்தக் கூட்டத்தின் நாடக ரீதியாயுள்ள அம்சங்களை கட்சித் தலைவர்கள் கைவிடுவார்களா என்பது சந்தேகம்தான்.

கன்வென்ஷனில் கட்சிக் கொள்கைகளும், திட்டமும் வகுக்கப்படுகின்றன. தீர்மானங்கள் திட்டம் செய்ய கன்வென்டின் கூடுவதற்கு முன்பு ஒரு கமிட்டி கூடுகிறது. அந்த கமிட்டி தொழிலாளர்கள், வியாபாரிகள், பெண்கள் கோஷ்டிகள்• நீக்ரோக்கள், விவசாயிகள், யுத்த வீரர்கள், மற்றும் ஓட்டுச் சேகரிப்பதற்கான யோசனைகளைக் கூறக் கூடியவர்களின் கருத்துக்களை கேட்டுத் தெரிந்து கொள்கிறது.

கமிட்டி முன் வருபவர்களின் யோசனைகளை ஏற்றுக் கொள்வனுல், ஓட்டர்கள் ஆதரவுபெருகும் என்றுதோன்றினுல், அவர்கள் கோரிக்கைகளையும், கட்சித் திட்டத்தில் சேர்த்துக்கொள்வார்கள். ஆனுல் இந்தப் புதுயோசனைகள் கட்சிக்கொள்கைகளுக்கு முரணுயிருக்கலாகாது. கட்சிக் கொள்கைக்கு முரண் என்ருல் என்ன? கட்சியின் சாதாரண உறுப்பினருக்கு அதிருப்யளித்து, அதன் விளைவாக தேர்தலில் ஓட்டுப்போடமல், அவர்கள் வீட்டிலேயே இருந்து விடுவார்கள் என சந்தேகிக்க இடமளிக்கும் விஷயங்களெல்லாம் கட்சிக் கொள்கைக்கு முரணுனவை.

உதாரணமாக மனித சமுதாய உரிமைகள் பற்றியும் சிறுபான்மையினரைச் சமமாக நடத்துவதற்கான மசோதா பற்றியும் 1948-ம் வருஷத்திய ஜனநாயகக் கட்சி கன்வெஷனில் பலத்த விவாதம் நடந்தது. மனித சமுதாய உரிமைகள் பட்டியல் தயாரித்தால், சிறுபான்மை வர்க்கத்திலுள்ள லக்ஷக்கணக்கான ஓட்டர்கள் நம்மை ஆதரிக்க முன்வருவர் என சிலர் வாதித்தனர். மற்ரெரு புறம், இந்தப் பட்டியலை கட்சி ஏற்றுக்கொண்டால் ஏற்கனவே கட்சி அங்கத்தினராயிருப்பவர்களில் லட்சக்கணக்கானவர்கள், நம்மை விட்டுப் போய்விடுவர் என வாதித்தனர். தொழிலாளர் நலன், விவசாயப் பண்ணை பற்றிய கொள்கை விஷயங்களிலும் அபிப்பிராய பேதம் எழலாம். குறிப்பாகக் கட்சித் திட்டம் தயாரிப்பவர்கள் அபிப்பிராய பேதத்தைப் பயன் படுத்திக்கொள்ள முற்பட்டால் ஆபத்து ஏற்படலாம்.

கட்சித்திட்டம் தயாரிக்கும் கமிட்டியினர், பிறரைப் புண் படுத்தாமல் இயன்ற அளவு யாவருக்கும் திருப்தி யளிப்பதி

லேயே கருத்தாயிருப்பர். வாழ்க்கை வசதி, வரவு செலவு சமமா யிருப்பது, குறைந்த வரிகள், அமெரிக்க வாழ்கை முறைப் பாது காப்பு முதலிய அம்சங்களில் வாக்குறுதியளிப்பதிலேயே கண் ணும் கருத்துமா யிருப்பார்கள்.

பழைய சேவைகளையே நம்பி, கட்சி ஆதரவு தேடப்பார்க் கிறது. கட்சிப் பிரசாரகர்கள், தங்கள் கட்சியே சிறப்பானது, கட்டுக் கோப்பாயுள்ளது, நம்பத் தக்கது என்று பெருமையுடன் பிரகடனம் செய்வார்கள், எதிர்க் கட்சியின் செயல்களில் மக்களுக்குப் பிடிக்காதவைகளை எடுத்துக் கூறி, தங்கள் கட்சி என்ன சாதிக்கப்போகிறது, என்பதை மக்கள்கேட்டு மகிழும்படி எடுத்துரைப்பார்கள். ஒவ்வொரு கட்சியும் தனது சிறப்பைப் பற்றிப் பெருமையாகக் கூறி எதிர்க் கட்சி எவ்வளவு அவல மானது என்பதை அம்பலப் படுத்தும். உதாரணமாகக் குடி யரசுக் கட்சி, தனது கட்சி திறமை மிக்கது, நாணயமானது என்றும், ஜனநாயக் கட்சி திறமை யற்றது, கம்யூனிஸ்ட் கலப் புள்ளது என்றும் கூறுகிறார்கள். இதற்கு எதிரிடையாக ஜன நாயகக் கட்சியினர் தாங்களே மக்களின் நண்பர்கள் என்றும், குடியரசுக் கட்சியினர் பணமூட்டைகளின் நண்பர்கள் என்றும் அவர்களை அடித்துப் புடைத்து, 20-வது நூற்றாண்டிற்கேற்ற முன்னேற்றப் பாதைக்குக்கொண்டுவரவேண்டும் என்றும் சொல் வார்கள். இந்த விவரங்களுக்கு ஒவ்வாத பிரமுகர்கள் பலர் இரு கட்சிகளிலும் இருக்கின்றனர். ஆனால் ஒவ்வொரு கட்சிக் கூற் றிலும் ஓரளவு உண்மை இருப்பதாகவே ஓட்டர்கள் நம்புகின் றனர்.

ஒரு சில ஓட்டர்கள் கட்சித்திட்ட அறிக்கையைப் படிக்கின் றனர். அரசியல் சொற்பொழிவாளர்கள் அறிக்கையிலிருந்து மேற்கோள் காட்டுவார்கள். அறிக்கையில் ஓட்டர்கள் மனத் தைப் புண்படுத்தும் வாசகங்கள் இருந்தால், எதிர்க்கட்சிப் பிரசாரகர்கள் அவைகளை தாராளமாக எடுத்துக் கூறுவார்கள். கட்சி அபேட்சகர் தமது பிரசங்கங்கள் மூலம் கட்சிக் கொள்கை களை விளக்கிப்பேசுவார். அவர் தம் கட்சித் திட்டத்தை எதிர்த் துப் பேசமாட்டார். கட்சி அறிக்கையில் முக்கியமாகத் தோன் றுதவைகளைப் பற்றி அவர் குறிப்பிடமாட்டார். தனக்கு முக்கிய

மென்று தோன்றும் விஷயங்களைப்பற்றி தனது சொந்தக் கருத்துக்களை அழுத்திக் கூறுவார். தேர்தல் முடிந்ததும் ஜனாதிபதியின் பிரசங்கங்களை தங்களுக்குக் கட்சி அளிக்கும் வாக்குறுதியாக மக்கள் கருதுவர். அவர் வாக்குறுதிப்படி காங்கிரஸ் நடப்பதற்கானதை அவர் செய்வார் என, மக்கள் எதிர்ப் பார்க்கின்றனர்.

ஆகையால் கட்சி கன்வென்ஷனில் நிறைவேற்றப்படும் திட்டம் சட்டசபை முடிவுகளுக்குள்ள முக்கியத்துவத்திற்கு அடுத்தபடியாகவே கருதப்படுகிறது. ஜனாதிபதியின் திட்டமே முதலிடம் பெறுகிறது. கட்சியின் கடமைகள் இருவகைப் பட்டவை. ஒன்று, ஜனாதிபதி பதவிக்கு, அபேட்சகரை நியமிப்பது. மற்றொன்று, வெளி ஆடம்பரங்கள் மூலம் கட்சியை ஒன்று படச் செய்வது.

உபஜனாதிபதியை வழக்கமாக ஜனாதிபதி பதவிக்கு நியமிக்கப்படும் அபேட்சகரே நியமனம் செய்கிறார். ஜனாதிபதி அபேட்சகர் சம்பந்தமாக ஆடிப்பாடி ஓய்ந்தவர்கள், உபஜனாதிபதி பதவிக்கு அபேட்சகர் நியமனத்தை ஆட்சேபம் செய்யாமல் ஒப்புக்கொள்வர். ஜனாதிபதி நியமனப் போட்டியில் தோற்றவர்களை சாந்தப்படுத்தவே, வழக்கமாக உப ஜனாதிபதி பதவிக்கு அபேட்சகர் தேர்ந்தெடுக்கப் படுகிறார். இப்படி செய்யாவிட்டால் ஜனாதிபதி பதவி அபேட்சகர் இறந்துவிட்டால் வேறொரு அபேட்சகரை தேர்ந்தெடுப்பதில் அந்தக் கட்சி தோற்றுவிடும். தன் சொந்தச் செல்வாக்கில் ஜனாதிபதி பதவிக்கு நின்று ஜெயிக்கக் கூடியவரை உபஜனாதிபதி பதவிக்கு அபேட்சகராக நியாமனம் செய்ய ஒரு வழி கண்டு பிடிக்க வேண்டுமென்று இந்த முறையை ஆட்சேபிப்பவர்கள் வற்புறுத்துகின்றனர்.

உப ஜனாதிபதி பதவியை, கட்சியை ஒன்று படுத்தும் சாதனமாகப் பயன்படுத்த வேண்டும் என்கிற வாதம், உப ஜனாதிபதியை சுதந்திரமாகத் தேர்ந்தெடுப்பதற்கு எதிரிடையாயிருக்கிறது.

கன்வென்ஷன் 4 ஆண்டுகளுக்கொரு முறையே கூடுவதால் ஒரு கூட்டத்திற்கும், அடுத்த கூட்டத்திற்கும் தொடர்பு நீடிப்

பதற்காக ஒவ்வொரு கட்சியும் ஒரு கமிட்டி அமைத்திருக்கிறது. ஆனால் கமிட்டியின் வேலையில் பெரும்பகுதி ஜனாதிபதி தேர்தல் நடக்கும் ஆண்டில்தான் நடக்கிறது. இந்தக் கமிட்டி தேசீயக் கன்வென்ஷன் எந்த இடத்தில் எப்பொழுது கூட வேண்டும் என்று திட்டம் செய்கிறது.

கமிட்டியின் சிப்பந்திகள் கட்சிப் பிரசுரங்கள் வெளியிட்டு நாடெங்கும் பிரசாரகர்களை அனுப்புகின்றனர். ஜனாதிபதி தேர்தல் பிரசாரத்திற்கும், காங்கிரஸ் தேர்தல் பிரசாரத்திற்குமான பணத்தையும் இந்தக் கமிட்டியே திரட்டுகிறது.

இந்தக் கமிட்டி ஒவ்வொரு ராஜ்யம் அல்லது பிராந்தியம், அல்லது தீவுக்கு ஒரு ஆண் ஒரு பெண் பிரதிநிதி அடங்கியது. இவர்களை ராஜ்யக் குழு அல்லது ப்ரைமரி கமிட்டிப் பொறுக்குகிறது. இந்தக் கமிட்டியின் வேலை அந்தந்த ராஜ்யத்தில் நடக்கிறது. இக்கமிட்டியுடன் ராஜ்யக் கமிட்டி ஒத்துழைக்கிறது, ஜனாதிபதி பதவி அபேட்சகர் தேசீயக் கமிட்டியின் தலைவரை நியமனம் செய்கிறார்.

கமிட்டித் தலைவரும், ஜனாதிபதி பதவி அபேட்சகரும் சேர்ந்து பிரசார முறையை வகுக்கின்றனர். இது தவிர கமிட்டி காரியதரிசி, கமிட்டியின் தலைமை காரியாலயத்திற்கு வரும் ஏராளமான கடிதங்களுக்கு பதில் எழுதுவார். கமிட்டியின் பொருளாளர் பிரசாரத்திற்கான செலவுக்கு பணம் திரட்டுவார்.

அபேட்சகர்களுக்கும், பிரசாரகர்களுக்கும் தேவையான தகவல்களைத் திரட்ட ஒரு ஆராய்ச்சிக் குழு வேலை செய்கிறது. ஒவ்வொரு ஜில்லாவின் பொருளாதார இன, மத அரசியல் சிறப்புகள் யாவை, மத்திய சட்டசபை உறுப்பினர்கள் முன்பு சாதித்தவை யாவை என்பதையும் மற்றும் ஓட்டர்கள் மனம் புண்படாமல் பேசுவதற்கானதும், ஓட்டு சேகரிப்பதற்குமான தகவல்கள் முதலியவற்றையும் இவ்வாராய்ச்சி குழு திரட்டும். இது தவிர கமிட்டிக்கு மற்றொரு முக்கியமான வேலை இருக்கிறது. அலுவல்கள் அதிகமாயிருப்பதால் தங்கள் பிரசங்கங்களைத் தயார் செய்ய முடியாத சட்டசபை உறுப்பினருக்கு, கட்சிப் பிரசாரத்திற்கோ, சட்டசபை விவாதத்திற்கோ, பிரசங்கங்கள் எழுதித்தர எழுத்தாளர்களை அமர்த்துவதும், இந்தக் கமிட்டியின் வேலை.

காங்கிரஸில் ஒவ்வொரு கட்சிக்கும் விசேஷ கமிட்டி உண்டு. அதற்காக தனிநிதியும் இருக்கிறது. இந்தக் கமிட்டி தேர்தலுக்கான உதவி செய்யும். இம்மாதிரியே செனட் சபையிலும் கமிட்டி உண்டு. தேர்தல் முடிவு சந்தேகமாயிருக்கும் இடங்களுக்கு இந்தக் கமிட்டிகள் பணமும், பிரசாரகர்களும் அனுப்பி உதவி செய்யும்.

ஒவ்வொரு ராஜ்யத்திலும், ஒவ்வொரு கட்சிக்கும் ஒரு கமிட்டி இருக்கிறது. இந்தக் கமிட்டிகள் பலத்த போட்டியிருக்குமிடங்களில்தான் வெகுவாக வேலை செய்யும். இவ்வாருக ஜில்லா, நகரம், மற்றும் ஓட்டுச் சாவடி உள்ள இடங்களிலெல்லாம் கட்சி கமிட்டிகள் வேலை செய்யும்.

ஓட்டுப்போடும் இடங்களில், கமிட்டியினர் விடு வீடாகச் சென்று, கதவைத்தட்டி ஓட்டர்களைப் பார்த்துப் பேசுவர். கட்சி ஊழியர்கள் ஒட்டுரிமை உள்ளவர்களெல்லாம், உடனே ஓட்டர் ஜாபிதாவில் தங்கள் பெயர்களைப் பதிவு செய்து கொள்ளும்படி வேண்டிக்கொள்வார்கள். அபேட்சகர்கள், அவர்களுடைய ஊருக்கு வரும்பொழுது தவருமல் கூட்டங்களுக்கு வரும்படி கேட்டுக்கொள்வார்கள். கடைசியாக தேர்தல் தினத்தன்று தவருமல் ஓட்டுப்போடும்படி வற்புறுத்துவார்கள். ஓட்டுச் சாவடியிலிருந்து, ராஜ்யத் தலைநகர்வரை ஒவ்வொரு கட்டத்திலும் ஸ்தல ஊழியர்களுக்கு கமிட்டிகள் உதவி செய்கின்றன. அவர்கள் செலவுக்குப் பணம் கொடுத்து, அவர்கள் பிரசாரத்திற்கான பிரசுரங்கள் வழங்கி ஆங்காங்கு நடக்கும் பிரசார கூட்டங்களுக்கு பிரசங்கிகளனுப்பி, ரேடியோ, டெலிவிஷன் மூலம் ஓட்டர்கள் மனதைத் திருப்பக் கமிட்டியினர் உதவுவார்கள்.

தேசத்தின் அகண்டத் தன்மையையும், ஏராளமான பேரின் ஆதரவைத் தேடவேண்டு மென்பதையும் வைத்துப் பார்த்தால், தேசீயத் தேர்தலுக்காக ஆகும் செலவு குறைவுதான். மொத்தச் செலவு ஒரு ஓட்டருக்கு 25 சதம் ஆக மொத்தத்தில் 200 அல்லது 300 லட்சம் டாலர் செலவாகும். உதாரணமாக 1944-ல் ஜனநாயகக் கட்சிக்கு 7,500,000 டாலரும்,

குடியரசுக் கட்சிக்கு 13,000,000 டாலரும் செலவானதாக அதிகார பூர்வமாக மதிப்பிடப்பட்டது. ஒவ்வொரு தேசீயக் கமிட்டியும் 30 லட்சம் டாலர் ஒவ்வொரு தேர்தல் பருவத்தில் செலவழிக்கலாம். ஆனால் ராஜயக் கமிட்டிகளும், ஸ்தல கமிட்டிகளும், தங்கள் செலவுக்குத் தாங்களே வசூல் செய்து கொள்ளுகின்றனர். இது தவிர பல நபர்களும் ஸ்தாபனங்களும் தங்களுக்கு அபிமானமுள்ள அபேட்சகரை ஆதரித்துத் தங்கள் செலவில் பிரசாரம் செய்கின்றனர். சமஷ்டி ஸிவில் உத்தியோகஸ்தர்கள் அரசியல் பிரசாரத்தில் ஈடுபடலாகாது என சட்டம் தடுக்கிறது. ஆனால் தனிப்பட்ட நபர் தேர்தலுக்காக, தனது காலத்தையும், பணத்தையும் உத்தியோகஸ்தன் எப்படி செலவு செய்கிறன், என்று கணக்குக் கொடுக்கும்படி நிர்ப்பந்திக்க, எதுவும் செய்யப்படவில்லை.

ஒரு கட்சி ஏராளமான பணம் செலவு செய்கிறது என்று எதிர்க்கட்சி அடிக்கடி புகார் செய்கிறது. பணம் குறைவாயுள்ள கட்சி எந்த அளவுக்குச் செலவு செய்ய முடியுமோ, அதற்குமேல் எந்தக் கட்சியும் செலவு செய்யலாகாது என்று சட்டம் செய்ய வேண்டும் எனக் கோரப்படுகிறது. ஆனால், பணம் கொடுத்து ஓட்டு வாங்குவது முன்போல் அவ்வளவு அதிகமாக இல்லை. ஏராளமாகப் பணம் உள்ள கட்சி நிச்சயமாக ஜெயிக்கும் என்று கூறுவதற்கில்லை. ஏனெனில் இதற்கு மாறான பல தேர்தல் முடிவுகளை நாம் பார்த்திருக்கிறோம். அரசியல் கட்சிகள் சர்க்காரிடமிருந்து பணவுதவி பெறத்தயங்குகின்றன. ஏனெனில் அரசியலில் ஈடுபடுவது அரசாங்கங்களின் அலுவல் என்று கட்சித்தலைவர்கள் ஒப்புக்கொள்ள விரும்பவில்லை. ஜார்ஜ் வாஷிங்டனிலிருந்து தலைமுறை தலைமுறையாகக் கட்சிகள் இருப்பது ஒழுங்கல்ல என்று கருதி வந்திருக்கின்றனர். இந்த எண்ணத்தை மறந்தால்தான் சிலர் கூறுவதுமாதிரி ஒவ்வொரு கட்சிச் செலவுக்கும் 150 அல்லது 200 லட்சம் டாலர் காங்கிரஸ் அனுமதிக்க வேண்டும் என்ற யோசனை நிறைவேறலாம். காங்கிரஸ் தனது கமிட்டிகளையும், நிர்வாக அதிகாரிகளையும் கட்சி அடிப்படையில்தான் தேர்ந்தெடுக்கிறது. ஆனால், அது இயற்றும் சட்டங்களில் கட்சிகளைப் பற்றிக் குறிப்பிடத்

தயங்குகிறது. அரசியல் முறையில் கட்சிகளுக்கு நியாயமான இடமுண்டு என ஏற்பதற்கு மற்ெருரு தடை, கட்சிகளுக்குப் பணம் உதவி செய்பவர்கள், அதை வெளிக் காட்டிக்கொள்ள விரும்ப வில்லை என்பது, அவர்கள் கட்சிக்கு பணம் கொடுத்தாலும் கொடுப்பார்களே ஒழிய, தங்கள் உதவி இன்றி கட்சிகள் இயங்குவதை அவர்கள் விரும்புவதில்லை.

ஒவ்வொரு கட்சியையும் நவம்பர் தேர்தலில் ஆதரிப்பவர்கள் 300 லட்சம்பேர் இருக்கின்றனர். இவர்களில் 100 அல்லது 150 லட்சம் பேர்களிடமிருந்து தலா ஒரு டாலர் வீதம் வசூல் செய்யலாம் என்று யோசனைகூறப்படுகிறது. ஆனுல், குறைந்த செலவில் இந்தப் பணத்தை வசூலிப்பது எளிதல்ல என்பதை அனுபவ மூலம் அறியலாம்.

டெலிவிஷன் தோன்றிய பிறகு தேசீயப் பிரசாரச் செலவு கவலைக் கிடமளிப்பதாயிருக்கிறது. கன்வென்ஷன் கூட்டங்களை டெலிவிஷனில் பார்க்க மக்கள் ஆசைப்படுகின்றனர். மேலும் பிரபலமான அபேட்சகர்களை அவர்கள் டெலிவிஷன் மூலம் பார்க்க விரும்புகின்றனர்.

அபேட்சகர்களை மக்கள் டெலிவிஷனில் காணவேண்டும் என்கிற ஆவல் பெறுகிற்ருனுல் ஒவ்வொரு ஓட்டருக்கும் 40அல்லது 50 ஸென்ட்பணம் பிரசாரத்திற்காகச் செலவிடுவது மிக அதிகம் என்று கூறுவதற்கில்லை.

கட்சி ஸ்தாபனம் நன்று நிர்வகிக்கபட்டு, ஒழுங்காகநடந்து ஒரு தேர்தலுக்கும் அடுத்த தேர்தலுக்கும் இடையே ஒன்றுபட்டு உழைத்தால், அதை யந்திரம் என்றழைப்பது இயல்பானது.

காங்கிரஸுக்கு இரண்டு வருஷத்திற்கொருதரம் தேர்தல் நடப்பதாலும், இடையில் ராஜ்ய தேர்தல்கள், ப்ரைமரி தேர்தல்கள் நடப்பதாலும் இந்தக்கட்சி 'யந்திரம்' அவசியம் என ஆதரிக்கிருர்கள். ஆனுல் 4 வருஷத்திற்கொரு தரமே தேசீய கன்வென்ஷன் கூடுவதால் இடைக்காலத்தில் அதற்கான ஸ்தாபனம் தூங்கி வழிகிறது. ஜனுதிபதி தேர்தலுக்கிடையே தேசீயக் கமிட்டி சந்தடி யின்றி வேலை செய்கிறது. ஆனுல்

ராஜ்யக் கமிட்டிகளும் ஸ்தலக் கமிட்டிகளும் இடை விடாமல் வேலை செய்து வருகின்றன.

இந்தக் கட்சி 'யந்திரம்' வேலை செய்வதற்கு ஏராளமான அரசியல் ஊழியர்கள் வேண்டியிருக்கிறது. இந்த ஊழியத்தில் ஈடுபடுபவர்கள் அரசியல் மூலமே பிழைப்பவர்கள். இவர்கள் 'யந்திரத்தை' இயக்கி வருவதால் ஒழிந்தபோது அரசியலில் ஈடுபடுபவர்களின் சீர்படுத்தும் நோக்கம் ஈடேறுவதில்லை. யந்திரத்தை ஓட்டுபவர்கள் கஷ்டப் பட்டு வேலை செய்கிருர்கள்; சமூகத்தின்தேவைகளை அறிகிருர்கள். எதிரிகளின் நடவடிக்கை கள் பற்றி உளவறிகிருர்கள்; சட்டம் அமூல் நடத்துவதனுல் எந்தெந்த வர்க்கங்கள் பாதிக்கப்படுகின்றன என்பதை அறிந்து கொள்கிருர்கள். சட்டசபை அங்கத்தினர்களுக்கும் உத்யோகஸ்தர்களுக்கும் பொது வாழ்வில் உள்ளவர்கள் பற்றியும், தகவல்கள் சேகரித்து அவர்களுடைய விஷய ஞானத்தை வளர்க்கிருர்கள். இந்த ஊழியர்கள் பெறும் ஊதியம் பலதரப் பட்டவை. இவர்களில், சிலரின் உறவினர், அரசாங்கத்தில் சம்பளம் பெறுபவர்களாயிருக்கலாம். மற்றும் அரசாங்கத்தின் அரசியல் அலுவல்கள் நடப்பதில், கேந்திரமான இடங்களில் வேலை பார்ப்பவர்களா யிருக்கலாம். வியாபார அனுமதிச் சீட்டோ, சர்க்கார் காண்டிராக்டோ விரும்பும் ஸ்தாபனங்களும் அல்லது போலீஸ் தொல்லை ஏற்படாமல் பாதுகாப்பு விரும்பும் ஸ்தாபனங்களும், கட்சி ஸ்தாபனங்களுக்கு அளிக்கும் பண உதவியால் இவர்கள் பங்கு பெறலாம்.

சிறப்பாக இயங்கும் யந்திரங்களுக்கு மேலாக உள்ள தலைவர், ஸ்தாபனத்தில் பதவி வகிக்கவேண்டும் என்கிற அவசியம் இல்லை. ஸ்தாபன நிர்வாகிகளை ஒழுங்காக நடத்தும் சூத்திரக் கயிறு இவர் கையிலிருக்கும். இவர் ஸ்தாபன உத்தியோகஸ்தர்கள் கட்டுப்பாடாக நடந்துகொள்ளும்படி பார்த்துக்கொள்ளுவார். கட்சி ஆட்கள் ஒன்றுபட்டு உழைத்து நிச்சயமாக வெற்றி காண இவர் உதவுவார்.

ஸ்தாபனத் தலைவரின் கடமை, ஏதாவது ஒரு கோஷ்டி அரசியல் ஆதரவு கோருகிறதா என்று கவனிக்க வேண்டியது.

அவர் ஏழைகள், அன்னிய நாட்டில் பிறந்தவர்கள், சில்ல றைக் குற்றம் செய்யக்கூடியவர்களின் நண்பர். அனேகமாக இத்தலைவரின் தந்தையே அன்னிய நாட்டில் பிறந்தவராயிருப் பார். அவரே குடிசையில் பிறந்து, அவரது திறமையினாலும் ஏழைகள் நலனை அறிந்ததனாலும், கட்சி யந்திரத்தின் தலைமை தாங்குபவராக வந்திருக்கலாம்.

இது சம்பந்தமாகப் புகழ் பெற்ற அரசியல் நிபுணர் ஜார்ஜ் பிளங்கிட் என்பவர், பின் வருமாறு கூறியுள்ளார்: "என் ஜில்லாவில் ஏதாவது ஒரு குடும்பம் வறுமையில் வாடுகிறது என்றால், அதுபற்றி தர்ம ஸ்தாபனங்கள் தெரிந்து கொள்ளு வதற்குள் நான் அறிந்துகொண்டிருப்பேன். நானும் என்னு டைய ஊழியர்களும் முதன் முதலில் அக்குடும்பத்திற்கு உதவிபுரியச் சென்று விடுவோம். இம்மாதிரி நிலையிலுள்ளவர் கள் பற்றி அறிந்து வர எங்களிடம் தனிப்படை இருக்கிறது. இதன் விளைவாக ஏழைகள் ஜார்ஜ் பிளங்கிட்டைத் தங்கள் தந்தையாகப் பாவிக்கின்றனர். கஷ்டம் வரும்போது அவரை நாடிச் செல்கின்றனர். தேர்தல் தினத்தன்று அவர்கள் அவரை மறப்பதில்லை."

கஷ்டப்படுபவர்கள் ஏழைகளாயிருந்தாலும், பணக்காரர் களாயிருந்தாலும், அவர்களுக்கு ஆறுதலளிப்பதே, கட்சித் தலைவர்களுடைய வேலை.

ஒருபுறம், அவர், குடியேறி வந்துள்ள ஸ்திரி ஒருத்தி, தன் மகன் ஏதோ சிக்கலில் அகப்பட்டுக் கொண்டான் என்று மனம் கலங்கி நின்றால் அவளுக்கு உதவிபுரிந்து அவள் துயரத் தைத் துடைப்பார்; மதிப்பு வாய்ந்த ஸ்தாபனங்கள் புறக் கணித்த கிழ தம்பதிகளுக்கு, உணவும் நிலக்கரியும் அனுப்பு வார்; கட்சிச் சிப்பந்தி ஒருவனின் மகனுக்குப் போலீஸ் படை யில் வேலை தேடித் தருவார். தாராள தர்ம ஆர்வத்தினாலோ நியாய உணர்வினாலோ உந்தப்படாவிட்டாலும் இம்மாதிரி தாராளமாக உதவி புரிவதால் நலம் பெற்றவர்கள் இவரிடம் மனமுவந்து விசுவாசமாயிருப்பதுடன் அவர்கள் தம் உறவினர்

களின் ஓட்டுகள் யாவற்றையும், தலைவர் கூறும் அபேட்சகர்களுக்கே கொணர்ந்து சொரிவார்கள்.

மற்றொருபுறம், இவர், பணக்காரர்கள், அவர்களுடைய கூட்டாளிகள் முதலியோர்களுடைய கஷ்டங்களையும் நீக்குகிறார். உதாரணமாக கண்டிராக்டர், டிராக்டர் விற்பவர்கள், நிலச்சுவான்தார்கள் விஷயத்திலும், இவர்களுக்கும் கீழ்ப்பட்டவர்கள் விஷயத்திலும் சட்டத்தின் பிடியைச் சிறிது தளர்த்திவிட்டால்அவர்கள் சுகமாக தொழில் நடத்தலாம். தலைவரின் நண்பர்கள், சிஷ்யர்கள் உதவியால் ராஜ்யத் தலைநகரிலோ, நாட்டுத் தலைநகரிலோ, பதவி வகிப்பவர்களிடம் இவர்கள் சார்பாக ஒரு வார்த்தைசொல்லி வைப்பார். பணமுள்ளகட்சி பக்தர்களிடமிருந்து பணத்தை வாங்கித் தனது ஊழியர்களுக்கும் ஏழைகளுக்கும் பகிர்ந்து கொடுப்பார்.

பணம் உடையவர்களைப் பறித்து ஏழைகளுக்குக் கொடுக்கும் இந்தப் பழங்கால முறை தற்சமயம் பயனற்றதாய் போய்விட்டது. ஏனெனில் இப்பொழுது சமூகப் பாதுகாப்பு முறைகளிருக்கின்றன. குடியேறுபவர்களைக்காக்கும் சட்டங்கள் இருக்கின்றன. தகுதிக்கேற்றபடி பதவி அளிக்கும்முறை அமுலிலிருக்கிறது. ஏழைகள் எண்ணிக்கை குறைவு. இந்நாட்டிற் புதிதாகக் குடிபுகுந்து தவிர்ப்பவர்களும் குறைவு. முன்மாதிரி இவர்களுக்குப் பாதுகாப்பளிக்க, கட்சி ஆட்கள் முன்வர வேண்டியதில்லை. கட்சிக்காக உழைத்து உதவியவர்களுக்குப் பரிசாக அளிப்பதற்குத் தக்க உத்யோகங்களும் அவ்வளவு இல்லை. அனேக இடங்களில் இன்னமும் போலீஸ் இலாகாவில் ஊழல் இருந்து வருகிறது. மேலும் இப்போலீஸார் கட்சி யந்திரத்தின் தாஸர்கள். 1952—ல் நடந்த தேர்தலிலிருந்து, பொருளாதார மந்தம் நிலவிய காலத்தில் பெரு நகரங்களில் ஜனநாயகக் கட்சிக்கு மிகுந்த பலம் வாய்ந்திருந்தும் அவர்கள் செல்வாக்கு மங்கி விட்டதைக் கண்டோம்.

பணம் பெறுமல் உழைப்பவர்கள் படை திரட்ட இரண்டு கட்சிகளும் மிகுந்த கஷ்டப்பட்டு உழைத்திருக்கின்றன. தமா

ஷாகக் கட்சி வேலை செய்து கூட்டங்களுக்கும், மகாநாடுகளுக்கும் செல்ல விரும்பும் உற்சாகிகளைக் கட்சியினர் வரவேற்கின்றனர். 1952-ல் ஐஸன்ஹோவர், ஸ்டீவன்ஸன் இருவரும், பல உற்சாகிகளை, அதுவும் யுவர்களைப் பெரிதும் கவர்ந்தனர்.

எதிர் காலத்தில் இந்த இலவச உற்சாகிகள் மக்களிடையே அதிக வேலை செய்து ஓட்டுச் சேகரிக்க உதவலாம். இப்படி நேர்ந்ததால் அரசியல் சக்தியின் அடி ஊற்றில் நிலைமை முற்றிலும் மாறலாம். முன்பெல்லாம் அதிகாரசக்தி அனுதரவான ஏழைகளிடமிருந்து வந்தது. அவர்களை அன்பினால் கவர்வது சாத்தியமாயிருந்தது. அவர்களை வஞ்சத்தில் தோய்ந்த அரசியல் வாதிகள் பட்டியிலடைத்து ஓட்டுச்சாவடிக்குக் கொண்டு வரமுடிந்தது. ஆதரவற்ற அனுதைகள் எண்ணிக்கைகுறைந்து விட்டதால், இந்த ஊற்று வற்றிப் போய் விட்டது. 1952-ல் அதிகாரத்தின்உறைவிடம் ஜனாதிபதி பதவிக்குப் போட்டியிட்ட அபேட்சகர்களிடமிருந்தது. இவ்விருவரும் அரசியல் யந்திரத்தைத் திருப்தி செய்வதற்காகப் பொறுக்கப் படவில்லை. சுயேச்சை ஓட்டர்கள், மத்தியதர வகுப்பினர், பணமின்றி கட்சி வேலை செய்பவர்களைக் கவர்வதற்காகவே, இவர்கள் நியமனம் செய்யப்பட்டார்கள். இந்தத் தேர்தலில் உற்சாகப்பட்டவர்கள் நன்றியதலினுலோ, பரிசு பெறும் ஆர்வத்தினுலோ, இவ்விரு அபேட்சகர்களை ஆதரிக்க வில்லை. உண்மையில் அவர்கள் மீதிருந்த அளவற்ற மதிப்பினுல் உடனிருந்து உழைக்க முன் வந்தார்கள். இந்த மாறுதல் நிலைத்திருக்குமானுல், அரசியல் துறையில் நீடித்து நிலவி வரும் சில ஒழுங்குகள், சம்பிரதாயங்கள், மாறுதலடைய வேண்டிவரும்.

தேர்தல் தினத் தன்று ஓட்டுப் போடுவதில் அரசியல் கட்சிகளுக்கு முக்கியமான பங்கு இருக்கிறது.

அமெரிக்காவில் ஓட்டுப் போடும் சாவடிகள் 130,000 இருக்கின்றன. ஒவ்வொன்றிலும் 300-லிருந்து 1,000 பேர்வரை ஓட்டுப் போடுவார்கள். இச் சாவடிகள் பள்ளிக் கூட்டங்களிலோ, காலியான கடைகளிலோ, தீ யணைக்கும் காரியாலயங்

களிலோ, போலீஸ் நிலையங்களிலோ அமைந்திருக்கும். பெண்களுக்கு ஓட்டுரிமையிருப்பதால் 1920-க்கு முன் இருந்ததைவிட ஓட்டுச் சாவடிகள் மிகவும் சுத்தமாக இருக்கின்றன.

தேர்தல் அதிகாரிகளை இரு பெரிய கட்சியினரும் சேர்ந்து நியமிக்கிறார்கள். இவர்கள் சம்பளத்தை அரசாங்கம் கொடுக்கிறது. இவர்கள் ஓட்டர் ஜாபிதா சரியாக இருக்கிறதா என்று பார்ப்பார்கள். ஒவ்வொரு ஓட்டருக்கும் ஒரு ஓட்டுச் சீட்டுக் கொடுப்பர். ஓட்டுப் பெட்டியிலும், ஓட்டுப் பதிவு யந்திரத்திலும் மோசடி நடக்காமல் பார்த்துக் கொள்வார்கள். கடைசியாகத் தேர்தல் தினத்தன்று, மாலை வரையில் உட்கார்ந்து, ஓட்டுகளைக் கணக்குச் செய்து முடிவு தெரிவிப்பார்கள். ஒவ்வொரு ஓட்டுச் சாவடியிலும் இக் கட்சியினரும் காவலாட்கள் நியமிக்கின்றனர். இவர்கள், ஓட்டர்கள் பற்றி சந்தேகம் ஏற்பட்டால் அந்த ஓட்டரைச் சோதிக்கும்படி கேட்பார்கள். இவர்கள் சம்பளத்தைக் கட்சியே ஏற்றுக் கொள்கிறது.

ஓட்டு ரகஸ்யமாகப் போடவேண்டுமென்பது அமெரிக்காவில் நன்கு நிலைத்துவிட்டது. ஓட்டர் சரியாக ஓட்டுச் செய்கிறாரா என்பதைக் கண்டுபிடிக்கக் கட்சிகள் வகை செய்திருந்தாலும், பொதுவாக இம்மாதிரி கண்காணிப்பு நடைபெறாமல் எதிர் கட்சிக் காவலாளர் தடுக்கிறார்கள்.

அமெரிக்க ஓட்டு முறையில் பெரிய குறைபாடு அதிகப்படியான பதவிகளுக்கு ஒரே சமயத்தில் ஓட்டுச் செய்ய வேண்டி இருப்பதுதான். இதனால் ஓட்டுச் சீட்டு நீண்டதாயிருக்கிறது ஒரு சீட்டில் 50 லிருந்து 100 வரை கூட ராஜ்ய, ஸ்தல ஸ்தாபனங்களுக்கு ஓட்டுச் செய்யவேண்டி இருக்கிறது. இதனால் ஓட்டுப் போடுபவர் திக்குமுக்காடிப் போகிறார். ஒரு சமயம் ஓட்டுச் சீட்டு 12 அடி நீளமிருந்தது ; இதில் 500 அபேட்சகர்களின் பெயர்கள் அச்சிடப்பட்டிருந்தன. ஓட்டர்கள், ராஜ்ய கவர்னர், 6 ராஜ்ய அதிகாரிகள், கவுண்டிகமிஷனர்கள், நீதிபதிகள், சர்க்கார், ஜில்லா, வக்கீல்கள், பொக்கிஷதார், மற்றும்பல பதவிகளுக்கான அபேட்சகர்களுக்கு ஓட்டுச் செய்ய வேண்டி

இருக்கிறது. இது தவிர ஒரு மேயர், ஆல்டர்மென்கள், பள்ளிக் கூட நிர்வாகிகள், நகர நீதிபதி, அஸெஸ்ஸர்கள், வரிவசூல் செய்வோர், மற்றும் பல பேர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

அரசியலையே தொழிலாகக் கொண்டவருக்குத்தான் இந்த பதவிகளுக்கான அபேட்சகர்களில், சிலரையாவது தெரிந் திருக்கக் கூடும். இவருக்குத் தெரிந்திருப்பதற்குக் காரணம், அவர்களை நியமனம் செய்யும்படி, இவரே சிபாரிசு செய்திருப் பார். ஓட்டர்கள், ஜனாதிபதி, கவர்னர், மேயர், மற்றும் சிலருக்கு ஓட்டுச் செய்து விட்டு, மற்றவர்களுக்கு ஓட்டுச் செய்யாமலோ அல்லது கண்மூடிக்கொண்டோ ஓட்டுச் செய்துவிடுவார்கள்.

நீண்ட ஓட்டுச்சீட்டை பழங்கால அரசியல்வாதி விரும்பிய தற்குக் காரணம், மக்களுக்கு பதில்சொல்ல வேண்டிய பொறுப் பிலிருந்து விடுபடலாம் என்பதுதான். தங்கள் கட்சியை ஆதரிப் பவர்களுக்கு இந்தச் சில்லறைப் பதவிகளைக் கொடுத்துத் திருப்திசெய்கிறார்கள்.

இந்தப் பதவிகளைப் பற்றிப் பொதுமக்களுக்கு ஞாபகமோ, உணர்வோ கிடையாது. அதனால் மக்கள் கண்ணை மூடிக் கொண்டு, இந்த உத்தியோகஸ்தர்களைத் தேர்ந்தெடுக்கின்ற னர். மக்களால் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதால், இந்தச் சில்லறை உத்தியோகஸ்தர்கள், தாங்கள் அரசியல் தலைவர்களின் நண்பர்களா யிருப்பதனால், மக்கள் தேர்ந் தெடுத்த மேயர் கவர்னர் முதலியோருக்கு உட்பட்டவர்களல்ல.

இதனால் சமஷ்டி தேர்தலைப்போல், ராஜ்ய, ஸ்தல தேர்தல் கள், அவ்வளவு ஜனநாயகமுறைக் கொத்தவை யல்ல. தேசீய அடிப்படையில் ஓட்டர்கள் ஜனாதிபதி, உபஜனாதிபதி பிரதி நிதிகள் சபை உறுப்பினர், மூன்று தேர்தல்களில் இரண்டில் செனட்டுக்கும் ஓட்டுச் செய்ய வேண்டும். இந்தப் பதவிக ளெல்லாம் முக்கியமானவை யாகையால் ஜனங்களுக்குத் தெரி யும்; சரிவர நடந்து கொள்ளும்படி ஓட்டர்கள் அவர்களுக்குப் பொறுப்புக் கட்டலாம்.

ஓட்டர்கள் ஓட்டுச் செய்யவேண்டிய பதவிகள் குறைவா யிருக்கவேண்டும் எனும் கிளர்ச்சி 20-ம் நூற்றுண்டு ஆரம்பத் தில் தொடங்கிற்று. இந்தக்கிளர்ச்சிக்கு வுட்ரோவில்ஸன் தான் முதல் தலைவர். பல பதவிகளுக்குத் தேர்தல் நடத்துவதற்குப் பதிலாக ஜனுதிபதி செய்வது மாதிரி கவர்னரோ, மேயரோ மற்றப் பதவிகளுக்கு ஆட்களை நியமித்துவிடலாம், என்பது தான் கிளர்ச்சியின் நோக்கம். இப்படிச் செய்தால் கவர்னரோ, மேயரோ நிர்வாகத்திற்குப் பொறுப்பு வகிக்கலாம். ஆனுல், அரசியல் வாதிகள் எல்லாப் பதவிகளுக்கும் தேர்தல் நடப் பதையே விரும்புகின்றனர். ராஜ்ய அரசாங்கத்தை ஜனங்கள் அவ்வளவாகக் கவனிப்பதில்லை. அதில் அவர்களுடைய அக் கரையும் மிகக் குறைவு. ஆகையினுல் இங்கு முன்னேற்றமும் நிதானமாகத்தானிருக்கிறது. நகரங்களில் முன்னேற்றம் சிறப் பாயிருக்கிறது. 1910-லிருந்ததைவிட இப்பொழுது பல உத்தி யோகங்களுக்கு மேயரே ஆட்களை நியமிக்கிருர். பல நகரங் களில் கமிஷன் அல்லது மானேஜரே நிர்வாகம் வகிப்பதால், இங்கெல்லாம் ஓட்டுச் சீட்டில் குறைந்த பெயர்களே இருக்கின் றன. மக்களும் குழப்பமின்றி ஓட்டுச் செய்ய முடிகிறது.

நீண்ட அபேட்சகர்கள் ஜாபிதா இருப்பதனுல், ஓட்டுப் போடுபவர்கள், குறிப்பாக சுயேச்சை ஓட்டர்கள் எண்ணிக் கையே சுருங்கிவிட்டது எனக் கூறலாம். நன்கு தேர்ந்து ஓட்டுச் செய்ய விரும்பும் ஓட்டர் ஒரு டஜன் அபேட்சகர்களின் பெயர்களைப் பார்த்தால் எரிச்சலடைகிருர். ஆனுல் கட்சி ஆர்வ முள்ள ஓட்டருக்கு நீண்ட ஜாபிதா சகஜமாகத் தோன்றுகிறது.

ஓட்டர்களில் முக்கால்வாசிப் பேர்கள் பரம்பரையாக ஒரே கட்சியை ஆதரித்து வருபவர்கள் என்று கூறப்படுகிறது. இவர் கள் எதிர்க் கட்சிக்கு ஓட்டுச் செய்வது பாபச் செயல் எனக் கருதுகின்றனர். ஆகையால் தேர்தல்களின் முடிவுகள் இரு கட்சி முறை நிலவுமிடங்களில் கட்சிச் சார்பற்ற கால்பங்கு ஓட்டர்கள் கையிலிருக்கின்றன. ஒரே கட்சி நிலவுமிடங்களில் தங்களுக்குள்ளேயே பல கட்சிகள் மூண்டிக் கொண்டிருந்தா

லும் மதிப்பு மிக்க தங்கள் கட்சிக்கு வெளியேயுள்ளவர்கள் ஜெயிக்க விடமாட்டார்கள்.

தேசீயத் தேர்தல் முடிவுபற்றி திட்டமாக எதுவும் கூற முடியாத நிலை இருக்கிறது. சுயேச்சையாளர்களால் தான். ஆனாலோ இந்த சுயேச்சையாளர்கள் எண்ணிக்கை பெருகி வருவதாகத் தெரிகிறது.

தேசீய நெருக்கடி ஏற்படும் சமயங்களில் அரசியல் கட்சிகள் தங்கள் தலைவரின்—ஜனாதிபதியினுடையவோ அல்லது அப்பதவிக்கு அபேட்சகராக நிற்பவருடையவோ—சிறப்பியல்புகளிலிருந்து உற்சாகமும், சக்தியும் பெறுகின்றன. இவருடைய மகத்தான கியாதிதான் வீட்டில் ஓய்வு பெற்றிருக்கும் ஓட்டர்களை உந்தி, தேர்தல் தினத்தன்று ஓட்டுச் சாவடிக்கு இழுக்கிறது. இவர்தான், தன் எதிர்க்கட்சித் தலைவரைவிட அதிகப்படியான சுயேச்சை ஓட்டுகளைப் பெறவல்லவர்.

தேர்தல் முடிந்து ஜனாதிபதி பதவி ஏறின பிறகு, வெற்றி பெற்ற இவர், தான் விரும்பும் சட்டங்கள் காங்கிரஸில் நிறைவேறுவதற்கு வழிசெய்ய வேண்டும். நெருக்கடியான சமயங்களை சமாளித்து, சரித்திரத்தில் இடம்பெற ஒவ்வொரு ஜனாதிபதியும் விரும்புகிறார். தேர்தல் பிரசாரத்தின்போது, ஏதேதோ செய்வதாக, அசட்டுத்தனமாக வாக்குறுதி யளித்த விஷயத்துக்கும், நெருக்கடி சமயத்தில், சரித்திரப் பிரசித்திப் பெறத் தக்க செயல் புரிவதற்கும், ஜனாதிபதி எடை போட்டுப் பார்த்தாரானால், அவர் பழைய வாக்குறுதியை விட, எதிர்காலச் சிறப்பையே நிச்சயம் விரும்புவர்.

இந்த முயற்சியில், அவர் காங்கிரஸில் உள்ள தலைவர்களையும், தனது கட்சித் தலைவர்களையும் சரிக்கட்டிக் கொள்ள வேண்டும். தனது கட்சித் தலைவர்களே, இவர் வெற்றி பெற்றதுபற்றி, இவர்மீது பொறாமை கொண்டிருக்கலாம். ஆகவே இவர்களையும் தோல்வியுற்ற எதிர்க்கட்சியினர்களையும் சரிக்கட்டிக் கொண்டு போகவேண்டியிருக்கிறது.

அமெரிக்க யுவர்கள் நெருக்கடியைக் கண்டு அஞ்சுபவர்களல்ல. அதன் சவாலை ஏற்கும் ஆற்றலுள்ளவர்கள். இம் மாதிரி சமயங்களில் தலைவர்கள், சிறப்பாக நடந்து கொள்வதையே, அவர்கள் விரும்புகிறார்கள். முதியோரான அமெரிக்கர்கள் 1920-ம் ஆண்டிலிருந்த நிலைமையை நினைவு கொள்வார்கள். அச்சமயம், முதல் மகாயுத்தம் முடிந்திருந்தது. மக்கள் எப்புறமும் செல்லாமல் நிம்மதியாயிருந்தால் போதும் என்றே நினைத்தனர்.

அமெரிக்காவில் ஒரு விசித்திரமான நிலையை விமர்சகர்கள் கவனித்திருக்கலாம். அபாயம் எதுவுமில்லை என்று மக்கள் நினைக்கும் சமயத்தில் கட்சிகள் தலைமைப் பதவிக்கான யோக்ய தாம்சங்கள் இல்லாதவர்களையே தலைவர்களாகக் கொள்கிறார்கள். ஆனால், கொந்தளிப்பும் ஆர்ப்பாட்டமும் கிளம்பும் சமயம் எப்படியோ எங்கிருந்தோ லிங்கன் மாதிரி மாவீரரையோ, வில்ஸன் மாதிரி மேதாவிகளையோ தோற்றுவிக்கிறார்கள்.

இதில் ஒன்றும் அவ்வளவு திகைப்புக்கு இடமில்லை எனச் சில ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். ஜனாதிபதியின் இல்லமாகிய வெள்ளை மாளிகை உலகச் செய்திகளின் உறைவிடம், வெளிநாட்டு, உள்நாட்டுச் செய்திகள், வெளிப்படையானவையும், ரகஸ்யமானவையும் யாவும் ஜனாதிபதிக்குச் சலித்துப் புடைத்துதிருத்தமாகக் கொடுக்கப்படுகின்றன. அனேக ஜனாதிபதிகள் பதவிக்கு வருகையில் சாமான்யமாயிருந்தாலும், உலக நிலவரங்கள் அலை அலையாக அவரை வந்து மோதியதும் அவர் கணப்பொழுதில் கியாதிபெற்ற ராஜதந்திரியாகிவிடுகிறார். அபாய நெருக்கடி இல்லாத சமயங்களில் ஜனாதிபதி, சுக புருஷராக இருந்து அவருடைய சிறப்பியல்புகள் வெளித் தோன்றாதனவாயிருக்கலாம் என்று கூறுகிறார்கள். ஆனால் புயல் கிளம்பியதும், இதே மனிதர் விழித்தெழுந்து செயல் புரிவதற்கான சாதனங்களைப் பயன்படுத்தி, சாமான்ய மானவர் என நினைத்த இவருடைய நண்பர்களே பிரமிக்கும்படி செயல் புரியலாம்.

தற்கால சம்பவங்கள் மூலம் பெரிய இரு கட்சிகளின் அமைப்பும் நடைமுறையும் மாறுதலடைந்து வரலாம். 1930-லிருந்து இதுவரையில் நெருக்கடியான நிலைமை நீடித்து வருகிறது. இதே நிலை இன்னும் பல்லாண்டுகளுக்கு நீடிக்கும் போல் தோன்றுகிறது. இதன் விளைவாக வெள்ளை மாளிகையிலும் காங்கிரஸிலும் பொதுஜனப் பிரியமான தலைவர்கள் நீடித்து இருந்து வருவதற்கான அவசியம் ஏற்படுகிறது. டெலிவிஷன், ரேடியோ இரண்டும் வந்த பிறகு திரை மறைவில் சதி செய்வதற்குச் சந்தர்ப்பங்களும் குறைவு; அதற்கான வெகுமதியும் குறைவு. வாழ்க்கைத்தரம் உயர்ந்திருப்பதால் பாமர மக்கள் முன்பு மாதிரி அரசியல் தலைவர்களை நம்பி வாழவேண்டிய அவசியம் குறைந்துவிட்டது. ரூஸ்வெல்ட் ஆபத்துக் காலத்தில் உதவியதால் அவரைப் பின்பற்றிய மாதிரி இனி அவர்கள் செய்வதற்கு அவசியம் இல்லை. இப்பொழுதோ என்றால், பாமர மக்கள் வசதி நிறைந்த வீடுகளில் வசிக்கின்றனர். அவர்களை மயக்கி, ஓட்டுச் சாவடிக்கு இழுப்பதற்கு அரசியல் தந்திரங்கள் மாற வேண்டும். தேர்தல்களில் இன்றும் பணத்திற்கு மிகுந்த சக்தி இருக்கிறது. பணம் கொடுத்து உதவுபவர்கள் இன்று இரு கட்சிகளிலும் மிகுந்த செல்வாக்கு உடையவர்களாய் இருக்கிறார்கள். முன்பைவிட லஞ்சத்திற்கு அதிகக் கவர்ச்சி இருக்கிறது.

ஓட்டர்கள் ஆதரவைத் திரட்ட கட்சிகள் புது முறைகள் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கின்றன. அரசியல் பண்டிதர்கள், ஸ்தாபனத்தை வலுப்படுத்தி, சீரிய வழிகளைக் கையாளத் தூண்டுகிறார்கள். திட்டங்களை ஜனநாயக முறையில் விவாதித்து உருவாக்க வேண்டும் என யோசனை கூறுகிறார்கள். கன்வென்ஷன், ஜனநாயக முறையில் அமைத்தால், கட்சி உறுப்பினர் ஒன்றுபட்டு காங்கிரஸிலும் சட்டசபைகளிலும் இவர்கள் கட்சியை அதிப்பேர் ஆதரிக்கலாம் என இவர்கள் கருதுகின்றனர். புது வழிகள் காண கட்சித் தலைவர்கள் முயற்சித்து வருகின்றனர் என்பதற்கு அறிகுறிகள் தென்படுகின்றன. பல முக்கியமான வகைகளில் சம்பிரதாயமான முறைகள் மாறுதல் அடையலாம்.

# 4. நிர்வாகம்

“நிர்வாக அதிகாரம் அமெரிக்க ஜனாதிபதியிடம் ஒப்படைக்கப்பட வேண்டும்” என்பது அரசியல் சாஸனத்தின் ஷரத்து. இந்த நிர்வாக அதிகாரம் என்ன என்பது பற்றி ஜனாதிபதிக்கும் காங்கிரஸுக்கும் ஏதாவது ஒருவிதமான முரண்பாடு எப்பொழுதும் இருந்து கொண்டே வந்திருக்கிறது ஜனாதிபதியின் அதிகாரம் பற்றி எவ்வித நிர்ணயமில்லாததாலும், இவ்வதிகாரம் முழுவதும் அவர் ஒருவர் கையிலேயே இருப்பதாலும் விதிகளில் குறிப்பிடாத அசாதாரண நிலைமையைச் சமாளிப்பதற்கு வேண்டிய அதிகாரத்தை அவர் தாமே மேற்கொள்ளுகிறார்.

அரசியலமைப்பு ஜனாதிபதிக்கு ஏதோ சில குறிப்பிட்ட அதிகாரங்களை அளித்திருக்கிறது என்பது உண்மை. ஒரு மசோதாவை அவர் நிராகரித்தால் காங்கிரஸ் ஓட்டு பலத்தில் ஆறில் ஒரு பங்கை. அவர் பிரயோகித்ததற்கு சமம். அவர் ஆதரிக்கும் மசோதாக்களுக்கு ஒரு அதிகப்படி ஓட்டு இருந்தாலும், காங்கிரஸ் நிறைவேற்றி விடலாம். ஆனால் அவர் நிராகரித்த மசோதாக்கள் நிறைவேற வேண்டுமானால், காங்கிரஸில் மூன்றில் இரண்டு பங்கு அங்கத்தினர்கள் அதை ஆதரிக்க வேண்டும்.

அயல்நாட்டு விஷயங்களினால் தானாகவே நடவடிக்கை மேற்கொள்ளும் உரிமை ஜனாதிபதிக்கு இருக்கிறது. ஜனாதிபதி ஏற்பாடு செய்த உடன்படிக்கையை செனட் தடை செய்து விடலாம். ஆனால் அதுவாக எந்நாட்டுடனும் உடன்படிக்கை செய்துகொள்ள முடியாது. ஒரு உடன்படிக்கை செய்யும்படி ஜனாதிபதியை நிர்ப்பந்தம் செய்யவும் முடியாது.

இம்மாதிரியே ராணுவத்தினுடையவும் நிர்வாகவர்க்கத்தினுடையவும் உயர்தர அதிகாரிகளையும் செனட் அங்கீகாரம் பெற்றால் ஜனாதிபதியே நியமிக்கலாம். சிலசமயம் ஒரு செனட் அங்கத்தினர் குறிப்பிட்ட ஒரு நபரை ஒரு பதவிக்கு நியமிக்கும்

படி ஜனாதிபதிக்கு சிபாரிசு செய்யலாம். செனட்டின் ஆதரவு முக்கியமாயிருப்பதால், அந்த செனட்டரின் சிபாரிசை ஜனாதிபதி சுலபமாகத் தள்ளிவிடமுடியாது. செனட்டருக்கு மரியாதை எனும் பழக்கம் ஒன்றிருக்கிறது. இதன்படி பெரும்பான்மைக் கட்சியைச் சார்ந்த ஒரு செனடர் தனது ராஜ்யத்தில் உள்ள சமஷ்டி சர்க்கார் உத்தியோகப் பதவிக்கு ஜனாதிபதியால் நியமனம் செய்யப்பட்ட ஒருவனை, தனக்கு தீங்கு செய்யக்கூடியவன் என்று சொல்லி நியமனத்தைத் தடைசெய்துவிடலாம். இது தெரிந்த உடன் மற்ற செனடர்களும் இவரை ஆதரித்து ஜனாதிபதியின் நியமனத்தை நிராகரித்து விடலாம். ஆனால் இந்தப் பழக்கத்திற்கும் ஒரு விலக்கு உண்டு. குடியரசுக் கட்சியினர், அதிகாரத்திலிருக்கையில் தெற்கு ராஜ்யங்களில் தங்களுக்கு வேண்டியவர்களையே சமஷ்டி உத்தியோகப் பதவிகளுக்கு நியமிக்கலாம். இப்படியே ஜனநாயகக் கட்சியினரும், தாங்கள் அதிகாரம் வகிக்கையில் வடக்கே குடியரசுக் கட்சியின் ஆதிக்கத்திலுள்ள ராஜ்யங்களில் சமஷ்டி உத்யோகப் பதவிகளுக்குப் பிடித்தவர்களை நியமிக்கலாம்.

ஜான்லாக் எனும் ஆங்கிலேய தத்துவாசிரியரின் கருத்துக்கள், அமெரிக்க அரசியலமைப்பைவகுத்தவர்களுக்குப் பேருதவியாயிருந்தன. அவர் தனது 'ஆட்சி தத்துவ விளக்கம்' எனும் புத்தகத்தில், இங்கிலாந்தில் நிர்வாகத்தின் அதிகாரங்கள் தர்க்க நியாயத்திற்கு ஒவ்வாமலமைந்திருந்ததைப் பற்றிப் பின்வருமாறு எழுதியிருக்கிறார்.

"நமது நாட்டில் அதிகார உரிமை பெரிதும் மிகுந்த ஞானமுள்ளவர்களிடமும், சிறந்த அரச குடும்பத்தினரிடமும் இருந்து வந்திருக்கிறது. ஏனெனில் அவர்கள் செயலின் நோக்கம் பொதுநலனைக் கவனிப்பதே. இந்த அரச குடும்பத்தினரிடம் மக்கள் அபிமானமாயிருந்தால் அவர்கள் சட்டத்திற்கு மாறாக நடந்தபொழுதும்கூட அவர்கள் செயல்களை மக்கள் ஆதரிக்கின்றனர். சட்டத்தின் லட்சியமும், முடிவும் பொது நலன்தான். இந்த நலனுக்குக் கேடு வராமல் அவர்கள்

நடந்துகொண்டதனால் உண்மையில் அவர்கள் செயல் சட்டத்திற்கு முரணாகாது.''

மேலும் சட்டசபையின் அதிகாரமே முதன்மையானது. என்று லாக் குறிப்பிட்டிருக்கிறார். "பொது மக்கள் அதிகாரத்தை ஒரு தடவை சட்டசபைக்கு அளித்து விட்டால், அது புனிதமானது ; அதை மாற்ற முடியாது,'' என்றும் கூறுகிறார், அமெரிக்கா, இங்கிலாந்து இரண்டு நாடுகளின் அரசியல் சரித்திரமும் இந்த முரணான உறவின், விசித்திர வேலை பற்றியதாகும்.

அமெரிக்காவில் குறிப்பாக ரேடியோவும், டெலிவிஷனும் மக்கள் சாதனமானதன் விளைவாக, மக்கள் ஜனாதிபதியின் செயல்களை நெருங்கி அறிந்துகொள்ளத் தொடங்கி விட்டனர். இதன் விளைவாக நிர்வாக அதிகாரம் பெரிதும் ஜனாதிபதியிடம் இருக்கிறது என்று பொது மக்கள் நினைக்கின்றனர். நமது சரித்திரத் தொடக்கத்தில்கூட ஜனாதிபதி சில சந்தர்ப்பங்களில் சட்ட சம்மதமில்லாமல், கூட்டத்திற்கு முரணாகவும் நடந்து கொண்டிருக்கிறார்.

உதாரணமாக 1793-ல் பிரான்ஸ், பிரிட்டன்மீது போர் தொடுத்த சமயத்தில் ஜனாதிபதி வாஷிங்டன் அமெரிக்க நாடு நடுநிலைமை வகிக்கும் என அறிவித்தார். அமெரிக்காவுக்கும் பிரான்சுக்கும் பரஸ்பர உதவி, உடன் படிக்கை இருந்த போதிலும், பிரான்ஸ் வலுச்சண்டைக்குப் போனதால், அமெரிக்கா உதவி புரிய வேண்டியதில்லை என்று அவர் நிச்சயம் செய்து விட்டார். வாஷிங்டன், சட்டபூர்வ ஆதாரமில்லாமல் நடந்து கொண்டாரென்றும், ஆங்கில அரசர் தனக்குள்ள விரோதத்தைக் காட்டுவதுபோல் இவரும் செய்திருக்கிறார் என்றும் மாடிஸன் அவர்மீது குற்றம் சாட்டினார்.

மறுபடியும் 1803 ல் லூயிஷியானாவை, நெப்போலியனிடமிருந்து வாங்கும் சந்தர்ப்பம் திடீரென ஜனாதிபதி ஜெபர்ஸனுக்குக் கிடைத்தது. இந்தச் சந்தர்ப்பத்தை ஜெபர்ஸன் உடனே

பயன்படுத்திக் கொள்ளாவிட்டால்,நெப்போலியனின் மனம்மாறி விடலாம். ஜெபர்ஸன் அதை உடனே வாங்கினர். இந்தச் செயல் அரசியலமைப்பு அளித்துள்ள அதிகாரத்தை மிஞ்சி யது என அவரே அந்தரங்கமாக ஒப்புக்கொண்டார். இதற்கான பணத்தை அனுமதித்து, காங்கிரஸ் தன்னை ஆதரிக்கும் என எதிர் பார்ப்பதாகக் கூறினர். காங்கிரஸும் அவரை ஆதரித் தது. இதன் விளைவாகத்தான் மிஸ்ஸிஸிபி பள்ளத்தாக்கின் மேற்குப் பகுதி அமெரிக்காவைச் சேர்ந்ததாக இருக்கிறது.

மற்ற ஜனாதிபதிகள் கையாண்டதற்கு மாருன முறைகளில் அப்ரஹாம் லிங்கன் அரசியலமைப்பை மீறினர். அதுபற்றி அமெரிக்க மக்கள் அவரை தூஷணையாகப் பேசுவதில்லை.உதா ரணமாக, குற்றம் சாட்டப்பட்ட ஒருவரை நீதி ஸ்தலத்தில் ஆஜர் செய்யவேண்டும் எனும் கட்டளையை அரசியலமைப் புக்குமாருக,தற்காலிகமாக ரத்து செய்தார். அரசியலமைப்பே சிதருமல் காப்பாற்றுவதற்காக, இவ்வாறு செய்ததாக, அவர் இதற்குச் சமாதானம்கூறினர்."அரசியலமைப்பில் ஒரு பிரிவை மீருமலிருப்பதற்காக, மற்றெல்லாப் பிரிவுகளையும் பயனற்றதாகச் செய்து அமைப்பே உடைந்து போகவிடுவதா ? ஒரு பிரிவை மீறுவதனுல் அமைப்பைக் காப்பதே நல்லதா? அல்லது அந்தப் பிரிவுக்குட்பட்டு அமைப்பே கவிழ்ந்து போகவிட்டு, அதைக் காப்பதாக நாம் செய்த சபதத்தை மீறுவது நல்லதா?" என்று லிங்கன் கேட்டார்.

1917-ல் அமெரிக்கா, முதல் மகாயுத்தத்தில் ஈடுபடுவதற்கு முன், அமெரிக்க வர்த்தகக் கப்பல்களில் ஆயுத வசதிகளைப் பொருத்த காங்கிரஸின். அனுமதி கேட்டார் ஜனாதிபதி வில்ஸன். காங்கிரஸ் மறுத்ததும், அமெரிக்கப் படையின் தள கர்த்தர் என்கிற முறையில் ராணுவத்தின் ஒரு பகுதியை வர்த் தகக் கப்பல்களுக்கு அனுப்பினர்.

அரசியலமைப்பின்படி காங்கிரஸ் போர்ப்பிரகடனம் செய்யலாம். இதிலிருந்து போர் .செய்வதா, வேண்டாமா என்று முடிவு கட்டும் பொறுப்பு காங்கிரஸுக்கு உள்ளது

என்று கொள்ளலாம். ஆனால் நடைமுறையில் நாட்டில் செல் வாக்குள்ள எந்தப்பகுதியினரும் அமெரிக்கா போரில் சிக்கிக் கொள்ளும்படி செய்துவிடலாம். 1906-ல் காலிபோர்னியா ராஜ்ய மக்களிடையே வெகுவாக நிலவி வந்த ஆர்வத்தை ஒட்டி, ஸான்பிரான்ஸிஸ்கோ கல்விக் குழுவினர் பள்ளிக்கூடங் களில் ஜப்பானியக் குழந்தைகளை வெள்ளையர் குழந்தைக ளுடன் சேர்ந்திராமல் பிரித்து வைக்க உத்தரவு இட்டனர். இதன் விளைவாக ஜப்பானில் பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டது. தனது காரியதரிசிகளில் ஒருவரை ஜனாதிபதி தியடோர் ரூஸ் வெல்ட் ஜப்பானுக்கு அனுப்பினார். இவ்வாறு செய்வது சான் பிரான்ஸிஸ்கோ கல்விக் குழுவினர் தங்கள் உத்தரவை ரத்து செய்து விடும்படி செய்ய இவருக்கு அதிகாரமிருந்ததினால் அல்ல. அவர்களுக்கு ஏற்பட்ட அவமதிப்பை நீக்க இவரால் ஆனதைச் செய்தார் என ஜப்பானியர் அறிந்து சாந்தமடைவ தற்கே தூதுவரை அனுப்பினார்.

தனக்குள்ள அதிகாரங்களைக் கையாண்டு, ஒரு ஜனாதிபதி யுத்தம் ஏற்படும்படியோ அல்லது அதற்கான நிலை ஏற்படும்படி யோ செய்துவிடலாம். உதாரணமாக நடு நிலைமை நாடுக ளின் உரிமைகளைப் பாதிக்கும் முறையில் பிரிட்டிஷாரும், ஜெர் மானியரும் நடந்துகொள்வதை வுட்ரோவில்ஸன் கண்டித்தார். இதன்மூலம் அமெரிக்கர் நடுநிலைமை வகிப்பதை, கொஞ்சம் கொஞ்சமாக விட்டு விட்டு, ஜெர்மனியை எதிர்க்கும் நிலைக்கு வந்துவிட்டனர். என்பதைக் காண்கிறோம். யுத்தம் தொடங்க வேண்டும் எனக்காங்கிரஸை வில்சன்கோரினார். அவர் கோரிக் கையைக் காங்கிரஸ் மறுக்க முடியாத நிலைமை வளர்ந்துவிட் டது. 1812-ல் காங்கிரஸில் பெரும்பான்மையோர் இங்கிலாந் துடன் போர் தொடுக்கத் துடித்தனர். 1812-ம் வருஷத்திய யுத்தத்தை, ஜனாதிபதி மாடிஸன் மனமின்றியே தொடுத்தார் என்று சில சரித்திர ஆசிரியர்கள் கருதுகின்றனர்.

அனேக சந்தர்ப்பங்களில் காங்கிரஸோ அமெரிக்க மக்க ளோ, யுத்தமா, சமாதானமா எனச் சர்ச்சை செய்து முடிவுக்கு

வருமுன் ஜனாதிபதியே முடிவு செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது.

பெர்ல் துறைமுகத்தை ஜப்பானியர் தாக்கியதற்கு முன், பல தடவைகளில் ஜனாதிபதி பிராங்க்லின் ரூஸ்வெல்ட் துரிதமாக ஹிட்லருக்கு எதிராக, நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார். காங்கிரஸைக் கலந்துகொண்டுதான் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று அவர் காத்திருந்தாரானால், நிலைமை மிஞ்சிவிட்டிருக்கும். இதற்கு உதாரணங்கள் க்ரீன்லண்டு கடற்கரையில் ஜெர்மன் முகாமைக் கைப்பற்றியதையும், ஐஸ்லாண்டைப் பாதுகாக்கப் படை அனுப்பியதையும் குறிப்பிடலாம். இம்மாதிரி நெருக்கடி ஜனாதிபதி ட்ருமன் காலத்திலும் ஏற்பட்டிருக்கிறது. பெர்லின் முற்றுகையின் பொழுதும்.தென் கொரியாவை கம்யூனிஸ்டுகள் தாக்கிய பொழுதும், அவர் தலையிட்டு நிலைமையைக் காப்பாற்றினார் ஜப்பான், இத்தாலி, ஜெர்மனி முதலிய நாடுகள் தாக்குதலால் இரண்டாவது மகாயுத்தம் ஏற்பட்டதுபோல் இவ்விரு நிலைகளிலும் ட்ருமன் துரிதமாக முடிவு செய்திராவிட்டால், மூன்றும் மகாயுத்தம் ஏற்பட்டிருக்கும். அமெரிக்க ஜனாதிபதி தனது சொந்தப் பொறுப்பில், நடவடிக்கை எடுத்துக் கொண்டதனால்தான் மேற்குறிப்பிட்டுள்ள நெருக்கடிகளைத் தவிர்க்க முடிந்தது.

ஜனாதிபதி தன் பொறுப்பில் செயல் புரியச் சட்டம் இடம் கொடுத்தாலும், எதிர்ப்பு மனப்பான்மையுள்ள காங்கிரஸ் அவர் கொள்கை நிறைவேறுவதற்கான செலவை அனுமதிக்காமல் தடை செய்யாலம். வட அட்லாண்டிக் படைக்கு பலமளிக்க ட்ருமன் ஐரோப்பாவுக்கு அமெரிக்கத் துருப்புக்களை, அமெரிக்கப் படையின் தளகர்த்தர் என்கிற முறையில், அனுப்பினார். இம்மாதிரியே முந்திய ஜனாதிபதிகளில் பலர் அன்னிய நாடுகளுக்கு அமெரிக்கத் துருப்புக்களை அனுப்பியுள்ளனர். இப்படிச் செய்ய ட்ருமனுக்கு அதிகாரமுண்டா என்று காங்கிரசில் பலத்த விவாதம் நடந்தது. அவருடைய அரசியல் எதிரிகள் அவருடைய எண்ணம் ஈடேறாமல் செய்வதற்காக, அதற்கான செலவை அங்கீகரிக்காமல் செய்ய முயற்சித்தனர். இந்தப்

போராட்டம் அரசியல் அடிப்படையில் நடந்ததே ஒழிய சட்ட சம்பந்தமாக அல்ல.

காங்கிரசுக்கும் ஜனாதிபதிக்கும் உள்ள உறவு, நிர்வாகத்திற்கும், சட்டசபைக்கும் நடக்கும் போராட்டத்தின் சின்னம் மட்டும் அல்ல. அரசியல் சக்தியை யார் பெறுவது என்பதற்கான சிக்கல் நிறைந்த போராட்டமுமாகும். பார்லிமெண்டாயிருந்தால் பிரதம மந்திரியின் கட்சியைச் சேர்ந்தவர்கள், அவரை ஒன்று பட்டு ஆதரிப்பார்கள். ஏனெனில் முக்கியமான விஷயத்தில் பிரதமர் தோற்றால் அவரும், அவருடைய கட்சியும் அதிகாரத்திலிருந்து விலகவேண்டி வரும்.

ஆனால் காங்கிரஸில் வழக்கமாக ஜனாதிபதியின் யோசனைகளின் மூலம் இரு கட்சிகளிலும் பிளவு ஏற்படும். சில அங்கத்தினர்கள் அவரை ஆதரிப்பர், சிலர் அவரை எதிர்ப்பர். மற்றவர்கள் கட்சி அடிப்படையில், சாதகமாகவோ, பாதகமாகவோ ஓட்டுச் செய்வர். இந்த சக்தி இவர்களை ஆட்டி வைக்கிறது என்பதற்கு அரசிய லமைப்பில் ஆதாரம் கிடைக்காது. காங்கிரஸ் உறுப்பினரின் ஆதரவைப் பெறக்கூடிய தந்திரம் தெரிந்த ஜனாதிபதியாயிருந்தால் நேசப்பான்மை மூலம் எதிர்க் கட்சியிலிருந்துகூட அவர் ஆதரவு பெறுவார். பல சமஷ்டி உத்தியோகஸ்தர் பதவிகளுக்கு ஆள் நியமிக்கவேண்டிய சந்தர்ப்பம் ஜனாதிபதிக்கிருந்து அவர் இன்னும் நியமனங்கள் செய்யாமலிருந்தால் எதிர்க்கட்சியினரின் நண்பர்களுக்கு அப்பதவிகளை அளித்து, அவர்களுடைய ஓட்டுக்களைப் பெறலாம். ஜனாதிபதியை ஆதரிப்பவர்களை விட எதிர்ப்பவர்கள், அவரிடமிருந்து, அதிகப் பதவிகள் பெறலாம் என்பது கவனிக்கத்தக்கதாகும். அச்சு இறுகி இருந்தால் அதற்கு எண்ணெய் தடவித் தளர்த்துவது இயல்புதானே.

ஆகையால் ஒவ்வொரு ஜனாதிபதியும், பதவிக்கு வந்து சிலகாலம் புது மாப்பிள்ளை மாதிரி குஷியாக இருக்கலாம். இந்தக் காலத்தில்தான் அவர் கையில் ஏராளமாக உத்தியோகங்கள் இருக்கும். அவைகளைக் கொடுத்து எதிரிகளைச் சரிக்கட்டுவதும், சாத்தியமாகும். கையிலிருந்த பதவிகள் கொடுத்

துத் தீர்ந்துவிட்டால் பழையபடியே காங்கிரஸுக்கும், ஜனாதிபதிக்கும் போராட்டம் தொடங்கும். அதிலிருந்து ஜனாதிபதி தனது இனிய சுபாவத்தையும், பொதுஜன ஆதரவையும் நம்பியிருக்கவேண்டும்.

ஜனாதிபதி பிராங்லின் ரூஸ்வெல்ட் தன்னுடைய வீட்டிலிருந்து ரேடியோ மூலம் பேசுவதைப் பயன்படுத்தத் தொடங்கினார். ஆத்திரம் பூண்ட காங்கிரஸுடன் அவர் நடத்திய பல கடும் போராட்டங்களில் தனதிஷ்டப்படியே ரூஸ்வெல்ட், தனது திட்டங்களுக்குக் காங்கிரஸின் ஆதரவு பெற்றதற்குக் காரணம் காங்கிரஸுக்கு, அமெரிக்கப் பொதுமக்களிடம் உள்ள பயம்தான்.

ஆனால் ஜனாதிபதி தன்னுடன் முரண் செய்பவரைக் கட்சியை விட்டு விலக்க முயற்சிப்பாரேயானால், அப்படிப் பட்டவரைப் பொதுமக்கள் ஆதரிப்பது முண்டு. 1938-ல் சில ஜனநாயகக் கட்சியினரை ஓட்டர்கள் ஆதரிக்காமலிருப்பதற்கு ரூஸ்வெல்ட் முயற்சி செய்தார். ஆனால் அவர்களெல்லாம் மிகப் பெரும்பான்மை ஓட்டுடன் வெற்றி பெற்றனர். தனது கட்சியின் கட்டுக்கோப்பைத் தேர்தல் சமயத்தில் குலைக்க ஜனாதிபதி முற்படலாகாது. ஆனால் கட்சியில் தனக்கு விரோதமாயிருப்பவர் தோற்பதற்கு இரகசியமாக முயற்சிக்கலாம்.

ஜனாதிபதி கட்சி துரோகிகளை அப்புறப்படுத்தும் செயலுக்கு ஒருமித்த எதிர்ப்பு இருக்கிறது. இதற்குக் காரணம் அமெரிக்க இரு கட்சி முறையின் பிரத்தியேக தர்ம நியாயத்திற்கு, அமெரிக்கர் மதிப்பு வைத்திருப்பது தான்.

அமெரிக்க மந்திரி சபை பிரிட்டன் போன்ற பார்லிமெண்டரி ஜனநாயக நாட்டிலுள்ள மந்திரிசபை போன்றதல்ல. குறிப்பாகஅமெரிக்க இலாகா தலைவர்கள் காங்கிரஸில் உறுப்பினரல்ல. அவர்கள் காங்கிரஸில் ஆஜராவதில்லை. அவர்களைக் காங்கிரஸ் சபையினர் கேள்வி கேட்கவும், முடியாது. ஜனாதிபதி அவர்களைப் பலவிதமான காரணங்களுக்காகத் தேர்ந்தெடுக்கிறார். பதவிக்குத் தகுதி என்பது அக்காரணங்களில் ஒன்றே யொழிய பிரதானமல்ல. எங்கு எங்கு ஓட்டுகளைச் சேகரம் செய்வதில் பயனளிக்குமோ அந்த ராஜ்யங்கள், பிராந்தி,

யங்கள் யாவற்றிற்கும் பிரதிநிதித்வம் அளிக்கும் முறையில் நியமனங்கள் அமையவேண்டும். மேலும் முக்கியமான மந்... பொருளாதார திருப்தி செய்வதாக இருக்கவேண்டும். மந்திரிகள், ஜனநாயகக் கட்சியின் செல்வாக்கு மிகுந்த தென் ராஜ்யங்களிலிருந்தோ அல்லது குடியரசுக் கட்சியின் செல்வாக்கு மிகுந்த, மெய்ன், வெர்மாண்டிலிருந்தோ, பொறுக்கப் படுவதில்லை. ஏனெனில் எங்கு கட்சிக்குத் தவுறுமல் ஓட்டு செய்வார்களோ, அங்குள்ளவர்களை நியமித்து, ஸ்தல அபிமானத்தைப் பெருக்குவதில் நலனில்லை.

ஜனாதிபதியின் மந்திரிகள் தலைமை வகிக்கும் காரியாலயங்களெல்லாம் ஜனாதிபதியின் அதிகாரத்திற் குட்பட்டிருக்கின்றன. ஜனாதிபதியின் அதிகாரத்திற்குட்பட்ட விஷயங்களில் அவருடைய உத்தரவுக்கு மாருக நடக்கும் மந்திரிகளை அவர் பதவியிலிருந்து நீக்கிவிடலாம். ஆதியில் இராஜ்ய யுத்த இலாக்காக்கள் மட்டும் அமைக்கப்பட்டு, அவைகள் ஜனாதிபதியின் அதிகாரத்திற் குட்பட்டவையா யிருந்தன. அவருடைய சட்டப்பூர்வ அதிகாரத்தின் இரு பிரிவுகளாக அவ்விரு இலாக்காக்களும் இருந்தன. நிதி இலாகா காரியதரிசி தனது அலுவல்களுக்குக் காங்கிரஸிடம் பதில் சொல்ல வேண்டும். ஏனெனில் அவருடைய கடமைகள் காங்கிரஸின் ஆதிக்கத்திற்குட்பட்டவை. ஆனால் ஜனாதிபதி வாஷிங்டன் எல்லா இலாக்காக்களையும் ஜனாதிபதியின் கட்டுப் பாட்டுக்கு உட்படுத்துவதை ஆரம்பித்தார். இன்று இலாக்காக்கள் மீது ஜனாதிபதிக்குள்ள அதிகாரத்தை யாரும் ஆட்சேபிப்பதில்லை. ஆனால் காங்கிரஸ் தனது அதிகாரத்தைக் கொண்டு, புதுப்பணிகளைத் தொடங்கி, அவைகளைத் தனி மந்திரிகளிடமோ, ஒரு குழுவினரிடமோ ஒப்படைக்கலாம். ஒரு மந்திரியைக் கட்டுப்படுத்தவோ, பணிக்கவோ ஜனாதிபதிக்குள்ள அதிகாரத்தின் எல்லை இன்னும் திட்டமாக நிர்ணயிக்கப்படவில்லை. காங்கிரஸ் அவசர வேலைகளைக் கவனிக்க சுதந்திரமாக வேலை செய்யக்கூடிய குழுக்களை நியமித்திருக்கின்றது. உதாரணமாக வேலை இல்லாதாருக்கு வேலை கொடுக்க 1935-ம் வருஷத்திய வேலை அபிவிருத்தி நிர்வாகமும் (Works Progress Administration) தனிப்பட்ட தொழில்களை ஒழுங்கு படுத்த

'சமஷ்டி வியாபார கமிஷனும்' நியமிக்கப்பட்டன. இந்த ஸ்தாபனங்களுக்கும், ஜனாதிபதிக்கும், உள்ள தொடர்பு என்ன என்பது பற்றிய வழக்குகள் பல நீதி ஸ்தலங்களுக்குச் சென்றும் இதற்கு நிர்ணயமான பதில் கிடைக்கவில்லை.

கிராமாந்திர மின்சார வசதி நிர்வாகம் போன்ற சில ஸ்தாபனங்கள், பொதுஜன நலனுக்கானவைகள். இது போன்றவைகளைச் சாதாரண இலாகாக்களாக அமைத்துத் தேசீய நிர்வாகத்தின் தலைவர் என்கிறமுறையில் ஜனாதிபதியின் ஆதிக்கத்கத்திற்குட்படுத்தலாம். மற்றவை ஜனாதிபதியின் ஆதிக்கத்திற்குட்படுத்த லாயக்கற்றவை. ஸிவில் விமானக்குழுவும், 'சமஷ்டி போக்கு வரத்து கமிஷனும்,' முறையே விமானங்களையும், ரேடியோ நிலையங்களையும் நிர்வகிப்பதற்கான விதிகள் செய்துகொள்ள உரிமையளிக்கப்பட்டுள்ளன. இந்தக் குழுவினர் விசாரணை நடத்தி உண்மை நிலை என்ன என்பதையறிந்து, காங்கிரஸ் வகுத்துள்ள பொதுவான கொள்கைகளையொட்டி, முடிவு கூறவேண்டும். மற்ற சமஷ்டிக் குழுக்களைப் போல மேலே கூறப்பட்ட ஸ்தாபனங்களைக் கட்டுப்படுத்த ஜனாதிபதிக்கு அவ்வளவாக அதிகாரம் கிடையாது.

சமஷ்டி வியாபாரக் குழு மாதிரி ஓரளவு நீதிஸ்தல முறையில் நடக்கும் குழுக்களும், இருக்கின்றன. இவைகள் விசாரணை நடத்தி ஒரு தனிப்பட்ட வியாபார ஸ்தாபனம் சட்டத்திற்குட்பட்டு நடக்கவில்லை யென்றுகூறி, அதன் நடைமுறை மாற வேண்டும் என உத்தரவிடலாம். இந்தக் கமிஷனின் உறுப்பினரில் யாரையும், தனது விருப்பத்திற்கு மாருக நடக்கிருர் என்று கூறி, ஜனாதிபதி வேலையிலிருந்து நீக்கலாகாது என பிரதம நீதிஸ்தலம் தீர்ப்புக் கூறியிருக்கிறது.

சட்டசபை, நிர்வாகம், நீதி பரிபாலனம் மூன்றும் கலந்த விசித்திர ஸ்தாபனங்களின் அடிப்படைக் கொள்கை பற்றி நீதிஸ்தலங்கள் திட்டமாகத் தீர்ப்புக்கூற முடியவில்லை. ஆனால் இந்த ஸ்தாபனங்களின் அனுபவ சாத்தியமான அம்சத்தை எளிதில் புரிந்து கொள்ளலாம். ஜனாதிபதியின் கட்டுப்பாட்டுக்குட்பட்டவர்கள், அப்படி உட்படாத அதிகாரிகள், யாவரையும் ஜனாதிபதியே நியமனம் செய்கிருர். அம்மாதிரி நியமனங்கள்

செனட்டால் ஊர்ஜிதம் செய்யப்படுகின்றன. 'சமஷ்டி எரிவாயு கமிஷன்' ராஜ்யத்திற்கு ராஜ்யம் எரிவாயு பரஸ்பரம் விநியோகம் செய்வதிலிருந்து இந்தக் குழுக்கள் அரசியல் சாணுக்கியத்திற்குட்பட்டவை என்பதைப் புரிந்து கொள்ளலாம். இந்த சக்திக்கான கட்டணம் யாது எனக் கம்பெனிகள் கேட்டன. இதற்கு கமிஷன் பதில் கூற மறுத்தது. கம்பெனிகள் காங்கிரஸுக்கு அப்பீல் செய்து இந்த உரிமையைக் கமிஷனின் ஆதிக்கத்திலிருந்து நீக்கி, மசோதா நிறை வேறியது. இதை ஜனாதிபதி ட்ரூமன் நிராகரித்தார். ஜனாதிபதியின் நிராகரிப்பை மீறி காங்கிரஸ் மசோதாவை நிறைவேற்ற முடியவில்லை. காஸ் கம்பெனிகளுக்கு விரோதமாக ஓட்டுச் செய்த கமிஷனரில் ஒருவர் பதவி காலம் முடிந்தது. அப்பதவிக்கு அவரே மீண்டும் நியமிக்கப்பட்டார். இந்த நியமனத்தை அங்கீகரிக்காமலிருக்கும்படி கம்பெனிகள் செனட்டைத் தங்கள் பக்கம் திருப்பிக்கொண்டன. கடைசியாக கம்பெனிகளுக்குச் சாதகமான ஒரு கமிஷனர் நியமிக்கப்பட்டு, நியமனம் செனட்டால் அங்கீகரிக்கப்பட்டது. இந்த நியமன மூலம் கம்பெனிகளுக்குப் பெரும்பான்மையோரின் ஆதரவு ஏற்பட்டது. அதற்குப் பிறகு கம்பெனிகளின் கருத்தை கமிஷன் ஏற்றதும் இந்தத் துறையில் அமைதி நிலவத் தொடங்கியது. எந்தக் கமிஷனும், எந்த நீதி ஸ்தலமும், உடனே இல்லாவிட்டாலும் காலக் கிரமத்தில் தாங்கள் உறுப்பினர் பதவி காலமாவதிலிருந்தும் அதற்குப் பதிலாக யார் இடம் பெறுகிறார்கள் என்பதிலிருந்தும் எந்தக் கட்சி எப்படிப் பலம் வாய்ந்தது என்பதையும் அறிந்து கொள்கிறார்கள், என்பதும்தான் மேல்காணும் சம்பவங்களிலிருந்து நாம் அறிந்து கொள்ள வேண்டிய படிப்பினை.

கொள்கை வகுக்கும் பொறுப்புள்ள அரசியல் உத்தியோகஸ்தர்களுக்குக் கீழ்த்தட்டுக்களில், கடிதம் கொண்டு செல்லும் சேவகர்களும், வாயில் காப்போரிலிருந்து ஆராய்ச்சி நிபுணர்கள் மேற்பார்வையாளர்கள் வரை, அரசியல் பொறுப்பில்லாத பல உத்தியோகஸ்தர்கள் இருக்கின்றனர். சிவில் சிப்பந்திகள் அரசியல் கட்சிப் பற்றுள்ளவர்களாயிருந்தாலும் அவர்கள் தமது ராஜ்யங்களில் ஓட்டுச் செய்ய சட்டம் அனுமதிக்கிறது, ஆனால் அவர்கள் அரசியலில் தீவிர பங்கு கொள்ளலாகாது.

சில சமயங்களில் அரசியல் ஸிவில் உத்தியோகஸ்தர்கள் திறமையைப் பாதிக்கிறது.

சிவில் அதிகாரிகளின் மேல் காங்கிரஸ் கவனம் செலுத்தாமல் விட்டுவிட்டால், திறமைக்கு சாதகமாகவும் பாதகமாகவும், இருவித சக்திகள் வேலை செய்கின்றன. கண்காணிப்பு நிபுணர்களும், சர்க்கார் சிப்பந்திகளை எப்படிக் கட்டி மேய்ப்பது என்பதை அறிந்த அந்தரங்கக் காரியதரிசிகளும், நிர்வாகத் திறமை வாய்ந்தவர்களைத் தட்டிக் கொடுத்து, வேலை வாங்கத் தெரிந்த நிர்வாக இலாகா தலைவர்களும், தங்கள் கீழ் வேலைசெய்பவர்களின் திறமையை வளர்க்கிருர்கள். நல்ல நிர்வாகத்திற்கு ஊக்கமளித்து சிறப்பான வேலைக்கான நுணுக்கங்களைச் சேகரித்துப் பயன் படுத்த 1947-ல் ஜனாதிபதி ட்ருமன் ஒரு உத்திரவிட்டார். இந்த உத்திரவின் விளைவாக அதிகாரத்தைக் குறிப்பிட்ட குழுவினருக்கு அளிக்கவும் நிர்வாகத்தை திட்டம் செய்து அதன் மூலம் வேலை முறை சீர் பெறவும் தனிப்பட்ட இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகளிலும் 'பாங்குகளிலும் இருப்பதுபோல் நிபுணர்கள் மேற்பார்வை செய்வதும் சாத்தியமாயிற்று. சமஷ்டி நிர்வாகத்தின் பல பகுதிகளில் உயர்தரமான திறமையைக் காணலாம். இந்தச் சிறப்பான அம்சங்களைப் பல தனிப்பட்ட வியாபார ஸ்தாபனங்களும், பின்பற்றுகின்றன.

சர்க்கார் நிர்வாகத்தில் திறமை சீர்குலைவதற்கான காரணம் தனிப்பட்டவர் வர்த்தகத் துறையிலுள்ள மாதிரியே, தங்கள் சிப்பந்திகளைக் கொண்டு செலுத்தும் நவீன முறைகளை தலைமையிலிருப்பவர்கள் அறியாதது தான். அரசியல் காரணங்களுக்காகவோ அல்லது ராணுவ நிர்வாகம், அயல் தேச உறவு விஷயங்களில் அசாதாரண திறமை இருக்கிறது என்பதற்காகவோ மேல் பதவிகளுக்கு நியமிக்கப்படுபவர்கள் நிர்வாகத்தின் ரகசியத்தை அறியாதவர்களாயிருக்கலாம். பெரிய ஸ்தானத்தைக் குறைந்த செலவில் நடத்தத் தெரிந்தவர்கள் எனும் ஒரே தகுதியைக் கொண்டு பதவிகளுக்கு ஆட்கள் நியமனம் செய்ய வேண்டும் என ஜனாதிபதியைக் கட்டுப் படுத்துவது நல்லதல்ல.

அரசாங்கச் செலவை திட்டப்படுத்துவதில் காங்கிரஸ் அக் கரை கொள்வதன் பலன், ஸிவில் சர்வீசின் திறமை குறைந்து விடுகிறது. மிகச் சிறப்பாக நடக்கும் தனிப்பட்டோர் ஸ்தாப னங்களைப் பார்த்தால் சிப்பந்திகளை சுமுகமாக நடத்துவதுதான் நவீன நிர்வாகத்தின் அடிப்படை என்பதைக் காணலாம். முற் பகலில் சிப்பந்திகள் காப்பி அருந்த வெளியே செல்ல அனும திப்பது அவர்களை சுமுகமாக நடத்துவதற்கு உதாரணம். இப்படி சிப்பந்திகளை மரியாதையாக நடத்தினால் குறைந்த செலவில் அதிகமான உற்பத்தியைக் காணலாம். ஆனால் இம் மாதிரி ஊழியர்களை சுமுகமாக நடத்துவதை அரசியல் வாதிகள் சுலபமாகத் தாக்குகிறார்கள்.

அதிகாரிகள் சோம்பேறித்தனமாகவும், நாணயக் குறை வாகவும் நடந்துகொள்கிறார்கள் என்று ஒரு அரசியல்வாதி கூறினால் அவருக்கு ஓட்டு நிரம்பக் கிடைக்கும். காங்கிரசில் ஒரு அதிகாரக் குழுவினரைத் தாக்கி, ஒரு பிரசங்கம் செய்தத னால், 1,00,000, டாலர்கள் நஷ்டம் ஏற்பட்டது என்று கணக் கிட்டிருக்கின்றனர்.

காங்கிரசின் சார்பாக, ஒழுங்காக விசாரணை செய்தால் நிர்வாகக் குழுவின் தலைவர் திறமை குறைந்தவரா யிருப்பதால் எவ்வளவு பணம் வீணாகிறது என்பதைக் கண்டுபிடித்து, அது மேலும் வீணாகாமல் பாதுகாக்கலாம்.

அரசியல் கண்காணிப்பு மூலம் சிவில் சர்வீஸ் சிதைவுறா மல், சீரான நன்மை பெறவேண்டுமானால், நவீனத் தொழில் திறமையில் தேர்ந்த பிரபல தலைவர்களின் ஒத்துழைப்பைப்பெற வேண்டும். இப்பேர்ப்பட்ட வர்த்தக நிபுணர்கள் இப்பிரச்னை யில் அக்கரை கொண்டு தங்கள் செல்வாக்கைக் காங்கிரசில் உபயோகிப்பார்களானால் அரசியல் தலைவர்கள் தலையீட்டைக் குறைக்கலாம். மேலும் சர்க்கார் துறைகளிலுள்ள சிறந்த நிர் வாகிகளுக்கு இவர்கள், தொழில் நுணுக்க ஞானம் புகட்டி உதவி புரியலாம்.

சமஷ்டி நிர்வாகம் பிரம்மாண்டமாயிருப்பது கவலைக் கிட மாயிருக்கிறது. கவலைக்கிடமளிப்பது அதனாலாகும் ஏராள

மான செலவுமட்டுமல்ல, அதனுடைய அதிகார தோரணையும் தான். 'அதிகாரதோரணை' எனும் பதத்தைக் கேட்டு மக்கள் பதறுவதற்குக் காரணம், ஆயிரக்கணக்கான சிப்பந்திகளைக் கொண்ட அரசாங்க ஸ்தாபனங்களை ஒரே குழப்பத்திற்குள் ளாக்கி அதன் விளைவாக அதன் தவறுகள் காங்கிரஸ், அல்லது ஜனாதிபதியின் பார்வையில் படாது போய்விடும் என்பதுதான். "இந்த ஸ்தாபனங்களில் சில ஏதோ ஒரு காலத்தில் ஒரு அவசர நிலைமையைச் சமாளிப்பதற்காகத் தோன்றியவை. ஆனால் அந்த அவசரம் கடந்துபோன பின்பும் அது வேலையின்றி தனி யாய் நிலைத்துவிட்டது என்று மக்கள் மனதில் ஒரு சந்தேகம். அந்த சந்தேகத்திற்குக் காரணமில்லாமலில்லை.

பல் வேறு சமயங்களில் தோன்றிய பல நிர்வாகக் குழுக் கள் தங்கள் வேலையைச் செய்துகொண்டு போகையில் ஒரு ஸ்தாபனம் செய்துவரும் வேலையையே மற்றொரு ஸ்தாபனமும் செய்துவரும் நிலை ஏற்படுகிறது என்று கருதப்படுகின்றது. இந்தக் கருத்துக்கும் ஆதாரம் இருக்கின்றது. சில சந்தர்ப்பங் களில் ஒரு குழு தற்போதுள்ள நிலையில் தனக்குப் பொருத்த மில்லாத ஒரு இலாகாவில் வேலை செய்கிறது.

நிர்வாக இலாகாவின் பல பகுதிகளை ஒரு ஒழுங்குக்குக் கொண்டுவந்து சீராக நடத்துவதற்குச் சமீப கால ஜனாதிபதி கள் முயற்சி செய்திருக்கின்றனர்.

ஜனாதிபதி ஹூவர், பலவிடங்களில் சிதறி இருந்த நிர்வாக அனுபவம் மிகுந்த குழுக்களை ஒன்றுபடுத்தி "நிர்வாக நிபுணர் குழாம்' எனும் ஸ்தாபனத்தை அமைத்தார். 1932-ல் நிறை வேற்றப்பட்ட திருத்தியமைப்புச் சட்டத்தின் மூலம் பல குழுக்க ளைப் பல்வேறு இடங்களுக்கு மாற்றவும், அவைகளைக் காங்கிர சின் கண்காணிப்புக்குட்படுத்தவும், அவருக்கு அதிகாரமளிக் கப்பட்டது. இம்மாதிரி உத்தரவுகள் காங்கிரசுக்குச் சமர்ப்பிக் கப்பட வேண்டும். 60 நாட்களுக்குள் காங்கிரஸ் அவைகளை நிராகரிக்கா விட்டால், அவை ஊர்ஜிதமாகிவிடும்.

1932-ல் காங்கிரசில் ஜன நாயகக் கட்சி பலம் பெற்று விட்டது. அது ஹூவரின் திட்டங்களை அங்கீகரிக்க மறுத்து,

ஜனநாயகக் கட்சியின் புது ஜனாதிபதியின் முடிவுக்கு அவற்றை விட்டுவிட்டது.

புனரமைப்பு விஷயங்களைப் பற்றி ஆராய்ந்தறிய 1936-ல் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் ஒரு கமிட்டி யமைத்தார். 1937-ல் அது பல தீவிரமான சிபாரிசுகளைச் செய்தது. இவைகளை ஜனாதிபதியின் எதிர்க் கட்சியினர் பலமாகத் தாக்கினர். பல அம்சங்களை நீக்கி உப்புச் சப்பில்லாத ஒரு மசோதா 1939-ல் நிறைவேற்றப்பட்டது. அதில் ஜனாதிபதி சில திருந்தங்கள் செய்தார். உதாரணமாக வரவு செலவு திட்டத்தை அவர் ஜனாதிபதியின் நிர்வாகத்திற்குக் கொண்டுவந்தார். யுத்தம் நடந்து வரும்பொழுது குடியிருப்பு வசதிக்குழு, கப்பலமைப்புக்குழு, இரண்டையும் பலப்படுத்தி தேசீய குடியிருப்புக்குழு, யுத்தக் கப்பல் நிர்வாகக் குழு என அவற்றை அமைத்தார், அவருடைய யுத்தகால அவசர அதிகாரங்களின் கீழ் மற்றும் பல சீர்திருத்தங்கள் செய்தார்.

1947-ல் ஜனாதிபதி ட்ரூமன் ஒரு புனரமைப்புச் சட்டம் நிறைவேற்றச் செய்தார். இதன் கீழ் மாஜி ஜனாதிபதி ஹூவரைத் தலைவராகக் கொண்ட இரு கட்சியினரும் சேர்ந்த கமிஷன் ஒன்றை அமைத்தார். ஹூவர் கமிஷன் நன்கு ஆராய்ந்து அறிந்து பல சிபாரிசுகள் செய்தன, அவைகளின் விளைவாக அரசாங்கத்திற்கு 3,000,000,000 டாலர் வருஷத்திற்கு மிச்சமாகும் என ஹூவர் மதிப்பிட்டிருக்கிறார். ஹூவர் அறிக்கை பெருவாரியான பொதுஜன ஆதரவு பெற்றது. இதன் அடிப்படையில் ஜனாதிபதி ட்ரூமன் சுமார் 20 திட்டங்களைக் காங்கிரஸுக்கு சமர்ப்பித்தார். காங்கிரஸ் இவைகளில் 3-ல் 2 பங்கு யோசனைகளை அங்கீகரித்தது. 1953-ல் இந்தச் சட்டத்தை ஜனாதிபதி ஐஸன்ஹோவரும் பயன்படுத்த அனுமதியளித்தது.

இந்தப் புனரமைப்புத் திட்டங்களால் ஏற்படும் நன்மைகள், பொதுஜன ஆதரவு பெறும்படியாக, கணிசமாயில்லை. ஆனால் இவைகளால் நிர்வாகத்தில் காணப்பட்ட சில முக்கியமான குறைபாடுகள் அகற்றப்பட்டுவிட்டன. ஆனால், இன்ஜினியர்

குழுபோன்ற சில ஸ்தாபனங்களுக்கு காங்கிரஸில் விசேஷ அரசியல் ஆதரவு இருப்பதனால் அவர்கள் விரும்பாத எந்த மாறுதலையும் எந்த ஜனாதிபதியும் செய்ய முடியவில்லை.

சிக்கனம் அல்லது ஜனங்கள் விரும்பாததை வாங்காதிருப்பது காங்கிரசின் பொறுப்பு. ஆனால் ஜனங்களுக்குத் தேவையில்லாத எதையும் சேர்க்காமல் பட்ஜட்டைத் தயாரிப்பதின் மூலம் சிக்கனம் செய்து காங்கிரஸ் கியாதி யடையாமல் ஜனாதிபதி செய்யலாம். ஆனால் குறைந்த செலவில் நிறைந்த நன்மையளிக்கும் சிறப்பான காரியம் செய்வது ஜனாதிபதியின் பொறுப்பு. அவருடைய திட்டத்தில் சில்லறையாகத் திருத்தங்கள் செய்தோ அல்லது செல்வாக்குள்ளவர்களைத் திருப்தி செய்வதற்காக அவருடைய திட்டத்தில் கடும் நிபந்தனைகள் விதித்தோ காங்கிரஸ் ஜனாதிபதியைத் திகைக்க வைக்கலாம். ஆனால், பொதுவாக ஜனாதிபதி ஹூவரும், அவருக்குப் பின் வந்தவர்களும், ஸ்தாபனச் சீரமைப்பிற்கும், நவீன நிர்வாகத்திற்கும், ஓரளவு உதவியாயிருந்திருக்கின்றனர் என்று கூறலாம்.

# 5. காங்கிரஸ்—அது யாது?

**அ**மெரிக்கக் காங்கிரசில், நிர்வாகத்தினர் அதன் உறுப்பினரல்ல என்பதுதான், அதற்கும், பிரிட்டிஷ் பார்லிமெண்டிற்கும் உள்ள முக்கியமான வித்தியாசம். இங்கிலாந்தில் பிரதம மந்திரியும், மற்ற மந்திரிகளும், பார்லிமெண்டில் அங்கத்தினர்களாய் இருப்பது மாதிரி அமெரிக்கக் காங்கிரசில் ஜனாதிபதியும், அவருடைய மந்திரிகளும் அங்கத்தினர்களல்ல. ஜனாதிபதி நடத்தையின் மீது குற்றச்சாட்டு நடவடிக்கை எடுக்கலாமேயன்றி காங்கிரஸ் அவரை அதிகாரப்பாங்குடன் கேள்விகள் கேட்க முடியாது. அமெரிக்க அரசாங்கத்தில் மந்திரி சபை நெருக்கடி, ஏற்படுவதில்லை. அப்படியே ஏற்பட்டாலும் ஜனாதிபதி ராஜினாமா செய்யவேண்டியதில்லை. அவர், காங்கிரசைக் கலைத்துப் புதுத் தேர்தல் நடக்க உத்தரவு இடமுடியாது.

அமெரிக்க அரசாங்கத்தில் காங்கிரசும், ஜனாதிபதியும் ஒவ்வொரு வகையில் மக்களின் பிரதிநிதிகள். இருதரத்தாருக்கும் மக்களின் ஆதரவைக் கோரும் உரிமையும், முறையும் இருக்கிறது. ஒரு தரத்தார் மற்றொருவருக்கு எதிராக மக்கள் தயவை நாடலாம். இதன் விளைவாக நிர்வாகமும், காங்கிரசும் நேரிடையாகப் போராடுகின்றன அல்லது யுத்த இடைக்கால சமாதான நிலையில் இருக்கின்றன. அமெரிக்காவில்ஜனாதிபதி ஒரு கட்சியைச் சார்ந்தவராகவும், காங்கிரஸ் அதற்கு எதிர்க் கட்சியைச் சேர்ந்தவர்களாகவும் இருக்கலாம். இது பார்லிமெண்டரி முறையில் சாத்தியமில்லை. இப்படி நேருகிற சமயங்களில் நிர்வாகமும் சட்டசபையும் எதிரும் புதிருமாய் இருக்கின்றன.

ஆகையால் பார்லிமெண்டை விட, அமெரிக்க காங்கிரஸ் பொறுப்பற்றதாயிருக்கிறது. ஜனாதிபதியின் கட்சியினரே அவருடைய முடிவுகளுக்கு விரோதமாக ஓட்டுச் செய்யலாம். இப்படி ஓட்டுச் செய்வதால் ஜனாதிபதி ராஜினமாச் செய்ய வேண்டியதில்லை. இந்தப் பொறுப்பற்ற தன்மையினுல் காங்கிரசில், வாய்வீச்சுக்காரர்கள், விளம்பரப் பிரியர்கள் செல்வாக்கு அதிகரித்து விடுகிறது. மேலும் அதிகாரத்திலிருக்கும் கட்சி, கட்டுப்பாடாக நடக்காவிட்டாலும் குடிமுழுகிப் போய்விடும் என்று யாரும் எண்ணுவதில்லை

வுட்ரோவில்ஸன் கல்லூரிப் பேராசிரியராயிருக்கையில் காங்கிரசுக்கு பார்லிமெண்டுக்குள்ள அதிகாரங்களும், பொறுப்புக்களும் அளிக்கத்தக்க முறையில், அரசியலமைப்பைத் திருத்தியமைக்கவேண்டும், என வாதாடினுர். ஜனாதிபதியின் மசோதாக்களை காங்கிரஸ் நிறைவேற்ற வேண்டும். அல்லது அவர் பதவியிழக்க வேண்டும். என்றிருந்தால் அதனுறுப்பினர்கள், தங்கள் கடமைகளை சிரத்தையுடன் நிறைவேற்றுவார்கள், காங்கிரஸ் நடவடிக்கைகளை மக்களும் புத்திசாலித்தனமாகப் புரிந்து கொள்வார்கள் என அவர் வாதம் செய்தார். வில்ஸன் ஜனாதிபதியாக வந்ததும், காங்கிரஸ் சண்டித்தனம் செய்தால் ஒரு நெருக்கடி ஏற்படுத்த வேண்டுமென அவர் எண்ணினுர். அவர் ஜனாதிபதி, மற்றும் தமது மந்திரிகளுடன் ராஜிநாமா செய்து

இருக்கலாம். இப்படி நேர்ந்திருந்தால், ஜனாதிபதி விலகினால் அவருக்குப் பதிலாகப் பதவி வகிக்க வேண்டியவர்கள் யாவரும் விலகி யிருப்பார்கள். காங்கிரஸ் புது நிர்வாகக் குழுவை தேர்ந்தெடுக்க வேண்டி வந்திருக்கும். ஆனால், அந்த சமயத்தில் யுத்தம் நடந்துகொண்டிருந்ததால் அப்போது உள்ள நிலையை மாற்ற அவர் விரும்ப வில்லை. காங்கிரஸைப் பார்லிமெண்டாக மாற்றுவதற்கான பொதுஜன ஆர்வம் இருப்பதாகவும் தோன்றவில்லை.

அதிகாரப் பிரிவினையின் விளைவு என்னவென்றால் பிரதிநிதிகள் சபை போலவே செனட்டும் முக்கியத்வம் வாய்ந்தது. மற்ற நாடுகளில், கீழ்சபை நிர்வாகத்தைக் கொண்டு செலுத்துவதால் எல்லா அதிகாரங்களையும் தாங்களே மேற்கொண்டு, மேல் சபை முதலிய ராஜதந்திரிகளின் விவாத அரங்காக மட்டும் விட்டுவிடவேண்டும் என்கிற போக்கு அந்நாடுகளில் காணப்படுகிறது உதாரணமாக பிரிட்டனில் காமன்ஸ் சபையின் முடிவுகளை நிராகரிக்கும் அதிகாரம் பிரபுக்கள் சபைக்குஇப்போதில்லை. ஒரு மசோதாவை நிராகரிப்பதால், அதைத் தாமதப்படுத்தலாம். ஆனால், முடிவான அதிகாரம் காமன்ஸ் சபைக்கு இருக்கிறது. அமெரிக்க செனட் பிரதிநிதிகள் சபை போலவே சக்தி வாய்ந்தது. சில விஷயங்களில் அதிக சக்தியும் வாய்ந்தது.

இரண்டு சட்டசபைகள் எனும் சம்பிரதாயம் அமெரிக்க அரசியல் வாழ்க்கையில் வேர் ஊன்றி விட்டது. குடியேற்ற நாட்டு அரசாங்கங்களிலும், இரண்டு சட்டசபைகள் இருந்தன. இன்று நெப்ராஸ்கா தவிர மற்ற இராஜ்யங்களிலும் அவ்வாறே இரு சபைகள் இருக்கின்றன. அமெரிக்காவில் ஒரே சட்டசபை வேண்டும் என்கிற எண்ணத்தை ஆதரிக்காததற்குக் காரணம் அமெரிக்கா ஒரு சமஷ்டி நாடு என்பதும், அதில் பெரிய ராஜ்யங்களும் சிறு ராஜ்யங்களும் கலந்திருப்பதுதான். பெரிய ராஜ்யங்களையும் சிறிய ராஜ்யங்களையும் பிணைத்து வைக்கக் கூடிய வேறு எந்த யோசனைகளும் கூறப்படவில்லை.

எல்லா மசோதாக்களும் இரு சபைகளிலும் நிறைவேற வேண்டும் என்பதனால், நெருக்கடியான காலங்களில் தாமதம்

ஏற்படுவதில்லை. ஏனெனில் அம்மாதிரி காலங்களில் ஜனாதிபதியை ஒன்றாய் நின்று ஆதரிக்க வேண்டும். ஆதரிக்கவும் மக்கள் ஆர்வம் கொள்ளுகின்றனர். ஆனால் சாதாரணக் காலங்களில் சாமான்ய விஷயங்களில் சட்டம் நிதானமாகத்தான் நிறைவேறும். நீடித்து விவாதங்கள் நடக்கும். இந்த நிலை ஆளும் கட்சியினரை விட எதிர்க்கட்சியினருக்கு சௌகரியமாயிருக்கிறது. அரசாங்கம் என்றாலே அமெரிக்கருக்கு இயல்பாகவே அருவருப்பு இருப்பதால். விவாதத்திற்கிடமான சட்டங்கள் எளிதாக நிறைவேறுவதில்லை. என்பது அவர்களுக்குக் கவலையளிப்பதில்லை. எதையும் ஒருவரே முடிவு செய்வதைவிட, இரண்டு பேர் கூடி, ஆலோசிப்பதில் பயனுண்டு என்ற கருத்தில் அவர்கள் நம்பிக்கை கொண்டவர்கள்.

செனட்டர்களை ராஜ்ய சட்டசபைகள் தேர்ந்தெடுப்பதற்குப் பதிலாக ஓட்டர்களே தேர்ந்தெடுக்கும்படி அரசியலமைப்பு திருத்தப்பட்டிருந்தாலும் செனட்டிற்கும் பிரதிநிதிகள் சபைக்கும், அமைப்பிலும் விஷயங்களை ஆராயும் முறையிலும் வித்தியாசம் இருக்கிறது. காங்கிரஸ் உறுப்பினரை விட செனட்டர்கள் பொதுவாக வயதானவர்கள். காங்கிரஸில் அனுபவம் பெற்றவர்களில் சிலர் செனட்டர்களாவதும் உண்டு. ஆனால் செனட்டில் இடம் பெற்றவர்கள் காங்கிரஸின் உறுப்பினராகப் பிரியப்படுவதில்லை செனட்டர்கள் எண்ணிக்கை 96. காங்கிரஸ் உறுப்பினர் 435, ஆகையால் செனட்டில் ஸ்தானம் வகிப்பவர்க்குத் தற்பெருமை பிரகடனத்திற்கு வாய்ப்புண்டு. இதை அவர்கள் நல்லதற்கும் பயன்படுத்தலாம், தீயதற்கும பயன்படுத்தலாம்.

உடன்படிக்கைகளை அங்கீகரிப்பதும், ஜனாதிபதி செய்யும் நியமனங்களை ஊர்ஜிதம் செய்வதும் போன்ற அதிகாரங்கள் செனட்டிற்கிருப்பது அனேக செனட்டர்களை அயல்நாட்டு விவகாரங்களிலும், நிர்வாக விஷயத்திலும் தனி அக்கரை காட்டத் தூண்டியது. சில செனட்டர்கள் இவ் விஷயங்களில் நிபுணர்களாக விளங்குகிறார்கள்.

செனட்டிலும், பிரதிநிதிகள் சபையிலும், பாதிக்கு மேற்பட்டவர்கள் வக்கீல்கள். ஒரு வக்கீல் கொஞ்சம் காலம் காங்கி

ரஸில் இருந்த பிறகு அடுத்த தேர்தலில் தோற்றுவிட்டு, வக்கீல் தொழில் ஆரம்பித்தால் அவருடைய வருமானம் பெருகும். மேலும் காங்கிரஸ் உறுப்பினராயிருக்கும் ஒருவர் தாம் வக்கீலாயிருந்த நிலையத்தில், நீடித்து கூட்டாளியா யிருப்பதும் சட்ட விரோதமல்ல. இவர் உதவியால் காங்கிரஸில் தங்களுக்குச் சாதகமான சட்டமியற்ற விரும்புகிறவர்கள் இவரு டைய நிலயத்திற்குப் பணம் கொடுத்தால், அந்நிலயத்துப் பங்காளியெனும் பொறுப்பில் இவர் நிரந்திர ஊதியம் பெறலாம். இம்மாதிரி புறத் தொடர்பு, ஸிவில் அதிகாரிகளோ, நிர்வாக இலாகா உத்தியோகஸ்தர்களோ கொள்வதென்பது கண்டிக் கப்படுகிறது.

"நமது அரசாங்கம் வக்கில்களால் நடத்தப்படுகிறது. மனிதர்களாலல்ல," என்று ஒரு பள்ளி மாணவன் சொன்ன தாகக் கூறப்படுகிறது. ஆயின் இவ்வாறு பொதுப்படையாகக் கூறுவது மிகையாகத் தோன்றலாம். பொருளாதாரக் கொள் கைகள், சர்வதேச ஒத்துழைப்பு, முதலிய பெரிய பிரச்னைகள் பற்றிக் காங்கிரஸின் கருத்தைப் பார்த்தால், இவையெல்லாம் வக்கீல்கள் மூளையின் வேலை என்று தோன்றுகிறதே யொழிய, எஞ்ஜினியர்கள், வியாபாரிகள், அல்லது பத்திரிகைச் செயலா ளரின் மூளை வேலையாகத் தோன்றவில்லை என்பதில் சந்தேக மில்லை.

ஜனாதிபதி, காங்கிரஸ் ஆகிய இரு பெரும் சாதனங்கள் கொண்டுதான், தேசீய அரசியல் கட்சிகள் நாட்டை ஆளு கின்றன. இந்தச் சாதனங்கள் மூலமேதான் இரு கட்சிகளும் அதிகாரத்திற்குப் போராடுகின்றன. ஜனாதிபதி தனிப்பட்டவர் அதே பதவியைப் பெற வேண்டும் என்கிற ஆசையினாலும், சரித்திரப் பிரசித்தி பெறும் முறையில் ஆளவேண்டும் என்கிற ஆர்வமிருப்பதாலும், கட்சியில் அவருடைய ஸ்தானத்தைப் பற்றி நிர்ணயமாகக் கூறலாம். ஆனால் ஜனாதிபதியின் கட்சி யினரைப் பற்றி அவ்வளவு திட்டமாகக் கூறமுடியாது. ஏனெனில் அதிலுள்ள சிலர் ஜனாதிபதியின் கொள்கைகளை ஏதாவது ஒரு வகையில் எதிர்ப்பவர்களா யிருக்கலாம், கட்சி யிலுள்ள மற்றும் சிலர் தங்களுடைய ஸ்தல நலத்திற்கும் கட்சி

யின் போக்கிற்கும் முரண் ஏற்படும் எனக்கருதலாம். ஆகை யால் ஆட்சி புரியும் கட்சி காங்கிரஸில் ஓட்டுக்கு வரும் எல்லா விஷயங்களிலும் பிளவுபட்டிருக்கலாம்.

காங்கிரஸ் மக்களுக்கு இரண்டு வருஷத்திற் கொருதரம் பதில் சொல்லவேண்டும். அதுவும் குறிப்பான விஷயங்களைப் பற்றியல்லாமல், பொதுவாகப் பதில் கூறவேண்டி வரும். காங் கிரஸில் தனிப்பட்டவர் போடும் ஓட்டு, தேசியத் தேர்தலை அவ்வளவு பாதிக்காது. ஆனால் அவர் செயல்கள், அவரு டைய தொகுதி ஓட்டுக்களைப் பாதிக்கலாம். இதனால் கட்டுப் பாடு குறைகிறது. அனேக காங்கிரஸ் உறுப்பினர் நிச்சயமான ஆதரவு கிடைக்கும் ஜில்லாக்களைச் சேர்ந்தவராயிருப்பர். தங்கள் ஜில்லாவாசிகள் மனம் நோகாமல் நடந்துகொண்டால், அவர்கள், தேர்தலில் ஜெயிப்பது நிச்சயம். அந்த அரிய ஆதரவு நிலையை அவர்கள் பாழ்படுத்திக்கொள்ள மாட்டார்கள். இப்படிப்பட்டவர்கள் தங்கள் கட்சியின் ஆதரவு பற்றி லட்சியம் செய்வதில்லை. ஆனால் இவர்களுடைய கட்சி தோற்று விட்டால் கட்சிக் கமிட்டியின் தலைமைப் பதவி கிடைக்காமல் போகலாம். இராச்சியங்களிலும், ஜில்லாக்களிலும் மக்களோடு காங்கிரஸின் தொடர்பு பெயரளவில் தானிருக்கிறது. ஏனெனில் இராச்சிய மக்களும், ஜில்லா மக்களும், கட்சிப் பற்றினால் ஓட்டுப் போடுவதில்லை என்றும் மாறுதலடையாத ஸ்தலப் பிரச்னைகளின் அடிப்படையில்தான் ஓட்டு செய்கிறார்கள். நாட்டின் எட்மானர்களாகிய மக்கள் காங்கிரஸின் செயல்களைப் பற்றி போட்டி பலமாயிருக்கும்போதுதான் தங்கள் தீர்ப்பைக் கூறுகிறார்கள். அப்பொழுதும் தாங்கள் முக்கியமெனக் கருதும் பிரச்னைகளைப் பற்றி அபேட்சகர் ஐயமற்ற சிரத்தை காட்டி இருந்தால்தான் தங்கள் ஆதரவை அளிப்பார்கள்.

எந்தக் கட்சிக்குப் பலமிருக்கிறதென்று நிர்ணயமாகக்கூற முடியாத இடங்களில் கட்சிப் பற்றில்லாத சுயேச்சையான ஓட்டர்கள் ஆதரிக்கும் கட்சியே ஜெயிக்கிறது. ஒரு இராச் சியத்தில் ஒரு கட்சி அதிக பலம் பொருந்தியதாயிருந்தால், சுயேச்சை ஓட்டர்கள் அந்தக் கட்சியை ஆதரித்துச் செல்வாக் குப் பெறுகிறார்கள்.

ஆனால் லோவல் மெல்லட் என்பவர், "அரசியல் சுருக்கம்" எனும் தம் புத்தகத்தில் குறிப்பிடுவதுபோல் சுயேச்சை ஓட்டர்கள் பிளவுபட்டுப் போவதால் தங்கள் செல்வாக்கையும் சக்தியையும் இழந்து விடுகிறார்கள். சுயேச்சையாளர்கள் பல இடங்களில் தாராள நோக்குள்ளவர்களாக இருக்கிறார்கள். 'பிரைமரி' தேர்தலில் அவர்கள் மிகச் சிறந்தவர்களுக்கே ஓட்டுச் செய்வார்கள். அநேக சந்தர்ப்பங்களில் பெரிய கட்சி களிலிருந்து பிரிந்துவந்த உதிரிகளுக்கு, சுயேச்சையாளர்கள் ஓட்டளித்து, பெரிய கட்சி அபேட்சகர் தோற்பதற்குக் காரணமா யிருந்திருக்கின்றனர்.

சுயேச்சையாளரின் இந்த சுபாவத்தைச் சில சமயங்களில் அரசியல் கட்சி பிரமுகர்கள் பயன்படுத்திக் கொள்வதுண்டு. சுயேச்சை ஓட்டைக் கண்டு அஞ்சும் கட்சி அம்மாதிரி இடங் களில் அதிகப்படியான ஒரு அபேட்சகரை அந்தரங்கமாக நிறுத்தி வைக்கும். சிறந்தவருக்கு ஓட்டுச் செய்யவேண்டு மென்று நினைக்கும் சுயேச்சையாளர்கள் இந்த அதிகப்படியான அபேட்சருக்கு ஓட்டுச் செய்வார்கள். ஆனால் இந்த அபேட்ச கருக்கு எதிர்க்கட்சியிலிருந்த ஓட்டுக்களை பிரிப்பாரே ஒழிய, ஜெயிக்கமாட்டார்.

இரு கட்சிகளுள் ஒரு பக்கம் சாய்ந்து தேர்தல் வெற்றிக்குக் காரணமாயிருக்கும் சுயேச்சையாளர் தங்கள் பலத்தை எப்படி உபயோகிப்பது என்பது பற்றி 'மெல்லட்' பின்வரும் யோசனை களைக் கூறுகிறார். "தற்போது பதவியிலிருப்பவர் மறுதேர் தலுக்கு நின்றால் அவரை ஆதரிப்பதா என்று சுயேச்சையாளர் கூடி ஆலோசிக்கவேண்டும். அவரை ஆதரிப்பது என்று முடிவு செய்தால் அவருக்கு ஓட்டளித்து வெற்றிபெறச் செய் தால் அவர், அனுபவமும் செல்வாக்கும் மிகுந்தவராவார். மறுதேர்தலுக்கு அவர் நிற்பதை ஆதரிக்கலாகாது என்று தீர்மானித்தால் இவர்கள் ஒன்று சேர்ந்து அவரை எதிர்ப்ப வரை ஆதரித்து அபேட்சகர்களில் இவர் சிறந்தவராயிருந் தாலும், இல்லாவிட்டாலும் வெற்றி பெறச் செய்யலாம் ஒரு அபேட்சகர் எவ்வளவு உதவாக்கரையாக இருந்தாலும் அவர்

பதவியிலிருப்பவரைத் தோற்கடித்தால் பூர்வ அனுபவமில்லாமல் காங்கிரஸுக்குள் புதிதாய்ப் புகுந்தவரே யாவார்.''

மக்களுக்கும், அவர்களுடைய சட்டசபைப் பிரதிநிதி களுக்குமுள்ள இந்தத் தொடர்பு மிகமிகக் குறைவாயிருக்கலாம். ஆனாலும் அரசாங்கத்தின் நியாயமான அதிகாரங்களெல்லாம் ஆளப்பட்டவர்கள் அளிக்கும் அனுமதியிலிருந்து தோன்றுகிற தென்று சுதந்திரப் பிரகடனத்தில் கூறப்பட்ட ஜனநாயகக் கொள்கைக்கு இந்த உறவு ஒத்ததாயிருக்கிறது. ஒரு கட்சியே நீடித்து வெற்றி பெறும் இராச்சியங்களிலும் காங்கிரஸ் பிரதி நிதிகள் தொகுதிகளிலும் மக்கள் மறுவார்த்தை பேசாமல் தங்கள் கட்சியையே ஆதரிக்கின்றனர். ஆனால் அவர்கள் இந்த ஆதரவை எந்த சமயத்திலும் நிறுத்திவிடலாம். மேலும் ஜனநாயக ஆட்சியின் முக்கியமான அம்சம் என்னவெனில் தேர்தலில் ஓட்டுப் போடாதவர்கள் மட்டுமல்ல, ஓட்டுப் போட் டுத் தோற்றவர்களும், ஜெயித்தவர்கள் ஆட்சிக்கு உட்பட்டு நடக்கவேண்டும் என்பதுதான். காங்கிரஸுக்கு தேர்தல் நடப் பதில் வேறெந்தக் குறைபாடுக ளிருந்தாலும் மேற்கூறப்பட்ட சிறந்த பலன் கிட்டுகிறது.

சிறந்த சேவை செய்த ஜனாதிபதி மீண்டும் தேர்ந்தெடுக் கப்பட்டால் அந்த வெற்றி காங்கிரஸிலுள்ள அவருடைய கட்சிக் குப் பேருதவியாயிருக்கும். காங்கிரஸ் தேர்தலில் கடுமையான போட்டியிருந்தாலும், மக்கள் ஆதரவு பெற்று வெற்றிபெற்ற ஜனாதிபதியின் கட்சிப் பக்கம் சாயலாம். இப்படிச் சாய்வதை 'ஜனாதிபதியின் வாலைப் பிடித்துக்கொண்டு ஓடுவது' என்று சொல்லுவதுண்டு, இந்தப் பழக்கம் காங்கிரஸ்காரர்களும், செனட்டர்களும் தங்கள் கட்சித் தலைவரான ஜனாதிபதியிடம் விசுவாசமாயிருக்க உதவுகிறது. அவருக்குக் கேடு செய்தால் அவர்களுக்குத்தான் கேடு விளையும். எந்தக் கட்சித் தலைவர் ஜனாதிபதியாக வருகிறாரோ, அந்தக் கட்சி அடுத்த 2-வது வரும் கரங்கிரஸ் தேர்தலில் ஏறக்குறைய எப்போதும் தோல்வி அடைவார்கள் என்பது குறிப்பிடத்தக்க விஷயம். ஏனெனில் அந்தச் சமயத்தில் ஜனாதிபதி பதவிக்குத் தேர்தல் கிடையாது.

ஜனதிபதியை அதரிப்பவர்களில் ஒருவரையே காங்கிரஸ் கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுப்பார்கள். ஆனல் மிகுந்த அதிகாரமுள்ள கமிட்டித் தலைவர்கள் ஜனதிபதிக்கு முற்றிலும் விரோதமுள்ளவராய் இருக்கலாம். உதாரணமாக, 1953-ல். ஜனதிபதி ஐஸன்ஹோவர் ஆட்சி தொடங்கிய காலத்தில் வரிகளைக் குறைக்காமல் வரவு செலவைச் சரிக்கட்டும் அவர் கொள்கையை வரவு செலவு ஆராய்ச்சிக் கமிட்டித் தலைவர் கடுமையாக எதிர்த்தார்.

இம்மாதிரி கட்டுப்பாடின்மையும், அதன் மூலம் அடுத்த தேர்தலில் தோல்வியுறும் நிலை ஏற்படலாம் என்பதும் கட்சியமைப்பு இன்னும் சீராக இருப்பதற்கான யோசனைகளைக் கூறத் தூண்டின. சில சமயம் கட்சி உள்குழுவினரும், அதன் கொள்கைகளை வகுப்பவர்களும் கட்சியைச் சேர்ந்தவர்கள் அதன் முடிவுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டும் என வற்புறுத்தி வந்திருக்கிருர்கள். ஆனல் சிலர் கட்சிக் கட்டுப்பாட்டின்படி ஓட்டு செய்யச் சில தடங்கல்கள் இருக்கின்றன என்று கூறுகிருர்கள். இப்படிப்பட்டவர்களைக் காக்கவும் வகைசெய்ய வேண்டியிருக்கிறது. கட்சித் துரோகம் செய்பவர்களைத் தண்டிக்க வகையில்லாததால், கட்டுப்பாட்டை அமுல் செய்வது சங்கடமாயிருக்கிறது. கட்சிக்கு மாருக நடப்பவர்களை அவர்கள் தொகுதி மக்கள் ஒழுங்குக்குக் கொண்டுவர முடியாது என்பதுதான் கட்டுப்பாட்டை நிலைநாட்ட முடியாமல் கட்சித் தலைவர்களுக்கு முக்கியமான சங்கடமளிக்கிறது. அவருடைய ஊர் ஓட்டர்கள் அவரை மீண்டும் தேர்ந்தெடுக்கத் தயாராயிருக்கும் வரையில் ஒருவர் ஜனநாயகக் கட்சியின் பெயர்பூண்டு குடியரசுக் கட்சிக்கு ஓட்டுச் செய்வதைத் தடுக்க முடியாது. 1953-ல் குடியரசுக் கட்சியினர் ஸெனடர் மார்ஸைச் செய்த மாதிரி கட்சித் தலைவர்கள் அப்பேர்ப்பட்டவர்களைக் கமிட்டியில் இடம் பெருமல் செய்துவிடலாம்.

பார்லிமெண்டரி அதிகாரங்களும் பொறுப்புகளும் இல்லாத காங்கிரஸில் அமெரிக்க இரு கட்சிமுறை இயங்குவதின் விளைவு தான், இந்தக் கட்டுப்பாட்டுக் குலைவுக்குக் காரணம். ஜனதிபதியை எதிர்க்கும் கட்சி அனேகமாக காங்கிரஸ் இரு சபை

களிலும் சிறுபான்மையினராகத்தானிருப்பர். சிறுபான்மையின ரின் கடமை பெரும்பான்மையினரை எதிர்ப்பதுதான் என்பது ஓரளவுதான் உண்மை. விவாதத்திற்கிடமான விஷயங்களை பூர்ணமாகச் சர்ச்சை செய்வதும் நிர்வாகத்தின் சந்தேகத்திற் கிடமான செயல்களை நன்கு விசாரித்தறிவதும் எதிர்க்கட்சியின் கடமை என்பது உண்மை. ஆனால் சிறுபான்மைக் கட்சியி லுள்ள பிளவுகளும் ஜனாதிபதிக்கும், பெரும்பான்மைக் கட்சிக்கு முள்ள முரண்பாடுகளும் எதிர் கட்சியின் வேலையைச் சிக்க லுள்ளதாகச் செய்துவிடுகிறது, அனேக பிரச்னைகளில் ஒவ் வொரு கட்சியிலும் சிலர் தங்கள் கட்சிக்கு எதிராக ஓட்டுச் செய்வார்கள் என எதிர்பார்க்கலாம். சிறுபான்மைக் கட்சியில் விசுவாசமுள்ளவர்களில் அநேகருக்கு, "நாம் ஜனாதிபதியை எதிர்ப்போமா அல்லது அவர் கட்சியை எதிர்ப்போமா" என்கிற சந்தேகம் எழலாம்.

1933-லிருந்து 1952 வரை குடியரசுக்கட்சியினரின்பொதுக் கொள்கை ஜனாதிபதியை எதிர்ப்பதுதான். ஜனாதிபதிக்கும் காங்கிரஸுக்கும் தகராறு இருக்கையில் அநேகக் கட்சியினர் தெற்குப் பகுதி ஜனநாயகக் கட்சியினருக்கு, சாதகமாக ஓட்டுச் செய்தனர். இந்தத் தெற்கத்தி ஜனநாயகக் கட்சினர், தங்கள் கட்சிக்குள்ளேயே ஜனாதிபதிக்கு எதிராக ஓட்டுச் செய்பவர்கள். ஜனங்கள் பெரிதும் காங்கிரஸிலிருக்கும் ஜனநாயகக் கட்சி யினரைவிட, ஜனாதிபதியிடம் அதிகப் பற்றுள்ளவர்களாயிருந்த தால் இந்தக் கொள்கை பெரிதும் பயனளிக்க வில்லை, நிர்வா கத்தைப் பற்றிக் கூறப்பட்ட குறைகள் ஓட்டர்கள் மனதைக் கவர்ந்த பிறகு இந்த எதிர்க்கட்சிக்கு ஆதரவு முறை பயனளிக் கத் தொடங்கியது.

எதிர்க்கட்சியின் ஆதிக்கத்திற்குட்பட்ட காங்கிரஸை சமா ளிக்க வேண்டிய நிலைமை ஜனாதிபதிக்கு ஏற்பட்ட பிறகு காங் கிரஸுக்கும் ஜனாதிபதிக்கும் உள்ள போராட்டம் உச்சநிலை யடைந்தது. ஆனால் எதற்கும் ஒரு எல்லையுண்டு. எந்தக் கட்சியிலுமுள்ள "வெறியர்கள்" தவிர, எந்த அரசியல்வாதியும் நாட்டிற்கு அபாயம் ஏற்படும் அளவிற்கு ஜனாதிபதியுடன் போராட்டத்தை நீடிப்பதற்கு விரும்புவதில்லை. விரோதப்

பான்மையுள்ள காங்கிரஸ் அரசாங்கச் செலவை வெட்டவும், செனட், ஜனாதிபதி செய்யும் நியமனங்களை நிராகரிக்கவும் சட்டப்படி உரிமையுண்டு. ஆனால் காங்கிரஸில் புத்திசாலி களாயுள்ள உறுப்பினர், தீவிர தந்திரங்கள் நீண்டகால நற்பயனை அளிக்காது என்பதை உணர்ந்திருக்கிறார்கள். இந்த உணர்வின் விளைவாக ஜனாதிபதி காங்கிரஸ் போராட்டம் பூரண அளவுக்கு நடப்பதில்லை.

உதாரணமாக 80-வது காங்கிரஸில் குடியரசுக் கட்சியின் விவேக மிகுந்த தலைவர் ஸெனடர் வான்டன் பர்க்கின் ஒத் துழைப்பால் ஜனாதிபதி ட்ரூமன் மார்ஷல் திட்டத்திற்கு அங்கீ காரம் பெற்றார். இதை எதிப்பதனால் லாப மில்லை, நஷ்டமேற் படலாம் எனக்கூறி வான்டன்பர்க் தனது கட்சியினரை திட்டத் திற்கு ஆதரவளிக்கச் செய்தார். இத்திட்டம் நிறைவேறாமல் போயிருந்தால் 1948-ம் வருஷ தேர்தலில் கம்யூனிஸ்டுகள் ஜெயித்திருப்பார்கள். ஆகையால் மார்ஷல் திட்ட எதிர்ப்பாளர் கள்தான் இதாலி கம்யூனிஸ்டாகப் போவதற்குப் பொறுப்பாளி கள் என அமெரிக்காவில் குறைகூறி இருப்பார்கள்.

உள்நாட்டு விஷயங்களிலும் 80-வது காங்கிரஸில் பெரும் பான்மை பலம் பெற்றிருந்த குடியரசுக் கட்சியினருக்கும், ஜன நாயகக் கட்சியைச் சேர்ந்த ஜனாதிபதிக்கும் முரண்பாடு கடுமை யாகவே இருந்தது. பொதுஜன ஆதரவுள்ள எல்லாத் திட்டங் களுக்கும் ஜனாதிபதி அங்கீகாரம் கோரினார். இவைகளில் சில, ஜனநாயகக் கட்சி பெரும்பான்மை பலம் பெற்றிருந்தாலும் நிறை வேறியிருக்காது. சில ஜனநாயகக் கட்சியினர் உதவி கொண்டு குடியரசுக் கட்சி ஆதிக்கத்திலிருந்த காங்கிரஸ் அவருடைய திட்டங்களைத் தேர்தல் பிரசார காலத்தில் குடியரசுக் கட்சியின ருக்கு எதிராகப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று ஜனாதிபதி ட்ரூமன் தனது குறிப்புப் புத்தகத்தில் எழுதிக்கொண்டார். குடி யரசுக் கட்சியினர். ட்ரூமனின் கொள்கைகளில் பலவற்றை நிறைவேறாமல் தடுத்தாலும், அதனால் ட்ரூமனை யாரும் குறை கூறவில்லை. அதுமட்டுமல்ல ; அவர் மீண்டும் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

ஆனுல் 1932-ல் ஜனுதிபதி ஹுவருக்கு எதிராக காங்கிரஸ் இருக்கையில், பொருளாதார மந்தத்தை நீக்க அவர் செய்த முயற்சிகளை ஜனநாயகக் கட்சினர் தடை செய்து, அவரையே அந்த மந்தத்திற்குப் பொறுப்பாளியாகவும் செய்தனர். இம் மாதிரி பல தடவைகள் நடந்து இருக்கிறது.

இதிலிருந்து ஒரு ஜனுதிபதியின் கட்சி 2-வது வருஷ காங் கிரஸின் செல்வாக்கை இழந்தால், 4-வது வருஷத் தேர்தலில் ஜனுதிபதி தோல்வியுறுகிருர் என்ற கருத்து மக்களுக்குப் பழக்க மாகி விட்டது.

ஜனுதிபதிக்கும் காங்கிரஸுக்கும் நடக்கும் போராட்டம் ஒரு புறம்; இரு கட்சிகளுக்கும் போராட்டம் மறுபுறம்; இவை களுக்கிடையில் அரசாங்கம் நல்ல காரியங்களும் செய்கிறது என்பது ஆச்சரியமாகத் தோன்றலாம்.

அரசியல் சம்பந்தமான விவகாரங்களின் முக்கியத்து வத்தை எடுத்துக்காட்டும் பொருட்டு இத்தகைய கட்சிப் போராட்டங்களைப்பற்றி இங்கு சுருக்கமாக விளக்கப்பட் டுள்ளது.

ஆனுல் பல்வேறு சக்திகளின் வேகத்திஞல் ஒருவித ஒரு மைப்பாடு ஏற்பட்டு அனுபவ சாத்தியமான முறையில் செயல் புரிவது சாத்தியமாகிறது. இந்த சக்திகளுள் ஒன்று இரு கட்சி களிலும் தாராளப் போக்குள்ளவர்களும் பிற்போக்கானவர்களும் இருக்கின்றனர் என்பது. எப்படியிருந்தபோதிலும் ஜனுதிபதி எதிர்கட்சியின் ஆதரவை ஓரளவு பெறுகிருர். இதெல்லாம் தர்க்கரீதிக்கு ஒவ்வாது எனக் கருதலாம். ஆனுல் இதன் விளை வாக இரு கட்சிகளும் மீளாச் சண்டையில் ஈடுபட்டிருப்பது தவிர்க்கப்படுகிறது. எல்லாவற்றையும்விட சிறப்பான அம்சம் காங்கிரஸில் தலைவர்களாயிருப்பவர்களில் பெரும்பாலோர் உண்மை நிலை யறிந்த அரசியல் வாதிகள், சமரசக் கலையில் தேர்ச்சி பெற்று அதிகாரப் பதவிக்கு வந்தவர்கள் என்பதுதான்.

# 6. காங்கிரஸ் வேலை முறை

இரண்டு வருஷத்திற்கு ஒருமுறை காங்கிரஸிற்குத்தேர்தல் நடக்கிறது. 82-வது காங்கிரஸ் 1950-ல் தேர்ந்தெடுக்கப்பட்டது. 83-வது காங்கிரஸ் 1952-ல் தேர்ந்தெடுக்கப்பட்டது. பிரதிநிதிகள் சபையின் உறுப்பினர் யாவரும் ஸெனட்டர்களில் மூன்றில் ஒரு பகுதியினரும் இரண்டு வருஷத்திற்கோர் முறை தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

காங்கிரஸ் வருஷத்திற்கு ஒரு முறையாவதுகூட வேண்டும். அது வழக்கமாக ஜனவரி 2-ந் தேதி கூடுகிறது. புது காங்கிரஸின் முதல் கூட்டத்தில் பெரும்பான்மைக் கட்சியிலிருந்து அதன் நிர்வாகிகளும், கமிட்டி அங்கத்தினர்களும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

அமெரிக்க உபஜனாதிபதி செனட்டின் சபாநாயகர், செனட்டில் ஏதாவது ஒரு பிரச்னையில் சம ஓட்டிருந்தால் இவருடைய ஓட்டைப் போட்டு பிரச்னைக்கு முடிவு கட்டலாம் அவருடைய மற்ற அலுவல்கள் திட்டமானவை யல்ல, ஜனாதிபதி அவரை செனட்டர்களுடன் உறவு கொள்ளுவதற்கும் பயன்படுத்தலாம். அவர் மந்திரிசபை கூட்டங்களுக்கு வந்து ஜனாதிபதிக்கு உதவி செய்யலாம். ஒரு மாஜி செனடர் உப ஜனாதிபதியாக வந்தால் அவருடைய மாஜி சகாக்களிடம் உள்ள செல்வாக்கை நன்கு பயன்படுத்தலாம்.

உபஜனாதிபதி இல்லாத சமயங்களில், தற்காலிகத் தலைமை வகிக்க ஒருவரை செனட் தேர்ந்தெடுக்கும். மற்றும் தேர்ந்தெடுக்கப்படும் அதிகாரிகள்—காரியதரிசி சார்ஜண்ட்-அட்-ஆர்ம்ஸ் (இவர்கள், செனட்டின் நியதமான காரியக்கிரமங்களை ஒழுங்காகப் பார்த்துக் கொள்பவர்கள்) சாப்ளின், பெரும்பான்மை, சிறுபான்மைக் கட்சிகளின் காரியதரிசிகள், ஆகியவர்களாம். மற்றப்படி கமிட்டித் தலைவர்கள் உள்பட பிற செனட் நிர்வாகிகள் முதலியோர். திடீரென கட்சிகள் கவிழ்ந்தாலொழிய. முந்திய காங்கிரஸில் இருந்தவர்களே தொடர்ந்து பதவி வகிப்பார்கள்.

பெரும்பான்மை கட்சியின் உட்குழு, அதிகாரிகள், கமிட்டி தலைவர்கள், கமிட்டி அங்கத்தினர்களில் பெரும்பான்மையோர் ஆகியவர்களை நியமனம் செய்கின்றது. சிறுபான்மைக் கட்சியினர் கமிட்டிகளில், தங்கள் கட்சிப் பிரதிநிதிகளை நியமிக்கின்றனர். இக்கமிட்டிகளில் இடம்பெற நீண்ட கால அனுபவம் ஒரு முக்கிய யோக்கியதாம்சம். ஒரு கமிட்டியின் தலைவர் வழக்கமாக அதே கமிட்டியில் நீண்டகாலமாக சேவை புரிந்தவராயிருப்பார். செனட்டில் நீடித்து அநுபவம் பெற்றவருக்கு எந்தக் கமிட்டியிலும் தனக்கு ஸ்தானம் வேண்டுமென்று கோரும் உரிமையுண்டு.

பிரதிநிதிகள் சபையின் நாயகரை சபையினர் தேர்ந்தெடுக்கின்றனர். அவர் பெரும்பான்மைக் கட்சியைச் சேர்ந்தவராயிருப்பார். ஜனாதிபதியும், உப ஜனாதிபதியும், இறந்துவிட்டால், அந்த ஸ்தானத்திற்குரியவர் பிரதிநிதி சபை நாயகரே யாவர். காங்கிரஸில் அவருடைய பதவி மிகவும் சக்தி வாய்ந்தது.

சபைத் தலைவருக்கு 'ஸ்பீகர்' எனும் பெயர், பிரிட்டனைப் பின்பற்றி சூட்டப்பட்டது. ஆனால் இவருடைய கடமை பிரிட்டிஷ் 'ஸ்பீக'ருடையது போன்றதல்ல. பிரிட்டிஷ் காமன்ஸ் சபைத் தலைவராக, பாரபட்ச மற்றவர், சபை நடைமுறை தெரிந்தவர் என்பதற்காக ஒருவரைத் தேர்ந்தெடுப்பர். ஆனால் அமெரிக்கக் காங்கிரஸின் நாயகர் கட்சியை நிர்வகிக்கும் பொறுப்புள்ள முக்கியஸ்தர்களில் ஒருவர். உதாரணமாக அவர் தான் மகாநாட்டுக் கமிட்டிகளின் அங்கத்தினர்களை நியமிக்கிறார். இவர்களும் இதுபோன்ற செனட்டர்களும் சேர்ந்து, இருசபைகளுக்குமுள்ள மசோதாக்கள் சம்பந்தமான, அபிப்பிராய பேதங்களைச் சீர் செய்வார்கள். அவர்கள் கூடிச் செய்யும் முடிவுகளை இரு சபைகளும் அங்கீகரிக்கும். மிக முக்கியப் பிரச்னைகளில், முடிவு என்ன என்பது சபா நாயகர் யாரைக் கமிட்டிக்கு நியமிக்கிறார் என்பதைப் பொறுத்திருக்கிறது.

சபையில் மேடைமீது வந்து, யார் யார் பேசுவது என்பதை சபாநாயகர் தம் இஷ்டம் போல் முடிவு செய்யலாம்.

ஒரு மசோதாவை எந்தக் கமிட்டிக்கு அனுப்பலாம் என்பது பற்றிச் சந்தேகம் ஏற்பட்டால், சபா நாயகர் எங்கே அதை அனுப்ப வேண்டும் என்று முடிவு செய்யலாம். அவர் இஷ்டப் படி அதை அனுசரிக்கும் கமிட்டிக்கும் அனுப்பலாம், நிராகரிக்கும் கமிட்டிக்கும் அனுப்பலாம், சபாநாயகர் இஷ்டப்பட்டால் தன் பதவிக்கு தற்காலிகமாக ஒருவரை நியமித்து விட்டு, தாமே விவாதத்தில் கலந்துகொள்ளலாம்.

1910-க்கு முன் மெய்னைச் சேர்ந்த தாமஸ்பீரிடிடமும் இல்லினுயைச் சேர்ந்த 'அங்கிள்ஜோ' கானனிடமும் சபா நாயகர் பதவி யதேச்சதிகார சாதனம்போல் இருந்தது. சபா நாயகர் 'கானன்' என்பவர் நிரந்தரக் கமிட்டி அங்கத்தினர்களை யெல்லாம் நியமித்தார். அவர் விதிக் கமிட்டித் தலைவராயிருந் தார். இந்தக் கமிட்டி எந்த மசோதாவையும், அமுல் நடத் தாமல் செய்து விடலாம். 1910-ல் ஜனநாயகக் கட்சியினரும், குடியரசுக் கட்சியிலிருந்து பிரிந்து வந்த மேற்கத்தியரும் சேர்ந்து விதிக் கமிட்டியில் சபாநாயகர் அமராமல் செய்தது மன்றி நிரந்தரக் கமிட்டிகளுக்கு அங்கத்தினர் நியமிக்கும் உரிமையையும் அவரிடமிருந்து பறித்து விட்டனர்.

பிரதிநிதிகள் சபையிலும், செனட்டிலும் முக்கியமான பதவிகளுக்கும், முக்கியமாக கமிட்டித் தலைவர் பதவிக்கும், செல்வாக்குள்ள கமிட்டி அங்கத்தினர் பதவிகளுக்கும் முதிர்ந்த அனுபவம் பெற்றவர்களையே தேர்ந்தெடுக்கிறுர்கள். இதன் விளைவாகக் காங்கிரஸில் மிகவும் கேந்திரமான பதவிகளைப் பழைய உறுப்பினர்களையே ஆயுள் பூராவும் தேர்ந்தெடுக்கும் ராஜ்யப்பிரதிநிதிகளே வகிப்பதைக் காணலாம்.

சபைகளின் அதிகாரிகள், கமிட்டியினர் தவிர, செனட்டுக் கும், பிரதிநிதிகள் சபைக்கும் கட்சி ஸ்தாபனங்கள் இருக் கின்றன. சட்டமியற்றும் விஷயத்தில் இந்த ஸ்தாபனங்களுக்கு மிகுந்த செல்வாக்கு உண்டு. ஒவ்வொரு சபையிலும் ஒவ்வொரு கட்சிக்கும் ஸ்தாபனம் உண்டு. இதை, குடியரசுக் கட்சியினர், மகாநாடு என்றும் (Coneereucl) ஜனநாயகக் கட்சியினர் உட்குழு (Eaueus) என்றும் அழைக்கின்றனர். இந்த

ஸ்தாபனத்தினர் உத்தியோகப் பதவிகளுக்கு தங்கள் பிரதிநிதிகளை நியமிக்கின்றனர். சபையின் கட்சித் தலைவரையும், துணைத் தலைவரையும் நியமிக்கின்றனர் கட்சித் தலைவர், சபையில் தமது கட்சி எப்படி நடந்துகொள்ள வேண்டும் எந்தெந்த அங்கத்தினர் எந்தெந்தச் சந்தர்ப்பத்தில் பேச வேண்டும் எனத் தீர்மானிக்கிருர். விவாதத்தை துரிதப் படுத்த வேண்டுமா, தாமதப் படுத்த வேண்டுமா என நிர்ணயிக்கிருர். கட்சிக் கொரடாவாக இயங்குபவர், அங்கத்தினர்கள் எங்கே சென்றிருக்கின்றனர் என்பதைக் கவனித்துக் கொண்டிருந்து அவர்களை ஓட்டுப் போடும் சமயத்துக்கு அழைத்துக் கொண்டு வந்துவிடுகிருர்.

பெரும் பான்மைக் கட்சியில் மசோதாக்களை நிறைவேற்றுவதற்கான ஒரு கமிட்டி இருக்கிறது. இதற்குக் கட்சித்தலைவர் தலைமை வகிக்கிருர். இந்தக் கமிட்டியும் விதிகள் வகுக்கும் கமிட்டியும் ஒத்துழைத்து கட்சி மகா நாடு அல்லது உட்குழு ஆதரிக்கும் மசோதாக்களை நிறைவேற்ற வழி காணும். செனட்டில் இரு கட்சிகளுக்கும் இம்மாதிரி கமிட்டிகள் இருக்கின்றன. ஆனுல் அவைகள் பிரதிநிதி சபைக் கமிட்டி மாதிரி சக்தி வாய்ந்தவையல்ல. ஏனெனில் செனட்டர்களை சுலபமாகக் கட்டுப் படுத்த முடியாது.

ஒரு கட்சி திட்டமான கொள்கையை மேற்கொண்டு அதை அனுசரித்து சட்டமியற்றுவதில் கட்சி ஸ்தாபனம் தனது திட்டப்படியே எல்லாவற்றையும் சாதித்துக் கொள்ள முடியாமற் போனுலும் சட்டம் நிறைவேறுவதில் அதற்குப் பெரும்பங்கு உண்டு இம்மாதிரிப் பிரச்னைகளில் கட்சி ஸ்தாபனங்கள் விவாதத்தை ஒழுங்கு செய்து, தம் கட்சி அங்கத்தினர்களைத் திரட்டி, ஓட்டுபோடக் கொண்டு வரும். பல சந்தர்ப்பங்களில் ஒவ்வொரு பிரச்னைபற்றியும் ஒவ்வொரு கட்சியும் பிளவுபடக்கூடும். இம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் கட்சியில் முதிர்ந்தோர் அபிப்பிராயம் நிறைவேறுவதற்கு ஸ்தாபனங்கள் ஏற்பாடு செய்கின்றனர். இரு கட்சிகளின் முக்கியஸ்தர்களும், ஒன்றுகூடி இரு கட்சிகளின் யுவர்கள் கருத்து நிறைவேருமல் செய்வது முண்டு. உதாரணமாக

ட்ரூமன் காலத்தில் இரு கட்சிப் பிற்போக்காளர்களும், ஒன்று கூடி ஜனாதிபதியை எதிர்த்தனர்.

பார்வையாளர் பகுதியிலிருந்து, செனட் அல்லது பிரதி நிதிகள் சபை நடவடிக்கைகளைப் பார்க்க வாஷிங்டனுக்கு வரும் இராச்சிய மக்கள் அங்கு நடக்கும் கூத்தைப் பார்த்து அதிர்ச்சி அடைவார்கள். அங்கத்தினர் ஒருவர் பேசிக்கொண்டிருக்கையில் சபை அநேகமாக காலியாயிருக்கும். உள்ளே இருப்பவர்களுமேகூட, ஏதாவது படித்துக் கொண்டிருப்பார்கள்; அல்லது உலாத்திக் கொண்டும் பேசிக்கொண்டு மிருப்பார்கள். ஒரு சிலர் சபாநாயாகர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருப்பர், அல்லது அவருக்கு அனுசரணையாகவோ, எதிராகவோ இடை மறித்துப் பேசிக் கொண்டிருப்பார். ஓட்டெடுப்பதற்கோ அல்லது சபை நடவடிக்கை செல்லுபடியாவதற்கு வேண்டிய அங்கத்தினர் இருக்கின்றனரா என்பதற்கோ, நகரெங்குமுள்ள காரியாலயங்களில் மணி அடிக்கும். மணியோசை கேட்டதும் அங்கத்தினர்கள் விழுந்தடித்துக் கொண்டு, ஓடிவந்து ஓட்டுப்போடுவார்கள். ஓட்டுப் போட்டுவிட்டு மீண்டும் வெளியேறிக் கவலையின்றித் திரிவார்கள்.

பெரும்பான்மையான செனட்டர்களும், காங்கிரஸ் உறுப்பினரும், தங்கள் தொகுதியாளர் தொந்திரவுகளுக்கிடையே நரம்புத் தளர்ச்சி ஏற்படும் அளவுக்குக் கஷ்டப்பட்டு வேலை செய்கின்றனர். 'சபாமண்டபத்தில் நடக்கும் கேலிக்கூத்திலிருந்து காங்கிரஸின் உண்மை உழைப்பை மதிப்பிடலாகாது. மக்களையோ, அல்லது ஒரு சில காங்கிரஸ்காரரையோ கவரத் தக்க விவாதம் சபையில் பெரும்பாலும் நடக்காமலிருக்கலாம். சபை நடந்து கொண்டிருக்கும் காலத்தில் சபையில் தாங்கள் ஆஜர் என்பதைக் காட்டுவதற்காக உள்ளே வரலாம்; சபை நடவடிக்கையில் இடம் பெறுவதற்காக ஒரு பிரசங்கம் செய்ய வருவார்கள்; அல்லது மற்றொரு அங்கத்தினர் பேசுகையில் இடை மறிப்பதற்காக வரலாம். வரவிருக்கும் மசோதாவிற்கு அங்கத்தினர்கள் ஆதரவு தேட வரலாம். சபாமண்டபம் ஒரு சந்தைமாதிரி. ஆனால் அந்தச் சந்தையில் விற்பனைக்கு வரும் சரக்குகள் அங்கு உற்பத்தியாவதில்லை. அவை, கமிட்டி

களிலோ அல்லது சபையின் அங்கத்தினர் தனிப்பட்ட முறை யில் கூடுமிடங்களிலோ தயாராகின்றன.

சட்டமியற்றுவதற்கு முக்கியமான விஷயங்களைப் பற்றி ஆராய்ந்து யோசனைகூற செனட்டிலும், பிரதிநிதிகள் சபை யிலும் நிரந்தரக் கமிட்டிகள் இருக்கின்றன. 1946-ல் காங்கிரஸ் திருத்தி யமைக்கப்பட்ட பொழுது, செனட் நிரந்தரக் கமிட்டி கள் 33-லிருந்து 15-ஆகவும், பிரதிநிதிகள் சபை நிரந்தரக் கமிட்டிகள் 48-லிருந்து 19-ஆகவும் குறைக்கப்பட்டன. இந்த சீர்திருத்தத்தின் நோக்கம் ஒரு கமிட்டி செய்த வேலையையே மற்றொரு கமிட்டி செய்யாமல் தவிர்ப்பதும் கமிட்டிகள் குறைவா யிருந்தால், அவைகளின் உறுப்பினர் குறைந்த வேலையை அதிகக் கவனத்துடன் செய்யலாம் என்பதும்தான். இந்தச் சீர்திருத்தம் அவ்வளவு சிறப்பான பயனளிக்கவில்லை. ஏனெனில் இந்தக் கமிட்டிகள் பல உப கமிட்டிகளை அமைத்தன.

இரு சபைகளிலிருந்தும் சேர்ந்த பல கூட்டுக் கமிட்டிகள் இருக்கின்றன. இவைகள் அச்சு வேலை, பொருளாதார அறிக்கை, போன்ற கவர்ச்சியற்ற அம்சங்களை கவனிக்கின்றன. முன்னுக்கு வர விரும்பும் அரசியல் வாதிகளுக்கு இவைகளில் வரி விதிப்பு, ராணுவப்படை நிர்வாகம் போன்ற விஷயங்களி லுள்ள பிரசார அம்சங்கள் கிடையாது. கூட்டுக் கமிட்டிகள், கேட்ட விஷயத்தையே கேட்டு விசாரிப்பதைத் தவிர்க்கின்றன. ஆனால், அபிப்பிராய பேதத்திற்கிடமான விஷயங்களிருப்பதால் அமெரிக்காவில் இருவிதமான சட்ட சபைகள் ஒரு விஷயத்தை இரு முறை விசாரணை நடத்துவதற்கு, முகாந்தர மிருக்கிறது.

1946-ல் நடந்த புனரமைப்பில், விசேஷக் கமிட்டிகள் அமைப்பதில்லை என காங்கிரஸ் உறுதி கூறிற்று. இந்த விசேஷக் கமிட்டிகள், கடந்த வருஷங்களில் ஆராய்ச்சி செய்வ திலேயே ஈடுபட்டிருந்தன. ஒரு விஷயத்தை யார் விசாரித் தறியவேண்டும் என்று யார் பிரேரேபிக்கிறரோ அவரையே அந்தக் கமிட்டித் தலைவராக நியமிப்பதனுல், அந்த வேலையை அவர் செவ்வனே செய்வார் என்று எதிர்பார்க்கலாம்.

உதாரணமாக, இரண்டாவது, உலக யுத்தம்பற்றி விசாரித்தறிய நியமிக்கப்பட்ட கமிட்டிக்கு, அச்சமயம் செனட் சபையிலிருந்த ட்ருமன் தலைவராக நியமிக்கப்பட்டார். அவர் திறமையற்றவர்கள், லஞ்சம் வாங்கியவர்களை விலக்கினர். இந்த வேலையின் பயனாக அவர் முதலில் உபஜனாதிபதியாகவும் பின்னர் ஜனாதிபதியாகவும் வந்தார்.

1946-க்குப் பிறகு நியமிக்கப்பட்ட விசேஷ கமிட்டிகளின் எண்ணிக்கை குறைவாயிருந்தாலும், இம்மாதிரி காரணங்களுக்காக விசேஷ அல்லது நிரந்திர உபக் கமிட்டிகள் நியமிக்கப்பட்டன.

ஒரு சட்டத்திற்கான மசோதா தயாரிப்பதற்கு கமிட்டிகள் நீண்ட காலம் ஆராய்ந்து விஷயங்களை அறிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. அனேக முக்கியமான மசோதாக்களுக்கு ஜனாதிபதியே யோசனை கூறுகிறார். இது பற்றி விசாரிக்கும் கமிட்டி, ஒரு நகலைத் தயாரித்து அனுப்புகிறது. இந்த நகல் தான், மசோதாவுக்கான பிள்ளையார் சுழி. இந்த மசோதா காங்கிரஸின் கவனத்திற்குப் போகுமுன் இதன் ஒவ்வொரு வாசகத்திற்கும் பொறுப்பு வகிக்கத் தயாராயிருக்கிறதா என்று கமிட்டி நன்கு கவனித்து முடிவு செய்ய வேண்டும்.

கமிட்டி முதலில் விசாரணை நடத்தும்; விசாரணை ரகஸ்யமாயிருக்குமா, பகிரங்கமா யிருக்குமா என்பது விஷயத்தின் முக்கியத்துவத்தைப் பொறுத்தது. இந்த விசாரணைகளில் நிர்வாகக் குழுக்களின் தலைவர்களும், அவர்களுக்கு யோசனைகளைக் கூறும் நிபுணர்களும் குறுக்கு விசாரணை செய்யப்படுவர். இம்மாதிரி குறுக்கு விசாரணையில் உண்மை வெளிவந்து விடும் என்று சொல்லுவதற்கில்லை. ஏனெனில் விசாரணை செய்யப்படும் விஷயத்தைப் பற்றிச் சாட்சிகளுக்கும் தெரிந்த அளவு நிபுணர்களுக்கும் விசாரிக்கும் காங்கிரஸ் உறுப்பினருக்கும் தெரியாது. மசோதாவினால் பாதிக்கப்படும் தனி நலன்களின் சம்பளம்வாங்கும் பிரதிநிதிகளிடமிருந்து விசாரணை செய்பவர்கள் உண்மை நிலையறிந்து விட முடியாது. சட்டசபை அந்தரங்கப் பகுதியில் தனிப்பட்ட நலனின் பிரதிநிதிகள் கமிட்டிகளின் முன் வாதம்

செய்வர். அது தவிர அவர்கள் காங்கிரஸ் உறுப்பினரை அந்தரங்கமாகச் சந்தித்துப் பேசியும் தங்கள் காரியத்தைச் சாதித்துக் கொள்வர்.

அதிகார வர்க்கத்தினரையும், தனிப்பட்ட நிபுணர்களேயும் சாதாரணமாக சந்தேகக் கண்ணேடு பார்க்கின்றனர், ஆனல், அவர்கள் கொடுக்கும் சாட்சியங்கள் தத்தம் கட்சியைப் பலப் படுத்துவதற்கானவைகளா யிருந்தாலும், அவைகளில் பல பயனுள்ள நேர்மையான யோசனைகள் அடங்கி இருக்கின்றன. கமிட்டிகள் சேகரிக்கும் தகவல்களில் பெரும் பகுதி அரசியல் சம்பந்தமானதாயிருக்கும். உதாரணமாக குறிப்பிட்ட மசோதாவை, யார் விரும்புகிருர்கள் யார் எதிர்க்கிருர்கள், இவர்களில் யாருக்குப் பலம் அதிகமாயிருக்கிறது என்பன போன்ற தகவல்கள் இருக்கும்.

அரசியல் தவிர மற்ற விஷயங்களில் நிபுணர்களாவதற்கு காங்கிரஸ் உறுப்பினருக்கு அவகாசம் கிடையாது. அரசாங்க வேலே சிக்கல் நிறைந்ததாகி விட்டதால் காங்கிரஸுக்கு நிபுணர்கள் உதவி தேவையாயிருக்கிறது. பல கமிட்டிகளுக்கு உதவி செய்ய பல உத்தியோகஸ்தர்கள் இருக்கின்றனர். இவர் களில் ஒரிருவர் நிபுணர்களாயிருப்பர். ஒவ்வொரு சபைக்கும் ஒரு சட்ட ஆலோசனே காரியாலயமிருக்கிறது. இது மசோதாக்கள் தயாரித்து கமிட்டிகளுக்கும், அங்கத்தினர்களுக்கும் அனுப்புகிறது. அமுலிலிருக்கும் கட்டங்களுக்குப் பொருத்த மாகவே இந்த மசோதாக்கள் தயாரிக்கப்படும்.

சமீப காலமாகக் காங்கிரஸின் நூல் நிலேயத்திலுள்ள நிபுணர்கள் உதவி பெரிதும் விரிவு படுத்தப்பட்டிருக்கிறது. அந்த நிபுணர்கள் அரசியல் விருப்பு வெறுப்பின்றி ஒவ்வொரு மசோதாவுக்கும் அவசியமான தகவல்களேச் சேகரித்துக் கொடுப்பர். தாங்கள் பிரசாரங்களுக்கு ஆதாரமாகவோ, கமிட்டி வேலேக்கு உதவியாகவோ, காங்கிரஸ் இவர்களேப் பயன்படுத்திக் கொள்கின்றது.

காங்கிரஸ் எப்படி வேலே செய்கிறது என்பதை விவரித்தால் அது உருப்படியான வேலே செய்வதில்லே என்று தோன்றலாம்.

ஆனால் அது மக்கள் விருப்பத்திற்கும், சந்தர்ப்பத்திற்கும் ஏற்ற முறையில் வேலை செய்கிறது. 1933-லிருந்து ஒவ்வொரு கூட்டத்திலும் உலகை அதிரச் செய்யும் முடிவுகளைச் செய்ய வேண்டிய சந்தர்ப்பங்கள் அதிகரித்து வருகின்றன. களைப் பூட்டும் வேலை செய்யும், அறிவும் தேசாபிமானமும் மிக்க காங்கிரஸ் உறுப்பினர் ஏற்கனவே மிதமிஞ்சி வேலை செய்து களைப்புற்றிருக்கையில் இப்படிப்பட்ட பெரிய பிரச்னைகளை எப்படி அறிந்துகொண்டு வேலை செய்ய இசைந்தார்கள் என்று தோன்றலாம். புதிய பொருளாதார திட்டத்திலிருந்து மார்ஷல் திட்டம் வரையில் நிறைவேறிய புதுச் சட்டங்கள் மிகுந்த பயனளித்திருப்பதுடன் இரு கட்சி ஆதரவையும் பெற்று வந்திருக்கின்றன. இந்த வெற்றிக்கு எந்தச் சக்தி துணை புரிந் திருக்கிறது ? அமெரிக்க மக்கள் தங்கள் தேவைகள், ஆசைகள் முடிவுகளை எந்தக் கொள்கைகள் மூலம் எந்த முறையில் தெரிவிக்கின்றனவோ, அந்தச் சக்திதான் துணை புரிகிறது என்று கூறுவது சரியான பதிலாகும். காங்கிரஸின் நடை முறைகளில் எவ்வளவு குழப்பமிருந்தாலும், மக்கள் சித்தத்தை அரசாங்கத்தின் செயல்களாக மாற்றத்தக்க நுட்பமான சாதனம் காங்கிரஸ் என்பதில் சந்தேகமில்லை.

காங்கிரஸின் திறமையின்மையைப் பற்றி அடிக்கடி கூறப் படுகிறது. எப்பொழுதாவது ஒரு சந்தர்ப்பத்தில் பிறர்செய்யும் வற்புறுத்தல் சகிக்கமாட்டாமல் காங்கிரஸே, சீர்திருத்த வெறி பிடித்ததுபோல் வேலை செய்கிறது. இதற்கு 1946-ல் நிகழ்ந் ததை உதாரணமாகக் கூறலாம், 'அமெரிக்க அரசியல் விஞ்ஞான சங்கம்' ஆராய்ச்சி நடத்தி அதை செனட்டர் லா பாலெட், (La Follette) காங்கிரஸ் உருப்பினர் மான்ரோனி என்கிற இருவரையும் தலைவராகக் கொண்ட விசேஷக் கூட்டுக் கமிட்டி பரிசீலனை செய்தது. இதன் விளைவாக 1946-ல் நடந்த புனரமைப்பில் கமிட்டிகளின் எண்ணிக்கை குறைக்கப் பட்டது மின்றி, நிபுணர்கள் அதிகமாக நியமிக்கப் பட்டனர், உறுப்பினர். சம்பளம் உயர்த்தப்பட்டது. சர்க்காரிட மிருந்து சிறு தொகைகள் நஷ்ட ஈடு கோரினவர்களின் வழக்கு களை காங்கிரஸ் விசாரிக்க வேண்டிய தொல்லை தவிர்க்கப்பட்டு,

இவைகளை முடிவு செய்வதற்காகத் தனிச் சட்டங்கள் இயற்றப் பட்டன. இந்த புனரமைப்பு மூலம் தேவையான எல்லாச் சீர் திருத்தங்களும் நிறைவேருமல் சந்தர்ப்பம் கை நழுவ விடப் பட்டது என்றும் குறை கூறப்படுகிறது.

எதற்கும் முதிர்ந்தவர்களை நியமிக்கும் முறையின் மூலம் இரு கட்சிகளில் பழமைப் பற்றுள்ளவர்கள் தலைமையில் இருக் கிருர்கள் என்று குறிப்பாக முற்போக்கு அரசியல்வாதிகள் குறை கூறுகிருர்கள். இந்தக் கிழவர்கள் அதிகாரப் பீடங்களில் அமர்ந்து கொண்டிருப்பதனுல் முக்கியமான கமிட்டிகளின் தலை வர்களாகப் புத்தி தடுமாற்றம் அடைந்தவர்களே காணப்படு கின்றனர்.

பதவிகளில் முதியோர்களையே வைத்திருப்பதற்குச் சாதக மாக, காங்கிரஸின் முதல் கூட்டத்திலேயே, எந்தப் பதவிக்கு யாரைத் தேர்ந்தெடுப்பது என்பது பற்றி சண்டை நடவாமல் தவிர்க்கலாம் எனக் கூறுகிருர்கள். பெரும்பான்மை கட்சிக்கு ஒரு சில அதிகப்படி ஓட்டுகளே இருந்தால் பதவிப் போட்டியில் கட்சி ஆரம்பத்திலேயே பிளவு பட்டுப் போகலாகாது. வரவு செலவு மாதிரி கேந்திரமான கமிட்டி தலைமைப் பதவி பற்றி கட்சி பிளவுபட்டால் இதுதான் சமயம் என சிறுபான்மைக் கட்சியினர் உட்புகுந்து விடுவர். செனட்டிலும், பிரதிநிதிகள் சபையிலும், நிர்வாகம் நடத்தும் அனுபவம் பெற்ற அரசியல் வாதிகள் முதியோரைக் கைவிடுவர் என்று எதிர்பார்ப்பதற் கில்லை.

குறைகூறப் படும் மற்ருெரு பழக்கம், சபைகளில் ஓயாமல் பேசி நடவடிக்கைகளை தடை செய்வது. தீர்மானமான ஒரு சிறு கூட்டத்தினருக்கு ஒரு மசோதா பிடிக்கா விட்டால், ஒருவர் பின் ஒருவராகக் கால வரையரையின்றிப் பேசி, அந்த மசோதா வைக் கொன்று விடலாம். அவர்கள் விவாதத்திற்குப் பொருத்த மாகப் பேச வேண்டும் என்கிற அவசியமில்லை. அவர்கள், ஷேக்ஸ்பியர் நாடகத்திலிருந்து ஒரு பகுதியையோ, பாக சாஸ் திரப் புத்தகத்தின் ஒரு பகுதியையோ உறக்கப் படிக்கலாம்.

செனட்டில் மூன்றில் இரு பகுதியினர் விவாதத்தை முடிக்க வேண்டும் என ஓட்டு செய்தால், பேச்சு நின்றுவிட வேண்டும். என்று ஒரு விதி இருக்கிறது, இந்த விதி அமைக்கப்பட்டிருக்கும் விசித்திரமான முறையிலிருந்து அது நடைமுறைக் கொத்ததல்ல என்பது விளங்கும். ஏனெனில் இரு கட்சியினரும், இந்த ஓயாமல் பேசும் சாதனத்தைக் கைவிட விரும்பவில்லை.

இப்படி ஓயாமல் பேசுவது பெரும்பான்மை ஆட்சிக்கு முரணனது என்று அதை ஆட்சேபிப்பவர்கள் கூறுகிருர்கள். ஒரு மசோதாவுக்கு பெரும்பான்மை ஆதரவு இருந்தால் சளசள வென்று பேசுபவர்கள். தங்கள் வாய் வீச்சை அதற்கு எதிராகப் பிரயோகிக்க மாட்டார்கள். ராஜ்யங்களில் சிறுபான்மையினர் விரும்பாத விஷயங்களில் பெரும்பான்மை ஆட்சி சமஷ்டிக் கொள்கைக்கு ஏற்காது என்று செனட்டில் ஆழ்ந்த அபிப்பிராயம் நிலவி வருகிறது. பெரும்பான்மை ஆட்சிக்கும் ஒரு எல்லையுண்டு என்றே அமெரிக்க மக்கள் உறுதியாக நம்புகின்றனர்.

குறிப்பாக நிச்சயமான பெரும்பான்மை பலமில்லாத இடங்களில் பெரும்பாலோர் ஆட்சி கூடாது என்றே அவர்கள் எண்ணுகின்றனர். தென் கரோலினு மக்கள் தங்களைப் பெரும்பான்மையான நியூயார்க் வாசிகள் ஆளலாகாது என்று கருதுகின்றனர். பிரதிநிதிகள் சபையினரில் பெரும்பான்மையா யுள்ளவர்கள் தங்கள் இஷ்டப்படி ஆட்சி நடத்துவதைத் தடுப்பதற்கே செனட் அமைக்கப்பட்டது என்பதை மறந்து விடலாகாது செனட்டில் ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் அதில் எத்தனை ஓட்டர்கள் இருந்தாலும், இரண்டு ஓட்டுகள் உண்டு. இந்த ஏற்பாட்டிற்குக் காரணம் பெரிய ராஜ்யங்கள் தங்களுடைய அதிகப்படி ஓட்டுக்களால், சிறு ராஜ்யங்களை நசுக்கி விடாமலிருப்பதற்குத் தான். புதிய கட்டுப் பாடொன்றிலிருந்து தப்புவதற்காக என்ன தியாகம் வேண்டுமானுலும் செய்வதற்குத் தயாராயிருக்கும் சிறுபான்மையினருக்கு அவர்கள் ஓட்டு எண்ணிக்கையை மீறிய மதிப்பளிப்பது செனட்டின் நீடித்த சம்பிரதாயமாகி விட்டதில் ஆச்சர்யமில்லை. ஆகையால் விவாதத்தைச் சுலபமாகக் கட்டுப் படுத்தும் எந்த முறையையும் செனட் ஏற்றுக் கொள்ளும் என்று எதிர்பார்பதற்கில்லை.

தற்போது செனட்டும், பிரதிநிதிகள் சபையும் அவ்வளவு சிறப்பாக நடைபெறவில்லை. இதைச் சீர்திருத்துவதற்குப் பல யோசனைகள் கூறப்பட்டு வருகின்றன. சில ராஜ்யங்களிலிருப் பதுபோல், தலை நகரிலுள்ள இரு சபைகளும் மின்சார சக்தி கொண்டு இயங்கும் ஓட்டு யந்திரங்களை உபயோகிக்கலாம் என்பது ஒரு யோசனை. இரு சபைகளிலும், குறிப்பாக பிரதி நிதிகள் சபையில், ஒவ்வொரு உறுப்பினர் பெயரையும் கூப்பிட்டு பிறகு அவர் ஓட்டுச் செய்வதில்வீணான காலதாமதம் ஆகிறது. அப்படி பெயர் கூப்பிட்டு ஓட்டுப் போடுகையில் பலர்கூடி ஆலோசிப்பதுபோன்ற சில்லறை வேலைகள் செய்வதுகூட சாத் தியமில்லை. மின்சார ஓட்டுப் பலகை வந்து விட்டால், எல் லோரும் ஒரே சமயத்தில் ஓட்டு செய்யலாம். ஓட்டு எண்ணிக் கையையும் அதேயந்திரமே பதிவு செய்துவிடும்.

மற்றொரு யோசனை, கொலம்பியாவுக்குசுய ஆட்சி அளித்து விடலாம் என்பது. தற்சமயம் அதன் ஜில்லா நகராண்மைக் கழகம், கவுண்டி ஆட்சி, ராஜ்ய சட்டசபை, சமஷ்டி சட்டசபை ஆகிய இவை எல்லாமும் காங்கிரஸேதான் நடத்துகிறது. ஜில் லாவுக்கு வெளியே வாசஸ்தலம் இருந்து, அங்கே ஓட்டுரிமை யிருந்தாலொழிய, வாஷிங்டன் வாசிகள் ஓட்டுச் செய்ய முடி யாது.

செனட்டிற்கும், பிரதிநிதிகள் சபைக்கும், ஜில்லா கமிட்டி கள் இருக்கின்றன. காங்கிரஸ், நகர்களுக்கு வரிவிதிக்கின்றது. ஒரு தெருவை அகலப்படுத்த வேண்டுமா என்பதை முடிவு செய்கின்றது. நாவிதர் நிலையங்களை எப்படி மேற்பார்வை பார்ப்பதென்று திட்டமிடுகிறது. ஐக்கிய நாடுகள் சபையுட னும், வட அட்லாண்டிக் உடன்பாட்டு நாடுகளுடனும் எப்படி ஒத்துழைப்பது என்பனபோன்ற சர்வதேசப் பிரச்னைகளை முடிவு செய்யும் சட்டசபை இம்மாதிரி சில்லறை விஷயங்களில் கவனம் செலுத்துவது பொருத்தமாயில்லை.

1878-ல் சீர்திருத்த நோக்குடன்தான் ஸ்தல சுய ஆட்சி ரத்து செய்யப்பட்டது. இன்று எண்ணிக்கூடப் பார்க்கமுடியாத அளவுக்கு அந்தக்காலத்தில் ஸ்தல ஆட்சி லஞ்ச ஊழலில்

ஊறித் தோய்ந்திருந்தது. ஜில்லா நிர்வாகத்தைக் காங்கிரஸி லிருந்து விலக்கி காங்கிரஸ் உறுப்பினருக்குச் சற்று வேலைச் சுமையைக் குறைக்க விரும்புபவர்கள், தற்காலத்தில் நேர்மை யான, நாணயமான ஸ்தல சுய ஆட்சி நடத்தவேண்டிய பக்கு வத்தை மக்கள் அடைந்து விட்டனர் என்று குறிப்பிடுகின் றனர்.

காங்கிரஸ் உறுப்பினர் வேலையில் வேகம் குறைந்து மனநிம் மதியற்றிருப்பதற்குக் காரணம் உறுப்பினர் தொகுதிகளிலிருந்து ஏராளமான பேர் தலை நகருக்கு வேடிக்கைப் பார்க்க வருவது தான். அமெரிக்க தேசத்தின் தலைநகருக்கு அவர்கள்வர ஆசைப்படுகின்றனர். தங்களுடைய பிரதிநிதிகள் தங்களுக்கு சட்டசபைப் போஜன விடுதியில் சிற்றுண்டி வழங்கவேண்டும் என்கின்றனர். அவர்கள் செலவில் நாடகம் முதலிய கேளிக்கை களைப் பார்க்க விரும்புகின்றனர். அவர்களுடைய விருந்தினராக ஹோட்டல்களில் தங்க ஆசைப்படுகின்றனர். தொகுதியிலுள்ள உயர் நிலைப் பள்ளி பந்து விளையாட்டுக்காரர்கள் தங்களுடன் ஜனாதிபதி நின்றுகொண்டு படமெடுத்துக் கொள்ள செனடர் உதவி வேண்டும் என்கின்றனர். இது சம்பந்தமாக ஒரு உண்மை நிகழ்ச்சி பற்றி குறிப்பிடலாம். ஜனாதிபதி இப்பொழுது யுத்தம் நடத்துவதில் ஈடுபட்டிருப்பதால் எப்படி அவர் படத் திற்கு வந்து நிற்கமுடியும்என்றுஒருசெனடர் சற்றுக்கோபமாகப் பையன்களிடம் கூறினாராம். இதைக் கேட்டுக்கொண்டிருந்த மற்றொரு செனடர் பையன்களிடம் செல்வாக்கு அடைவதற்காக உடனே ஜனாதிபதி இல்லத்திற்குச்சென்று படமெடுக்க ஏற்பாடு செய்தாராம்.

பிரதிநிதிகளைத் தொந்தரவு செய்யவேண்டாம் என்று ஓட் டர்களுக்குச் சொல்ல இதுவரையில் யாரும் துணிய வில்லை. அப்படிச் சொன்னால் தேர்தல் சமயத்தில் ஓட்டர்கள் தங்களைக் கைவிட்டுவிட்டால் என்ன செய்வது என்று அஞ்சுகின்றனர் போலும்! காங்கிரஸ் உறுப்பினர் உண்மையில் தொகுதி ஓட்டர் களுடன் நெருங்கிய தொடர்பு கொள்வது பயனளிக்கும் என நம்புகின்றனர். ஏனெனில், காங்கிரஸ் கூட்டம் முடிந்ததும்

அங்கத்தினர்கள் தொகுதிக்குச் சென்று ஓட்டர்களுடன் உறவு கொள்கிருர்கள்.

இவ்வாறு ஏராளமாகத் தலைநகருக்கு வரும் நண்பர்களைக் கவனிக்கத் தக்கவழி, மாமூல் சட்டசபை வேலைகளைக் கவனிக்க அதிகப்படியான சிப்பந்திகளை நியமித்து விட்டு, அங்கத்தினர்கள், ஊர் விருந்தாளிகளைக் கவனிப்பதுதான். தனது காரியாலயத்திலிருந்து காங்கிரஸுக்கு வருகையில் தனது இருபுறத்திலும் வரும் நண்பர்களுடன் ஒரே காலத்தில் பேசிக்கொண்டு, அதே சமயத்தில் சபையில் வரும் பிரச்னைகளுக்கு எப்படி ஓட்டுச் செய்வது என முடிவுசெய்யச் சக்தியற்ற காங்கிரஸ்காரர் ஒன்று மரணம் அடையவேண்டும் அல்லது தனது பதவியைத் துறக்க வேண்டும்.

கூச்சல்களுக்கும், குழப்பத்திற்குமிடையே வேலை செய்து மக்கள் விரும்பும் காரியங்களையும் நிறைவேற்றுவதைப்பார்த்தால் இப்படி வேலைசெய்வதுதான் அரசியல் வாதியின் இயல்பு என்று தோன்றுகிறது.

அரசியல் வாதி, தன்தொகுதியிலுள்ள மக்களின் பிரதிநிதி. ஆனல் அவருக்குச் சற்றுக் கூடுதலான தேக சக்தி இருக்கிறது. அவர் போடும் சத்தம் அமெரிக்கர் போடும் சத்தம்தான். வேறு மாதிரி கூச்சலைத் தங்கள் நாட்டில் கேட்ட அன்னியரின் காதுகளுக்கு இந்தக் கூச்சல் அதிர்ச்சியளிக்கலாம். ஆனல் நமது சுபாவம் எப்படி இருந்தாலும், அரசியலமைப்பை வகுத்த நமது மூதாதையர்கள் எதிர்பார்த்திராத அபாயங்களையும் தவிர்த்து பிரச்னைகளையும் நாசமடையாமல் சமாளித்து வந்திருக்கிறோம். அமெரிக்கா இத்தகைய சோதனையை வெற்றியுடன் சமாளித்து அமெரிக்கருக்கு திருப்தியளிப்பதுடன் பிறருக்கும் வழிகாட்டும் என எதிர்ப்பார்க்க இடமிருக்கிறது. அமெரிக்க மக்களுக்குள்ள நல்ல குணங்களும், குறைபாடுகளும் காங்கிரஸில் பிரதிபலிக்கின்றன. ஆனல் நாளாவட்டத்தில் அது மேற்கொண்ட வேலையில் வெற்றியுடன் வெளிவரும்.

# 7. சமஷ்டி நீதி ஸ்தலங்கள்

சமஷ்டி நீதி ஸ்தலங்களும், அம்மாதிரியே இயங்கும் பல ஸ்தாபனங்களும், குறிப்பிட்ட வழக்குகளில் சட்டத்தை அமுல் நடத்துகின்றன. அவைகள் இதையும்விட முக்கியமான வேலேயும் செய்கின்றன. எழுத்தில் இடம் பெற்ற சட்டங்கள் மட்டும் பூரா சட்டம் ஆகிவிட்டது. எதிர்பாராத பல வழக்குகள் வருகின்றன. அவைகளுக்கும் சட்டம், நீதி வழங்க வேண்டும். புது வழக்குகளேச் சமாளிக்கச் சில சமயம் காங்கிரஸ் புதுச்சட்டங்களே இயற்றுகிறது. ஆனல், மற்றும் சில சந்தர்ப்பங்களில் நீதி ஸ்தலங்கள் பழைய சட்டங்களுக்குப் புதுப் பொருள்கள் கண்டு பிடிக்கின்றன. இம்மாதிரி வழக்குகளில் பழைய சட்டத்தின் சாரம், இந்த வழக்குக்குப் பொருந்தும் என நீதி ஸ்தலங்கள் தீர்ப்புக் கூறுகின்றன.

வழக்குகளுக்கு சட்டத்தை எப்படிப்பொருத்துவது என்பது அரசியல் நோக்கிலிருந்து அளிக்க வேண்டிய தீர்ப்பாகும். முக்கியமாக இது, நீதிபதிகளின், குறிப்பாக பிரதம கோர்ட் நீதிபதிகளின் மனப்பாங்கைப் பொருத்தது. இந்த நீதிபதிகள் அரசியல் முறைக்கு அப்பாற்பட்டவர்களல்ல. ஏனெனில், ஜனதிபதி தேர்தலில் வெற்றி பெற்றவர்தான் இவர்களே நியமிக்கின்ருர். பொதுஜன சந்தடியில்லாத அந்தரங்க அறையிலே அமர்ந்து வேலே பார்த்தாலும், இவர்களே தங்கள் தேசமக்களின் ஒழுங்கு முறையும், அரசியல் மதிப்பும் ஆட்கொண்டிருக்கின்றன.

அரசாங்கமே அரசியலமைப்பை மீறி நடந்தால் என்ன செய்வது எனும் பிரச்னே குடியரசு தோன்றிய உடன் எழவில்லே. "சட்டத்திற்கெல்லாம் மேலான சட்டம்" அரசியலமைப்பு எனும் நம்பிக்கையுடன் அது ஏற்கப்பட்டது. அதை மீறிய காங்கிரஸ் அல்லது ஜனதிபதியின் எந்தச் செயலும் உண்மையான சட்டமல்ல. 1896-ல் ஜேம்ஸ் பிரைஸ் எழுதியது இங்கு கவனிக்கத் தக்கது. "அவர்களுக்குள்ள அதிகாரங்களே மீறி அவர்கள் செய்வது செல்லாது. அப்படியே சாமான்ய பிரஜைகள்கூடக் கொள்வார்கள். அப்படியே கொள்ள வேண்

டும்" ஒரு சட்டம் அரசியலமைப்புக்கு முரணானது என்று பிரதம நீதி ஸ்தலம் தீர்ப்புக்கூறுவது தர்க்க வாதத்திற்கேற்றது. ஆட்சேபிக்க முடியாது. ஆனால், சரித்திர பூர்வமாகப் பார்த்தால், ஆண்ட்ரூ ஜாக்ஸன், அப்ரஹாம் லிங்கன் உள்பட எல்லா அரசியல் நிபுணர்களும், பிரதம நீதி ஸ்தலத்தின் இந்த உரிமையை எதிர்க்கின்றனர். 1937-ல்விரும்பத்தகாத நீதிபதிகளுக்குப் பதிலாக புதிய நீதிபதிகள் நியமிப்பதுபற்றி விவாதம் நடந்த சமயத்தில் பிரதம நீதி ஸ்தலத்தின் உரிமையைக் கடுமையாக எதிர்த்தனர்.

அரசர் சாஸனம்தான் அடிப்படை சட்டம் என்று கருதிய குடியேற்ற நாட்டு ஆட்சி காலத்தில் நீதி ஸ்தலங்கள் ஒரு சட்டம் செல்லாது என்றோ, அரச சாஸனத்திற்கு மாறானது என்றோ சில சமயம் தீர்ப்புக் கூறினார்கள். இதே சம்பிரதாயத்தை ராஜ்யங்கள் நீடித்து ஏற்று வந்தன. 1786-ல் ரோட்தீவு சட்டசபை இயற்றிய ஒரு சட்டம் செல்லாது என்று ராஜ்ய பிரதம நீதி ஸ்தலம் தீர்ப்புக் கூறிற்று. ராஜ்ய அரசியலமைப்புக்கு மாறானது என்று அந்த நீதிபதிகள் தங்கள் தீர்ப்பிற்குக் காரணம் கூறினார்கள்.

உதாரணமாக, 1802-ல் காங்கிரஸ் சட்டம் ஒன்று செல்லாது என்று பிரதம நீதிபதி ஜான் மார்ஷல் தீர்ப்பு எழுதிய பொழுது, அவர் ஏற்றுக்கொண்ட அதிகாரம் பரம்பரையான தர்க்க ரீதி வாய்ந்தது எனக்கொண்டு அந்த அடிப்படையில் தனது கடமையை ஆற்றினார். அரசியலமைப்புக்கு மாறான சட்டம் எதுவும் செல்லாது என்றும், "கொள்கை, எழுத்தில் இடம்பெற்ற அரசியலமைப்புக்கு இயல்பானது; ஆகையால் அந்தக் கொள்கைதான் நமது சமூகத்திற்கு ஜீவாதாரமானது," என்று அவர் கூறினார்.

அடுத்த 50 ஆண்டுகளாக அரசியலமைப்புக்கு மாறான செயல்களைச் சமாளிக்க, வேறு ஒரு கொள்கை வகுக்கப்பட்டது. ஒரு சமஷ்டி சட்டம் ஏற்கத்தக்கதல்ல, சட்டத்திற்கு முரணானது என்று கூறித் தள்ளிவிட, உட்பிரிவான ராஜ்யத்திற்கு உரிமை உண்டு என்பதுதான், அந்தக் கொள்கை. 1828-ல்

தென் கரோலினு சட்டசபையில் ஜான்ஸி கால்ஹுன் என்பவர் ஒரு பிரசங்கம் எழுதி சமர்ப்பித்தார். அதற்கு 'தென் கரோலினு விளக்கம்' எனும் பெயர் சூட்டப்பட்டது. அதில் அரசியலமைப்பின் பிரகாரம் சமஷ்டி அரசாங்கம் ராஜ்யங்களின் ஏஜெண்டு தான் என்று கூறினுர். காங்கிரஸின் செயல்கள் ஒரு ராஜ்யத்திற்குப் பிடிக்கா விட்டால் அந்த ராஜ்யம் சமஷ்டி சட்டத்தைச் செல்லுபடியாகாமல் செய்துவிடலாமென்றும் அப்புறம் ஆந்தச் சட்டத்தை அந்த ராஜ்யத்தில் அமுல் நடத்தாமல் செய்து விடலாமென்றும் அவர் அடித்துக் கூறினுர். அப்படி நிராகரிக்கப்பட்ட சட்டம் அந்த ராஜ்யத்தில் செல்லவேண்டுமாளுல், ராஜ்யத்தில் முக்கால் பங்கினர் ஆதரித்து அரசியலமைப்பைத் திருத்த வேண்டும்.

கால்ஹுனின் வாதத்தை ஆதாரமாகக் கொண்டு, தென் கரோலினுவில் சில வெறியர்கள் ஒரு சமஷ்டி வரி விதிப்புச் சட்டத்தை உண்டாக்கினர். ஜனுதிபதி ஜாக்ஸன் சமஷ்டியின் கட்டுக்கோப்பை ராணுவத்தின் உதவியைக் கொண்டாவது பாதுகாக்கப் போவதாக எச்சரிக்கை செய்தார். காங்கிரஸ், சட்டத்தின் கடுமையை சற்றுத் தளர்த்தி சமரஸம் செய்தது.

இதற்கு இருபது ஆண்டுகளுக்குப்பின் ஒரு வடபகுதி ராஜ்யத்தில் தஞ்சம் புகுந்த அடிமையை அங்கிருந்து வெளியேற்ற வேண்டும் என்று நிர்ப்பந்திக்கும் ஒரு சமஷ்டி சட்டத்தை வின்ஸ் கான்ஸின் சட்டசபை ஏற்க மறுத்தது. தங்களுக்குக் கஷ்டம் விளைவிக்கும் எனக் கருதப்படும் சமஷ்டிச் சட்டங்களை நிராகரிப்பது, உள்நாட்டுச்சண்டையில் முடியும் என்பது தெரிந்தது. 1861-லிருந்து 1865-வரையில் நடந்த சண்டை இந்த சமஷ்டி சட்ட எதிர்ப்புக்கு முற்றுப்புள்ளி வைத்தது. இதற்கிடையில் பிரதம நீதி ஸ்தலம் ஒவ்வொரு சட்டமும் அரசியலமைப்புக்கு ஒத்ததா என்றே பார்த்து முடிவு செய்தது. ஆனுல் 1803-க்குப் பிறகு 1857-வரையில் எந்த சமஷ்டி சட்டமும் செல்லுபடியாகாது என்று பிரதம நீதி ஸ்தலம் தீர்ப்புக் கூற வில்லை. ஆனுல், உள் நாட்டுச் சண்டைக்குப் பிறகு ஆக்க அடிப்படையில் அதிகப்படியான சட்டங்கள் நிறைவேற்றப்

பட்டன; நீதி ஸ்தலங்களும் தங்களுக்குள்ள அதிகாரங்களை பல சந்தர்ப்பங்களில் நிறைவேற்றின.

ஒரு நீதி ஸ்தலம் பொதுஜன ஆதரவு உள்ள ஒரு சட்டத்தைச் செல்லுபடியாகாது என்று நிராகரித்தால், தாங்கள் தவருன சாதனத்தைக் கையாண்டோம் என்பதை அதன்மூலம் மக்கள் அறிந்து கொள்ளத் தொடங்கினர். நீதி ஸ்தலத்தின் செயலுக்குப் பொருள் "வருமான வரி விதிக்கும் அதிகாரத்தை 1787-ல் நீங்கள் காங்கிரஸுக்கு அளிக்கவில்லை. 1895-ல் உங்களுக்கு வருமான வரி தேவையானல், அது காங்கிரஸைக் கேட்பதின் மூலம் உங்களுக்குக் கிடைக்காது. அதற்குப் பதிலாக நீங்கள் அரசியலமைப்பில் திருத்தம் செய்து அந்த உரிமையை நீங்களே பெற்றுக் கொள்ளுங்கள்" என்பதுதான். ஆகையால் மக்கள் தங்களுக்கு வருமானவரி மூலம் பணம் வேண்டும்பொழுது அரசியல் சட்டத்தை திருத்துகின்றனர். 1913-ல் 16-வது திருத்தத்தின் மூலம் வருமான வரியை அனுமதித்தார்கள். பொறுமையுடன் நீடித்த உழைப்பும் தேவையான அரசியலமைப்பு திருத்தும் முறை மூலம் பிரதம நீதி ஸ்தலத்தின் தீர்ப்பை மாற்றலாம் என்பது யாவரும் நன்கறிந்ததே. ஆனல் மக்கள் ஆத்திரப்படுகையில் இந்த நீடித்த உழைப்பின் மூலம் திருத்தம் செய்வது அவர்களுக்கு, திருப்தியளிப்பதில்லை.

பிரதம நீதிஸ்தலத்தில் நீண்டகாலம் அனுபவமும் வெற்றிகளும் கண்ட வக்கீல்களே பதவி வகிக்கிருர்கள். அவர்கள் எல்லோருமே வக்கீல்களாகவோ நீதிபதிகளாகவோ இருந்தவர்கள் அல்ல. ஒரு பிரதம நீதிபதி முன்பு செனட்டராகவோ, அட்டார்னி ஜெனரலாகவோ, அல்லது வக்கீல் படிப்புக்கான ஆசிரியராகவோ அல்லது நீதிஸ்தலம்போல் பணிபுரியும் குழுவில் ஒருவராகவோ இருந்திருக்கலாம். சுமார் 50 வயதானவர்களே பெரிதும் நீதிபதிகளாக நியமிக்கப்படுவர். பதவி யேற்று 20-லிருந்து 40 ஆண்டுகளுக்கு நீதிபதிகளாகவே வாழ்ந்து வருவர், ஆதலால் நீதிபதி முதியவராக இருக்கலாம். மேலும், முந்திய தலை முறையின் அரசியல்

உலகில் தொடர்பு கொண்டவராயிருக்கலாம், நீதிபதிகள் அனேகமாகப் பிற்போக்கான கருத்துக்களை உடையவர்கள். ஆகையால் துரிதமான முற்போக்கை விரும்புகிறவர்களுக்கு இவர்கள் மீது வெறுப்புத் தோன்றலாம். 1937-ல் நீதிபதிகள் பெரிதும் தள்ளாடும் கிழவர்களாயிருந்தனர், அதே சமயத்தில் ஆட்சி புரியும் கட்சியினர் நீதிபதிகள் எதிர்பார்த்ததற்கு மிஞ்சிய முற்போக்கு உடையவர்களாய் இருந்தனர். இந்த முரண்பாட்டின் பயன்தான் அதிகப்படியாகப் புதிய நீதிபதிகள் நியமித்து பழம் பெரியவர்களைப் பயனற்றவர்களாகச் செய்த முயற்சி.

1935-லிருந்து 1937 வரை பல புதிய பொருளாதார சம்பந்த மான சட்டங்கள் நீதி ஸ்தலங்களால் செல்லுபடியாகாதவை யென்று தீர்ப்புச் செய்யப்பட்டன. நீதிபதிகள் மிகுந்த வயதான வர்கள். ஆகையால் நீதிபதிகளின் எண்ணிக்கையை 15 ஆக உயர்த்தி புதிதாக 9 நீதிபதிகள் நியமிக்கப்பட வேண்டும் என்று காங்கிரஸிடம் ரூஸ்வெல்ட் தெரிவித்தார். இந்தத் திட்டம் பலருக்குப் பிடிக்காததால் இந்த யோசனையை காங்கிரஸ் நிராகரித்தது. ஜனாதிபதி வேறு முறையில் நீதிபதிகளைச் சமாளிக்கு முன்பு, நீதிபதிகளே தங்கள் அபிப்பிராயத்தை ஓரளவு மாற்றிக்கொண்டனர்.

1937-க்குப் பிறகு சில நீதிபதிகள் ராஜீனமா செய்தும், சிலர் இறந்தும் விட்டதனால் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் 8 புதிய நீதிபதிகளை நியமிக்க முடிந்தது. அடுத்த 20 ஆண்டு ஜன நாயகக் கட்சியின் ஆட்சியில் நீதிபதிகள் அனேகமாக அரசாங்கத் திட்டத்திற்கு எவ்வித ஆட்சேபணையும் கூறவில்லை.

பிரதம நீதிஸ்தலத்திற்குக் கீழ்பட்ட நீதி நிலையங்களுக்கு அவ்வளவாக அரசியல் முக்கியத்துவமில்லை. ஏனெனில், சட்டநுட்பங்கள் இல்லாத சாதாரண வழக்குகளையே அவைகள் பைசல் செய்கின்றன. இவைகளுக்குக் கீழே ஜில்லா கோர்ட்டு கள் இருக்கின்றன. அவைகளில் சுமார் 200 நீதிபதிகள் வேலை பார்க்கின்றனர். அரசியலமைப்புப்படி 20 டாலர் பெருமானத் திற்கு குறைவானவைகளைத் தவிர, மற்ற வழக்குகளை இவைகள்

ஜுரியின் உதவிகொண்டு விசாரணை செய்யவேண்டும். ராஜ்யத்திற்கு ராஜ்யம் நடக்கும் வியாபாரத்தில் வேலை செய்கையில் காயமேற்பட்டால் முதலாளி நஷ்டஈடு கொடுக்க வேண்டும் எனும் சமஷ்டி சட்டத்தின் கீழ்வரும் ஸிவில் வழக்கு களையும் ஜில்லாக் கோர்ட்டுகள்தான் விசாரிக்கவேண்டும். கடலில் நிகழும் குற்றங்களையும் ஜில்லாக் கோர்ட்டேதான் விசாரணை செய்யவேண்டும். இரண்டு ராஜ்யங்களுக்குள் ஏற்படும் வழக்குகளையும் ஜில்லாக் கோர்ட்டுகளே விசாரிக்க வேண்டும். ஒரு வியாபார ஸ்தாபனம் பதிவு செய்யப்பட்ட ராஜ்யத்தின் பிரஜை அந்த ஸ்தாபனங்கள் பிற ராஜ்யங்களுடன் வியாபாரம் செய்யலாம். ஆனால், பிற ராஜ்யங்களைப் பொறுத்த மட்டில் அந்த ஸ்தாபனம் அன்னியரெனப் பாதுகாக்கப்படும். இந்த வியாபார சம்பந்தமாக ஏற்படும் தாவாக்களையும் ஜில்லா கோர்ட்டுகளே விசாரிக்கும்.

ஜில்லா கோர்ட்டுகளில் விசாரணைக்கு வரும் வழக்குகள் சமஷ்டி சட்டத்தை மீறியது சம்பந்தமானவை. வியாபார உரிமை, யுத்தக்காலக் கட்டுப்பாடு, திருட்டுச் சரக்குக்கொண்டு வருதல், ஆளைக்கடத்தல் சம்பந்தமான வழக்குகளை விசாரணை செய்யும். சர்க்கார் வரி மோசடிக்காக பிரஜை மீதோ, அல்லது தனக்கு விதிக்கப்பட்ட வரி தவறானது என பிரஜை சர்க்கார் மீதோ வழக்குத் தொடரலாம்.

அனேகமாக எல்லா வழக்குகளிலும் அசல் தரப்பு விசாரணை செய்யும் அதிகாரம் ஜில்லாக் கோர்ட்டுக்கு உள்ளது. உதாரணமாக ஜுரியின் உதவிகொண்டு உண்மையை அறிந்துகொள்வார்கள். விசாரணை நடத்தும் முறையில் கோர்ட் தவறு செய்துவிட்டதென்றோ, அல்லது வழக்குத் தொடரப்பட்டிருக்கும் சட்டம் செல்லுபடியாகா தென்றோ வழக்கில் சம்பந்தபட்டவர் அப்பீல் செய்யலாம். சமஷ்டிக் கோர்ட்டுக்கும், ஜில்லாக் கோர்ட்டுக்கும், இடை யிலுள்ள அப்பீல் கோர்ட்டுகள் இந்த அப்பீல்களை விசாரிக்கும்.

கீழ்க்கோர்ட்டார் அனுப்பியுள்ள தகவல்களை அப்படியே அப்பீல் கோர்ட்டார் ஏற்றுக்கொள்வதால் அப்பீல் விசார

ணக்கு ஜூரிகளின் உதவி தேவையில்லை. சட்ட சம்பந்தமாக வழக்காளர்களுக்குள் ஏற்படும் முரண்பாடுகளைப் பற்றியே அது தீர்ப்புக் கூறவேண்டும். அனேகமாக அப்பீல் கோர்ட்டில் மூன்று நீதிபதிகள் ஒன்ருக அமர்ந்து அப்பீல்களை விசாரிப்பார்கள். இதன் முக்கியமான கடமை அரசியல் முக்கியத்துவமில்லாத சாதாரண வழக்குகள் பிரதம நீதிஸ்தலத்திற்குப் போகாமல் பார்த்துக்கொள்ளுவதுதான். அப்பீல்தார் ஒரு சட்டம் செல்லுபடியாகாது என்று வாதித்தாலும் அப்பீல் கோர்ட் இருதரப்பு வாதங்களையும் கேட்டு, விவாதத்திலிருக்கும் பிரச்னையைத் தெளிவுபடுத்தலாம். இந்தத் தீர்ப்புத் தெளிவாகவும், ஆதாரம் நிறைந்ததாகவும் இருந்தால், பிரதம நீதிஸ்தலம் அதைப் பற்றி மேல் விசாரணை செய்ய மறுக்கலாம். இப்படி மறுத்து விடுமாளுல் நாட்டின் பிரதம நீதிஸ்தலத்தின் தீர்ப்புக்குள்ள மதிப்பு—அந்த வழக்கு சம்பந்தப்பட்டமட்டில்—அப்பீல் கோர்ட்டின் தீர்ப்புக்குண்டு.

ஆனல், ஒரேமாதிரி தோன்றும் இரு வழக்குகளில் இரு கோர்ட்டுகள் மாறுபட்ட தீர்ப்புகள் அளித்து, பிரதம நீதிஸ்தலம் அப்பீல் கோர்ட் தீர்ப்பை மாற்றவோ திருத்தவோ விரும்புமாளுல் அப்பீல் கோர்ட் தீர்ப்பின் மீது மறு அப்பீலை ஏற்றுக்கொள்ளும். இது தவிர வர்த்தகத் துறை சம்பந்தமான சட்டங்கள் இருக்கின்றன. குறிப்பாகக் கம்பெனிகள் ஒன்றுகூடி வியாபாரத் துறையைத் தங்கள் வசப்படுத்துவதைத் தவிர்க்கும் சட்டங்கள் இருக்கின்றன. அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த சில விதிகளின் விளைவைக் குறைக்க காங்கிரஸ் விரும்பலாம். இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் எழும் வழக்குகளில் உண்மை விவரங்களை ஜில்லாக் கோர்ட்டுகள் விசாரித்துத் தீர்ப்புக் கூறும். இந்தத் தீர்ப்பின்மீது முதல் அப்பீல் கோர்ட் விசாரணையின்றி நேரடியாக பிரதம நீதிஸ்தலமே அதை விசாரிக்கலாம்.

ஜில்லா, அப்பில், பிரதம கோர்ட் ஆக மூன்றடுக்கு கோர்ட்டுகள் தவிர பிரத்தியேக கோர்ட்டுகள் இருக்கின்றன. உதாரணமாக நஷ்டஈடு கோர்ட், வரி சம்பந்தமான கோர்ட், சுங்க வரி கோர்ட், வியாபார உரிமை கோர்ட்டுகளும் இருக்-

கின்றன. ஒரு விஷயத்தை விசாரிப்பதிலேயே பூரா காலமும் செலவிட்டாலொழிய ஒரு நீதிபதி நன்கு அறிந்துகொள்ள முடியாத விஷயங்களைப் பற்றி விசாரிக்கவே, விசேஷ கோர்ட்டு கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. நீதி பரிபாலனமே பூரா வேலையாக இருக்கும் கோர்ட்டுகளுக்கும் வியாபாரத்தை ஒழுங்கு படுத்த சர்க்கார் அமைத்துள்ள நீதிபரிபாலன அதிகாரங்கொண்ட நிர்வாகஸ்தாபனங்களுக்கும் எல்லைக் கோடு போல் அமைத்திருக்கின்றன மேற்கூறப்பட்ட விசேஷக் கோர்ட்டுகள்.

அரசியலமைப்பின் வியாபார சம்பந்தமான பகுதி அயல் நாட்டு வியாபாரம் ராஜ்யங்களுக்குள் வியாபாரத்தையும், இந்தியக் குடிகளுடன் வர்த்தகத்தையும், ஒழுங்கு செய்யும் அதிகாரத்தையும் காங்கிரஸுக்கு அளித்திருந்த போதிலும், தற்போதுள்ள மாதிரி வியாபாரத்தைக் கட்டுப் படுத்துவது அரசியல் அமைப்பின் ஆதிலட்சியங்களில் ஒன்றல்ல ; அந்தக் கால வியாபாரக் கட்டுப்பாடு வரி, ஏற்றுமதித் தடை வரி விதிப் பதும், ராஜ்யங்கள் தடுப்பு வரி, ஏற்றுமதி தடுப்பு செய்வதைத் தவிர்ப்பதும்தான். ஆனால் வியாபாரம் பெருகி சிக்கல் நிறைந்த தாகப் போனதும் காங்கிரஸ் தலையிட்டு, ரயில் கட்டணங்கள், பிரயாணத்திற்குப் பாதுகாப்பு, உணவுப் பொருள், மருந்து களில் கலப்படம் செய்வது, ரேடியோ எந்தெந்தப் பகுதியில் ஒலி பரப்புவது முதலியவற்றில் காங்கிரஸ் தலையிட்டு ஒழுங்கு படுத்த வேண்டி வந்துவிட்டது.

இந்தக் கட்டுப்பாடுகளின் தனி அம்சம் இந்தத் துறைகள் ஒவ்வொன்றிலும் உண்மை என்னவென்பதைக் காங்கிரஸ் அறிந்துகொண்டு, திட்டம் செய்யமுடியாது. பெட்டியில் போட்டு ஆரஞ்சுகளை, 'ஸில்வர் ஸ்பிரிங்ஸ்' பிளோரிடாவிலி ருந்து ஸைரக்யூஸ் அல்லது நியூயார்க்குக்கு அனுப்ப என்ன கட்டணம் விதிக்கலாம் என்பது பற்றி, காங்கிரஸ் சட்டம் செய்யமுடியாது. எந்தெந்தச் சரக்குக்கு எவ்வளவு கட்டணம் விதிப்பது என்பது பற்றி காங்கிஸுக்கு வழிகாட்ட நீதியும் நிர்ணயமும் உள்ள கொள்கைகள் இருக்கின்றன. இந்தக் கொள்கைகளைப் பொதுப்படையாக வகுத்து காங்கிரஸ் சட்ட

மியற்றலாம். இப்படி சட்டமூலம் வகுக்கப்பட்ட கொள்கை-களின் அடிப்படையில் உண்மையை விசாரித்து தீர்ப்புக்கூறத் தக்க ஸ்தாபனங்களை அமைக்க வேண்டும்.

வியாபாரப் பகுதிகளை ஒழுங்கு படுத்த முக்கியமாகச் சில ஸ்தாபனங்கள் இருக்கின்றன. ராஜ்ய, வர்த்தக கமிஷன் ராஜ்யத்திற்கு ராஜ்யம் சரக்குப் போக்கு வரத்திற்திற்கான கட்டணங்களை மேற்பார்வை பார்க்கிறது. சமஷ்டி வியாபாரக்-கமிஷன் ஏகபோக வியாபார ஸ்தாபன சம்பந்தமான சட்டங்கள் சரிவர கவனிக்கப்பட்டு வருகின்றவை என்றும், மோசடி விளம்பரம் போன்ற ஒழுங்கீனங்களைக் கண்டு பிடிப்பதிலும் ஈடுபட்டிருக்கிறது. மேலும் சமஷ்டி போக்குவரத்து கமிஷனும், சமஷ்டி மின்சக்தி கமிஷனும் பணப்பத்திரங்கள் பணமாற்று கமிஷனும் வேலை செய்கின்றன.

வழக்கமான இந்தக் கமிஷன்கள் உண்மையான நிலையை அறிந்து கொண்டு வர்த்தக ஸ்தாபனம் தனது சேவைக்கு என்ன பணம் பெறலாம் என்பது பற்றியோ, சட்டத்திற்குட்பட்டு நடக்க ஒரு வியாபார ஸ்தாபனமோ தனது பழக்கங்களை எவ்விதத்தில் மாற்றிக்கொள்ளலா மென்றோ திட்டம் செய்யலாம். இந்தக் கமிஷன்களுக்கு அபராதம் வசூல் செய்யவோ, அல்லது சிறை தண்டனை விதிக்கவோ அதிகாரம் கிடையாது. இவர்கள் தங்களுடைய தீர்ப்பை நிறைவேற்ற வர்த்தகர்மீது வழக்குத் தொடரலாம். குறிப்பிட்ட வர்த்தக ஸ்தாபன சம்பந்தமாக இந்த கமிஷன்கள் சட்டமியற்றுகிறது என்று கூறலாம். பிரதம நீதிஸ்தலம் நீங்கலாக மற்ற கோர்ட்டுகளைவிட இந்தக் கமிஷன்கள் அதிகப்படியான சட்ட மியற்றுகின்றன.

சட்டமியற்றுவது, நிர்வகிப்பது, நீதி வழங்குவது என்று திட்டமாகப் பிரிக்கப்பட்டிருக்கையில் நிர்வாகக் குழுவினர் சட்டமியற்றலாம் என்பதைக் கோர்ட்டுகள் ஒப்புக் கொள்ள மாட்டா.

நிர்வாக விசாரணைக்குழு நிர்வாக அம்சமும், நீதி வழங்கும் அம்சமும் ஓரளவு சட்டமியற்றும் லட்சணமும் சேர்ந்த-

ஒரு கதம்ப ஸ்தாபனம். இந்தக் கமிஷன்கள் செனட்டால் பரிசீலனை செய்யப்பட்டு ஜனாதிபதியால் அமைக்கப்படுவதால் இவைகள் பெரிதும் அரசியல் அடிப்படையில் இயங்குகின்றன. இந்தக் கமிஷனால் பாதிக்கப்படும் வியாபார ஸ்தாபனங்கள் தாராளமாகக் கட்சி நிதிக்குப் பணம் கொடுப்பதை சகஜமாகக் காணலாம். இந்தக் கமிஷனுக்கு நியமிக்கப்பட்டவர்களில் யாராவது பொது நலனைக் காப்பதற்காக ஒரு செல்வாக்குள்ள வர்த்தக ஸ்தாபனத்திற்கெதிராகப் போராடினால், அவரை செனெட் நிராகரிப்பதில் ஆச்சர்யம் ஒன்றுமில்லை. காவல்காரனையே காவல் புரிவது எனும் பழமொழியை வர்த்தக விஷயத்தில் நடைமுறையாகக் காணலாம். இம்மாதிரி வேவுபார்த்தல் என்பது பெரிதும் அரசியல் நோக்குடனே தான் நடக்கிறது.

இந்தக் குழுக்களின் நடவடிக்கைகளைக் கவனிக்க கோர்ட்டுகளுக்கும் ஓரளவு அதிகார மிருக்கிறது. இந்தக் குழுவினர் சேகரிக்கும் தகவல்களைக் குறைகூற கோர்ட்டுகள் விரும்பவில்லை. ஆனால், தகவல்கள் சேகரிப்பதற்காக அவர்கள் கையாளும் முறைகளையும், அவர்களுடைய தீர்ப்புக் கூறுவதற்கான முறைகளையும், மேற்பார்வை பார்க்க விரும்புகின்றனர். போலீஸாருக்குள்ள அதிகாரங்களை இவர்களுக்கு ஓரளவு வழங்கக் கோர்ட்டார் தயாராயிருக்கின்றனர். 1950-ல் பிரதம நீதிஸ்தலம் அளித்த தீர்ப்பு ஒன்றில் சமஷ்டி வர்த்தகக் கமிஷன் எந்த வர்த்தக நிலையத்திலும் நுழைந்து அவர்களுடைய தஸ்தாவேஜுகளைச் சோதித்துக் கம்பெனி நிர்வாகிகள் சட்டப்படி நடக்கின்றனரா என்று பார்க்கலால். ஆனால் இம்மாதிரி நடவடிக்கைகளைக் கோர்ட்டாரும், போலீஸாரும் கையாள முடியாது. "சட்டத்தின் முறையான பிரயோகம்," எனும் பதத்தின் வியாக்கியானம் சர்க்காரின் விசேஷ நடைமுறைக் கொப்ப விரிவுபடுத்தப்பட்டு வருகிறது.

சமஷ்டி கோர்ட்டுகளில் அரசாங்கம் அனேக சந்தர்ப்பங்களில் வாதி அல்லது பிரதிவாதியாயிருக்கிறது. பிரதம கோர்ட்டுகளின் முன் சர்க்கார் வழக்குகளை வாதிக்க 1789-ல் முதல் அட்டார்னி ஜெனரல் நியமிக்கப்பட்டார். இந்த வேலையை

தற்சமயம் நீதி இலாகாவில் சொலிஸிடர் ஜெனரல் பார்க்கிருர். இந்த இலாகா சர்க்காரின் வக்கீலாக வேலை பார்க்கிறது. உள் நாட்டு ரெவின்யூபோர்டு ஒருவன் வருமான வரி கொடுக்காம லிருக்கின்ருன் என எண்ணுமாளுல் இந்த ஸ்தாபனம் இது சம் பந்தமாக வழக்குத் தொடர தஸ்தாவேஜுகளை நீதி இலாகா வுக்கு அனுப்புகிறது. ஒரு கேள்விக்குப் பதிலளிக்க சாட்சியைக் கொண்டுவர முடியவில்லை என ஒரு செனட் கமிட்டி நினைக்கு மாளுலும் அல்லது ஒரு சாட்சி பொய் சொன்ஞன் என்று கருதிளுலும், இதுசம்பந்தமாக விசேஷ ஜூரிகளை,விசாரணைக்கு அனுப்பி கோர்ட்டை அவமதித்தது, அல்லது பொய்ச் சாட்சி யம் கூறியது என்பதற்கான வழக்குத் தொடரச் செய்வார்கள்.

நீதி இலாகாவில் சமஷ்டி புலன் விசரரணைக்குழு இருக்கி றது. இதுதான் சமஷ்டி புலன் விசாரணைப் படைகளில் மிகச் சிறந்தது. இந்தக்குழு கடத்திச் செல்பவர்கள், பாங்க் கொள் ளைக்காரர்கள் மற்றும் சமஷ்டி சட்டத்தை மீறுபவர்கள் பற்றிப் புலன் விசாரிக்கிறது. துப்பறிபவர்களை எதிர்த்துப்பறிவதில் இவர்கள் வெகு நிபுணர்கள். அரசாங்க சிப்பந்திகள் விசுவா சத்தைப் பற்றிப் புலன் விசாரிப்பதில் பூர்வாங்க வேலைகளை இவர்கள் செய்கின்றனர். அரசாங்க பொக்கிஷ சாலைகளில் வேலை செய்யும் மற்ற புலன் விசாரிப்பவர்கள், கள்ள நாணயம் தயாரிப்பவர்கள், திருட்டுச் சரக்குக் கொண்டுவருபவர்கள், விஷமருந்து விற்பவர்கள், வரி செலுத்தாமல் ஏமாற்றுபவர்கள், ஜனுதிபதியைக் கொலைசெய்யச் சதிசெய்பவர்கள், முதலியவர் களைத் தொடர்ந்து வேலை பார்க்கின்றன. இந்தக் கூட்டத்தின ரில் யாராவது பிடிபட்டால், நீதி இலாகாவினர் இவர்கள் மீது சமஷ்டி கோர்ட்டுகளில் தாவா தொடருகிருர்கள்,அல்லது நீதி இலாகாவின் மேற்பார்வையில் ஸ்தல அமெரிக்க அடார்னிகள் வழக்கு நடத்துவார்கள்.

தங்களது கவனத்துக்கு வரும் எல்லா வழக்குகளையும் இவர்கள் வெற்றிகரமாக நடத்தமுடியும் என்று சொல்வதற் கில்லை. ஆனுல் சட்டம் மீறப்பட்டதா என்பதே முக்கியமான பிரச்னையாயிருக்கும் வழக்குகளில் நீண்டநாள் இழுத்துக் கொண்டு போனபின்தான் முடிவு காண முடியும். உற்பத்தி

ஸ்தாபனங்கள் ஒன்றுகூடி ஏகபோக உரிமை அனுபவிப்பது சம்பந்தமான விஷயங்களில் எந்தெந்த வழக்குகளில் சட்ட சம்பந்தமான பிரச்னைகள் எழுந்து, தான் விரும்பும் முறையில் சட்டம் உருவாகும் என்பதை அட்டார்னி ஜெனரல் முடிவு செய்ய வேண்டும். ஒரு வழக்கில் சட்டம் நிச்சயமாக மீறப்பட்டிருக்கிறது என்று சொல்லக்கூடிய வழக்குகள் மிகச் சொற்பமேயாகும். அனேக வழக்குகளில் சட்ட நிபுணர்களுக்குள்ளேயே அபிப்பிராய பேதம் ஏற்படுகிறது.

எந்த சட்டத்தை அமுல் செய்வது, என்னமாதிரி நடவடிக்கைகள் சட்டவிரோதமானவை என்பனவற்றை அட்டார்னி ஜெனரல் தனது சொந்தப் பொறுப்பில் முடிவு செய்யலாம் இவருடைய முடிவுகளும் ஜனாதிபதியின் கொள்கைகள் முறையே அரசியல் போக்கை அனுசரித்தனவாகவே இருக்கும்.

உதாரணமாக ட்ரூமனுக்குப் பிறகு ஐஸன்ஹோவர் பதவி ஏற்றசமயம் உற்பத்தி கூட்டு ஸ்தாபனங்கள் மீது பல வழக்குகள் தொடரும் தருவாயிலிருந்தன. அமெரிக்க உருக்குக் கூட்டுக் கம்பெனிமீது தொடரப்பட்ட வழக்கில் ஒரு பெரிய தளப் பொருள் கம்பெனி எத்தனை கிளைக்கம்பெனிகளை நடத்தலாம் என்கிற அடிப்படைப் பிரச்னை பற்றியதாயிருந்தது. இந்த விஷயத்தில் அட்டார்னி ஜெனரல் வழக்குத் தொடர்வதா, விட்டுவிடுவதா என்பதை ஜனாதிபதி ஐஸன் ஹோவர் முடிவு செய்ய வேண்டியிருந்தது.

அரசியலமைப்பிற்கும், சட்டங்களுக்கும் அரசியல் அடிப்படையில் விளக்கம் காணவேண்டியிருக்கிறது. அட்டார்னி ஜெனரல்கள், பிரதம நீதிபதிகள், பதவிகளுக்கு யாரை நியமிப்பது என்பது பற்றி அரசியல் நோக்கே பிரதானமாயிருக்கிறது. இவைகளிலிருந்து சட்டம் என்பது சாமான்யமான, மக்கள் காலின் கீழ் போட்டு மிதிக்கும் உயிரற்ற கல்லல்ல என்பதை அறிந்துகொள்ளலாம். 1787 லிருந்ததைவிட இன்று சட்டத்தைப் பற்றி நிர்ணயமாக எதையும் கூற முடியாது. அந்தக் காலத்தில் தெய்வ நீதியை அடிப்படையாகக் கொண்டே சட்டம் இயங்கிற்று. அதை நீதிபதிகள் கண்டுபிடித்து விளக்

கிக் கூறுகின்றனர் என்று மக்கள் நம்பினர். இந்தக் கொள்கையின் அடிப்படையில்தான் 'பிளாக் ஸ்டனின்' புகழ் பெற்ற வியாக்கியானங்கள் எனும் நூல் எழுதப்பட்டது. குடியரசின் ஆரம்ப காலத்தில் இவர் வகுத்த கொள்கைகளே அமெரிக்க வக்கீல்களுக்கும் நீதிபதிகளுக்கும் வழிகாட்டியாயிருந்தன.

ஆனால் 1776-லேயே பிளாக்ஸ்டனிடம் ஆக்ஸ்போர்டில் படித்த ஜெரிமி பெந்தம், தனது குருநாதர் கொள்கையை ஆட்சேபிக்கத் தொடங்கினர். பெந்தம் லண்டனில் ஏழைகள் வசிக்கும் இடங்களைப் பார்த்து, ஆங்கிலச் சட்டம் தெய்வ நீதி அறிந்தவர்களால் இயற்றப்படவில்லை என்று கூறினர். ஏழைகள் வசிக்குமிடங்களை வசதியுள்ளதாகச் செய்ய மனிதர்கள் சட்டம் செய்யலாமே என்று அவர் கூறினர். இவருடைய வாதத்திற்கு 'மக்களுக்குப் பயனுள்ள கொள்கை' என்று பெயர் சூட்டினர். இதிலிருந்து அமெரிக்காவில் "ஒழுங்கான பயனளிப்பதெல்லாம் நியாயமானது" என்கிற தத்துவம் பரவலாயிற்று. இந்தத் தத்துவம் சட்டத்திற்கு அமெரிக்க மக்கள் அளித்த மதிப்பில் புரட்சியை உண்டாக்கியது. காலக்கிரமத்தில் இது சட்ட நிபுணர்கள், நீதிபதிகள் மனப்பாங்கையும் மாற்றி விட்டது.

சட்டம் ஆண்டவன் அறிவில் தோன்றியது என்றும், அதை பைபிளிலும் சட்ட பண்டிதர்களின் ஆராய்ச்சியிலும் தான் காணலாமென்றும் நம்பிவந்த வரையில், மக்கள் அது ஒரு மலை என்றும், அதைக் கவிந்து கொண்டிருக்கும் பனிப்படலத்தில் மோசேயின் ஞாபகச் சின்னங்களைக் காணலாமென்றும் நம்பி வந்தனர். ஆனால், இன்று சட்டத்தின் மூலம் மனிதர் ஒழுங்கை மட்டுமல்ல, சுபிட்சத்தையும் அடையாலாம் என்றுநம்புவதனால் அதன் தன்மையே மாறி விட்டது. முந்தி சாதாரண மேகம் சூழ்ந்த மலையைக் கண்ட இடத்தில், இன்று பரந்த இயற்கைக் காட்சிகளைக் காண்கின்றோம். அந்தக் காட்சியில் நீராவியின் உதவியால் மலைகளில் சிலவற்றை நகர்த்தி வருகிறோம். மலைகளில் எவை நகருகின்றன. எவை அசையாமலிருக்கின்றன என்பதை நாம் புரிந்துகொள்ளவேண்டும். 150 வருஷங்களுக்கு முன் சட்டம் சுலபமாகப் புரிந்துகொள்ளத்தக்கதாயிருந்தாலும்,

சட்டம் சட்டப் பண்டிதர் கையில் கரடு முரடான ஆயுதம் போலிருந்தது. ஆனால் இன்று நாம் உலகத்தை விரும்பும் முறையில் சமைப்பதற்கான சிக்கலான, ஆனால் அனுபவ சாத்தியமான சாதனமாக அது ஆகிவிட்டது. பூரண உரிமை கொண்ட மக்களுக்கேற்ற முறையில் உலகத்தை அமைப்பது பெரிதும் அரசியல் பிரச்னையாகி விட்டது.

1937-ல் ஜனநாயகக் கட்சியினர் புதிய பிரதம நீதி ஸ்தலத்தை அமைத்தனர். முன்னுள் சட்ட சம்பந்தமான கொள்கைப்படி அக்கால நீதிபதிகள் மக்களுக்கு உருவான நன்மை செய்வதில் கோர்ட்டுகளுக்கும் பங்குண்டு எனநம்புகின்றார்கள். ஆனால் அந்தக் கடமை இந்நாள் நீதி ஸ்தலங்களுக்கு உண்டு என பண்டிதர்கள் அவ்வளவு நிச்சயமாக நம்ப வில்லை.

தனி ஆதர்சத்தினால் நீதிபதிகள் சட்ட ஞானம் பெறுகின்றனர் என்று நாம் நம்புவதற்கில்லை. ஆகையினால் நியாயமும் ஒழுங்கும், நீதியும் நல்லெண்ணமும் இன்றைய நீதிபரிபாலனத்தில் நீடித்த இடம் பெற்று வருகிறது. எதையும் எப்படி மதிப்பிடுவது என்பது பற்றி சில கொள்கைகள் இருப்பதாக மக்கள் நம்புகின்றனர். நீதிபதிகளும் சாதாரண மனிதர்களாகையால் இதே கொள்கைகளை அவர்களும் கையாள வேண்டுமென அவர்கள் எதிர்பார்க்கின்றனர். இதன் விளைவாக ஒவ்வொரு பிரதம நீதிஸ்தல தீர்ப்புக்கு சாதகமாகவும் பாதகமாகவும் தனித் தனியாக தனித்தனிக் காரணங்கள் கொடுத்து அபிப்பிராயங்கள் வெளியாகின்றன. ஆனால், உண்மையில் ஓரளவையாவது காணவேண்டும் என்கிற ஆவல் தணிய வில்லை.

## 8. ராஜ்யங்கள்

1. சமஷ்டி அரசியலமைப்பினால் ராஜ்யங்களுக்கு மறுக்க பட்ட உரிமைகள்.

2. எந்த உரிமைகளை சமஷ்டி அரசாங்கம் அனுஷ்டிப்பதனால் ராஜ்யங்களுக்கு பாதகம் ஏற்படுகின்றதோ, அந்த விஷயங்களில் சமஷ்டி அரசாங்கம், ராஜ்யங்கள் இருதரத்தாருக்கும் அளிக்கப்பட்ட உரிமைகள்.

3. யூனியனிலிருந்து வெளியேற அல்லது யூனியன் உரிமையைத் துறக்கும் உரிமை.

இவை நீங்கலாக ராஜ்யங்களுக்கு சுதந்திர நாடுகளுக்குள்ள எல்லா உரிமைகளுமுண்டு. உதாரணமாக ராஜ்யங்கள் அன்னிய நாடுகளுடன் உடன்பாடு செய்துகொள்வதை அரசியலமைப்புத் தடை செய்கிறது. ஒரு ராஜ்யம் மற்றொரு ராஜ்யத்துடன் உடன்பாடு செய்துகொள்ளலாம். ஆனால், அது அமுலுக்கு வரவேண்டுமானல் காங்கிரஸ் அதை அங்கீகரிக்க வேண்டும்.

சமஷ்டி அரசாங்கமும், ராஜ்ய அரசாங்கங்களும், ராஜ்யங்களுக்குள் நடக்கும் வியாபாரத்தையும், தொழில் முறையையும் ஒழுங்குபடுத்தலாம். இந்தத் துறையில் எந்த அளவுக்கு எந்த அரசாங்கத்திற்கு அதிகாரம் இருக்கிறது என்பது பற்றி அடிக்கடி வழக்குகள் வருகின்றன.

ராஜ்யங்களின் உள்நாட்டு விவகாரங்களில், அவை சுதந்திரமாயிருக்கின்றன. ராஜ்ய வருமான வரி, விவாகரத்து முதலிய விஷயங்களில், இரு ராஜ்யங்களில் போட்டி ஏற்பட்டால் கூட எல்லா ராஜ்யங்களுக்கும் விசேஷ சுதந்திரமிருக்கிறது. இம்மாதிரி வழக்குகள் மூலம் ஒரு ராஜ்யம் மற்றொரு ராஜ்யத்திற்குத் தொல்லை விளைவிக்கலாம். அம்மாதிரி சந்தர்ப்பங்களில் அரசியலமைப்பில் திருத்தம் செய்தோ அல்லது அமைப்புக்கு புது வியாக்கியானம் செய்தோ தொல்லையைத் தவிர்க்க வேண்டும்.

ஒரு புதிய ராஜ்யத்தை, சமஷ்டியில் சேர்த்துக் கொள்ளுவதாயிருந்தால், அதன் அரசியலமைப்பை காங்கிரஸ் அங்கீகரிக்க வேண்டும். அதன் மூலம் அந்த ராஜ்யத்திற்குக் குடியரசு அமைப்பு அளிக்கப்படுகிறது. ஆனால், சமஷ்டியில் சேர்த்துக் கொள்ளப்பட்ட பிறகு ஆதியில்சேர்ந்த 13 ராஜ்யங்களுக்குள்ள எல்லா உரிமைகளும் புது ராஜ்யத்திற்குண்டு. சமஷ்டி அமைப்பில் மாறுதல் செய்யாமல் காங்கிரஸ் புது ராஜ்யத்தின் அமைப்பை மாற்ற முடியாது.

உதாரணமாக அசல் அரசியலமைப்பில் யாருக்கு ஓட்டுரிமையளிப்பது என்பதை முடிவு செய்வது ராஜ்யங்களின் பொறுப்பாக இருந்தது. காங்கிரஸ் உறுப்பினரைத் தேர்ந்தெடுப்பதில் ராஜ்யங்களிலிருந்து கிழ்ச் சபைக்கு அங்கத்தினர் தேர்ந்தெடுப்பதற்கு,யாருக்கு ஓட்டளிக்கலாம் என்பதை அந்தராஜ்யம் செய்யலாமென்பதை அரசியலமைப்பு ஒப்புக் கொண்டிருந்தது. ராஜ்ய அரசியலமைப்போ, சட்டங்களோ திட்டம் செய்ததை சமஷ்டி காங்கிரஸ் மாற்ற முடியாது. ஆனால், காங்கிரஸ் அரசியலமைப்புக்குத் திருத்தங்கள் பிரேரேபிக்கலாம். அந்தத் திருத்தங்களை முக்கால்வாசி ராஜ்யங்கள் ஒப்புக் கொண்டால் சிறுபான்மையினருக்கு மாறாக அது நிறைவேறிவிடும்.

இம்மாதிரி திருத்தங்களால்தான் ராஜ்யங்கள்பெண்களுக்கு ஓட்டுரிமையளிக்க வேண்டி வந்தது. செனட்டர்களும் மக்களால் தேர்ந்தெடுக்கும் நிலைமை ஏற்பட்டது.

1868-ல் நிறைவேறிய 14-வது திருத்தத்தின் மூலம் வட பகுதி ராஜ்யங்கள் தென் பகுதி ராஜ்யங்களை நீக்ரோக்களுக்கு ஓட்டுரிமையளிக்கும்படி செய்வதற்குப் பிரயத்தனம் செய்தன.

ஆனால் தென் பகுதியில் ஏற்பட்டுள்ள சமூக பொருளாதார முன்னேற்றத்தாலும் இவ்விஷயத்தில் பிரதம நீதிஸ்தலம் அளித்த தீர்ப்பை யாரும் மீறுததாலும் பெரும்பான்மையான தெற்கு ராஜ்யங்களில் நீக்ரோக்கள் ஜனநாயகக் கட்சியின் 'பிரைமரி' தேர்தல்களில் ஓட்டுச் செய்கின்றனர். ஜனநாயகக் கட்சி அரசியலமைப்பில் குறிப்பிடப்படாததால், அது ஒருதனிப்பட்டோர் ஸ்தாபனம், அந்த ஸ்தாபனத்திற்குத் தங்களது உறுப்பினரைப் பொறுக்கும் உரிமையுண்டு. ஆனால் சட்டப்படி நடக்கும் தேர்தலில் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் ஜனநாயகக் கட்சியின் பிரைமரி தேர்தல்களில் பொறுக்கப்பட்டவர்களே. இதுதான் நாம் கவனிக்க வேண்டிய விஷயம். இந்தப் பிரச்னையை நாளாவட்டத்தில் தீர்ப்பது. சட்டப்படிக்குள்ள அதிகாரத்தால் சாத்ய மில்லை. நீக்ரோக்களுக்கு சாதகமாக பொதுஜன அபிப்பிராயம் திரண்டு அது தென் பிராந்தியத்தினருக்கு ஒத்ததாக வேண்டும்.

பிரிட்டிஷ் பார்லிமெண்டிற்கு ஸ்தலஸ்தாபனம் அமைப்பதற்கோ உள்ள ஸ்தாபனங்களை கலைப்பதற்கோ அதிகார மிருக்கிறதுபோல் ராஜ்யங்களுக்கும் இந்நாட்டில் அதிகார முண்டு. ராஜ்யத்திற்கும் ராஜ்யத்தைவிட அதிகமாக வரவு செய்யும் நியூயார்க் அல்லது சிகாகோபோன்ற பெரு நகர்களுக்கும் அடிக்கடி முரண்பாடு ஏற்படுவதுண்டு. ஒரு நகரம் ஒரு ஆட்சி முறையைப் பற்றியோ தனக்காக சொந்தப் பாதாள ரயில் போடலாமா என்பது பற்றியோ, ராஜ்ய சட்ட சபையின் சம்மதமின்றி முடிவு செய்யலாகாது.

ராஜ்யங்களை ஜில்லாக்களாகப் பிரிப்பதில் நகர மக்களைவிட விவசாயிகளுக்கு அதிகப் பிரதிநிதித்வம் அளிக்கும் முறையில் திருத்தி அமைக்க ராஜ்ய ஆட்சியினர் விரும்புகின்றனர். எக்கட்சிப் பக்கமும் நிர்ணயமாக இல்லாத ராஜ்யங்களில் நகர ஆட்சி, ஜனநாயகக் கட்சியினரிடமும், ராஜ்ய சட்ட சபை குடியரசுக் கட்சியினரிடமும், இருப்பதுண்டு.

ராஜ்யபோலீஸ் ராணுவத்திற்கு ராஜ்யகவர்னரே பிரதம அதிகாரி. இந்தப் படைகளை ராஜ்யத்திற்குள் அமைதியைக் காப்பதற்கு பயன் படுத்தலாமே யொழிய வேறு ராஜ்யங்கள் மீது செலுத்தலாகாது. படையை சமஷ்டி அரசாங்கம் பயன் படுத்தலாம். ஒரு ராஜ்யத்தில் கலவரத்தை அடக்க முடியா விட்டால், கவர்னர் அமெரிக்கப்படையின் உதவியை நாடலாம். சில சட்டங்களை அமுல் செய்வது ராஜ்ய கவர்னரின் பொறுப்பு. அவர்தான் சமஷ்டி ஆட்சியுடன் தொடர்ப்பு கொள்பவர். சமஷ்டி ஆட்சியினர் கூட்டும் கவர்னர்கள் மகாநாட்டிற்குச் சென்று, பிற கவர்னர்களுடன் ராஜ்யங்களுக்குப் பொதுவான விஷயங்களைப் பற்றிப் பேசுவார். கைதிகளை மன்னிக்கும் உரிமை, கவர்னருக்கு உண்டானாலும் சில சமயம் இதற்காக அமைக்கப்பட்ட போர்டாரின் யோசனைப்படியே முடிவு செய்யவேண்டிவரும்.

ஜனாதிபதி தனது மந்திரிகளை தேர்ந்தெடுக்கும் மாதிரி உரிமை, ராஜ்ய கவர்னர்களுக்குக் கிடையாது. அவருடைய ஆலோசகர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களா

கையால் அவருடைய தயவு இவர்களுக்குத் தேவை இல்லை. கவர்னரில்லாத சமயங்களில் ஆட்சி நடத்த வேண்டிய உதவி கவர்னருக்கும், இவருக்கும் வித்தியாசம் ஏற்பட்டு நிர்வாக நெருக்கடிகள் ஏற்படுவதுமுண்டு.

ராஜ்யங்களின் நிர்வாக அமைப்பின் விசேஷ அம்சம் நிர்வாகிகளை பதவிகளிலிருந்து விலக்குவதற்கான முறை. ஒரு கவர்னரையோ அல்லது பிற அதிகாரிகளையோ நீக்குவது சம்பந்தமாக ஓட்டெடுக்கும்படி மக்கள் மனுச் செய்துகொள்ள லாம். இந்த முறை மூலம் அதிகார வர்க்கத்திற்குள் நடக்கும் சச்சரவுகளை தீர்க்கலாம் என்பது சட்டம். ஆனால் சச்சரவு செய்பவர்களுக்கு இது எச்சரிக்கையாய் இருந்திருக்கிறதே யொழிய, உபயோகிப்பதற்கான சந்தர்ப்பம் ஏற்படவில்லை.

கவர்னருக்கும், ஜனாதிபதிக்கும் உள்ள மற்றொரு வித்தி யாசம், கவர்னர் மேல் பதவிக்கு ஆசைப்படலாம்; அப்படி ஆசைப்படுவதும் உண்டு. ஒரு செனடர் இறந்து விட்டால், அந்த செனட்டரின் ராஜ்யக் கவர்னர் தம் பதவியை உதவி கவர்னரிடம் விட்டு விட்டு, தன்னையே செனட்டர் பதவிக்கு நியமிக்கும்படி உதவி கவர்னர் செய்விக்கப்படலாம். அனேக மாக, அவர் இந்தப் பதவிக்கு ஒரு நண்பரையோ அல்லது எதிர்கட்சியினரையோ நியமிக்கலாம். இம்மாதிரி நியமனங்கள் அவ்வளவு பரிசுத்த நோக்குடன் செய்யப்படுவதில்லை. அடுத்தபடியாக யார் செனட்டிற்கு நிற்கப்போகிறார், கவர்னர் அந்த சமயத்தில் செனட்டிற்கு போக விரும்புகிறாரா அல்லது மீண்டும் கவர்னர் பதவிக்கு நிற்கப்போகிறாரா என்பன வற்றைப் பொறுத்திருக்கிறது இப் பதவி விஷயத்தில் முடிவு செய்ய வேண்டியது. எந்தக் கட்சியைச் சேர்ந்தது என திட்ட மாகக் கூறமுடியாத, நியூயார்க், ஓஹியோ போன்ற ராஜ்யங் களில் கவர்னர் ஜனாதிபதி பதவியில் கண் வைத்திருக்கலாம். ராஜ்யத் தலைமை பதவிக்கும், அமெரிக்க செனட்டிற்கு மிடை யில் எந்தப் பதவி வேண்டுமென முடிவசெய்வதற்கான சாணக் கியம், எதிர்காலச் சிறப்புக்கு, அஸ்திவாரம் போன்றதாகும்.

ராஜ்ய சட்ட அமெரிக்க அரசியலின் அனாதைக் குழந்தை போன்றது. அமெரிக்கக் காங்கிரஸ் மாதிரி பொதுமக்கள்

கவனத்தை ஈர்க்கும் கவர்ச்சி அதற்கில்லை. நகர ஆட்சியினர் மாதிரி மக்களின் சீர்திருத்த ஆர்வத்தை கிளம்பும் அளவுக்கு மக்கள் வசிக்குமிடங்களுக்கு அருகாமையிலும் இல்லை.

ராஜ்ய சட்டசபைகளை, ஏதோ ஓய்வுநேரத்தில் கூடி செயலாற்றும் மகாநாடுகளாகவே அந்த ராஜ்யங்களில் பொது மக்கள் கருதி வருகின்றனர். அவற்றின் அங்கத்தினர்கள் செல்வாக்கு வாய்ந்த தனி நபர்களாயிருக்கலாம். ராஜ்ய விவகாரங்களை கவனிக்க வருஷத்திற்கு சில வாரங்களோ, அல்லது இரண்டாவது வருஷத்தில் மட்டுமோ அவர்கள் கூடலாம். ஆகையால் அங்கத்தினருக்கு மாதச் சம்பளம் கிடையாது. அவர்கள் பெறும் தொகை தாங்கள் செலவழிக்கும் காலத்திற்கேற்ற ஊதிய மாகவே மதிக்கப்படுகிறது.

ஆகையால் பெரும்பான்மையான ராஜ்ய சட்ட சபையினர், தங்களுடைய சொந்த ஊரில் சொந்த வியாபாரமோ, அல்லது வக்கீல் தொழிலோ நடத்துபவர்களாய் இருப்பதில் ஆச்சரிய மில்லை. சில சமயம் அங்கத்தினர்கள் சொந்த தொழில் நலனைக் கொண்டு பொது விஷயங்களை முடிவு செய்பவராயிருக்கலாம்.

உதாரணமாக ஒரு ராஜ்யத்தில் இரண்டாவது உலக யுத்தத்திற்கு முன் ராஜ்ய செனட்டர்களுக்கு வருஷாந்திரம் 700 டாலருக்குக் குறைவான சம்பளமே கொடுக்கப்பட்டு வந்தது. ராஜ்யத்திற்கு வெளியிலுள்ள சுரங்கக் கம்பெனியின் பிரதிநிதி ஒருவர் தமது நிலையத்திற்கு ஏற்றுமதி வரி விதிக்கப் படமாட்டாது யென ஜம்பம் பேசினாராம். இதற்கு அவர் கூறிய காரணம் செனட்டர்களில் பெரும்பான்மை யோருக்கு தமது கம்பெனி வக்கீல்கள் என்று சொல்லி வருஷத்திற்கு தலா 5,000 டாலர் பணம் கொடுத்து வந்ததுதான்.

அனேக ராஜ்யங்களில் அரசியல் கட்சித் தலைவர்களில் ஓரிருவர் பிரபலமான வியாபார நிலையத்தின் பிரதிநிதிகள். அனேக வகையான வர்த்தக நிலையங்களுக்கு ராஜ்யங்கள் இயற்றும் சட்டங்களில் மிகுந்த அக்கரையுண்டு. பொதுக் கட்டிடம் கட்டும் கண்டிராக்டர்களுக்கும், சூதாட்டகார்கள் தங்கு தடையின்றி தங்கள் தொழிலை நடத்தவும் சட்டங்களில்

அக்கரை இருப்பது இயற்கைதான். சட்டசபையில் உசிதமான கட்டுப்பாடுகளை நிறைவேற்றுவதன் மூலம் ராஜ்யத் தலைவர் இத்துறை நண்பர்களை திருப்தி செய்யலாம். அவருடைய யோசனையை ஏற்காத சட்டசபை மெம்பரை அடுத்த தேர்தலில் தோற்கடித்து விடுவார் எனும் பயத்தினால், அவருடைய அதிகாரம் நிலைத்திருக்கிறது.

ஏதோ மசோதாக்களைப் புகுத்தி உலுக்கு உலுக்கிடுவதாகப் பயமுறுத்தி சில சட்டசபை அங்கத்தினர் பலரிடம் பணம் பறித்துப் பிழைக்கிறார்கள். உதாரணமாக, படம் காட்டும் கொட்டகைகளுக்கு, அதிக செலவில் தீயணைக்கும் வசதி செய்யவேண்டு மென்றோ, அகாத வட்டி வாங்கும், லேவாதேவிக்காரர்களைக் கட்டுப்படுத்த வேண்டு மென்றோ ஒரு அங்கத்தினர் சட்டம் கொண்டு வரப் போவதாக அறிவிக்கலாம். இந்தச் சட்டத்தைத் தவிர்க்க வேண்டுமானால், அந்த அங்கத்தினரின் நண்பரான ஒரு வக்கீலை வைத்துப் பேசுதல் நலம், என்று அவருக்கு யோசனை கூறப்படும். வக்கீல் பீஸ் எனும் பெயரில் அவருக்குக் கணிசமான தொகை கொடுத்த உடன் அந்த மசோதா கைவிடப்படும்.

ராஜ்ய அரசாங்கங்களின் நேர்மைக் குறைவுக்குக் காரணம், ஓட்டர்களுக்கு அரசியல் அக்கரையில்லாததுதான். சிக்கலான ராஜ்ய சட்டங்களைப் பற்றியோ, அவைகளுக்கும், வர்த்தகத்திற்கும் உள்ள தொடர்பு பற்றியோ மக்களுக்கு ஒன்றும் தெரியாது, தெரிந்து கொள்ளவும் அவர்கள் விரும்புவதில்லை. நாணயம் மிகுந்தவர்கள் தங்கள் சொந்தத் தொழிலை விட்டு, பொது நலனில் ஈடுபடுவதற்கான ஊதியமளிக்க அவர்கள் தயாராயில்லை.

மக்கள் போதிய அளவு ராஜ்ய அரசியலில் ஈடுபட்டால் தானே, நாணயமானவர்கள் கட்சி யந்திரத்தையும் மீறி ஓட்டுகள் சேகரிப்பது பயனளிக்குமென நம்பி வேலை செய்வார்கள். ஆனால், எப்போதாவது ஊழல் நிறைந்து விட்டால், மக்கள் ஆர்வத்துடன் கிளம்பி சீர்திருத்தம் கோருவார்கள்.

ராஜ்ய சட்டசபைகளிடம் மக்கள் நம்பிக்கை கொள்ளாததால், மனுச்செய்து கொள்ளல், பொதுஜன வாக்கெடுப்பு ஆகிய முறைகளை சுமார் 20 ராஜ்யங்கள் 1900-ம் வருஷ வாக்கில், தங்கள் அரசியலமைப்பில் சேர்த்துக் கொண்டன. ஓட்டர்களில் 10 சத விகிதத்தினர் கையெழுத்திட்டு அனுப்பும் மனு மூலம் அவர்கள் சட்டத்தை இயற்றத் தொடங்கலாம், அல்லது சட்டசபையில் விவாதத்திலிருக்கும் மசோதா பற்றி பொதுஜன வாக்கெடுக்கவேண்டும் என்று கூறி அம் மசோதாவைத் தடை செய்யலாம். மனு மூலம் ஒரு விசேஷ தேர்தல் ஏற்படுத்தி அதில் ஓட்டுச் செய்வதன் மூலம் சட்டசபையை மீறலாம். இந்த நேரடியான ஜனநாயக முறை மிகவும் சிக்கல் நிறைந்ததாயிருப்பதால் இதை 1900-ல் கொணர்ந்தவர்கள் எதிர்பார்த்தபடி பயன்படுத்தவில்லை ஆனால் மக்கள் ஆத்திரம் அடையும்படி சபையினர் நடந்துகொண்டால் அவர்களை, வழிக்குக் கொண்டுவரும், தண்டாயுதமாக இது இருந்து வருகிறது.

சட்டசபையை மக்கள் நம்பாததனால் ஏற்பட்ட மற்றொரு விளைவு அனேக ராஜ்யங்கள் தங்களது அரசியலமைப்பில் பல விதமான சட்டங்களைப் புகுத்தி வைப்பதுதான். இதனால் சில ராஜ்யங்களின் அரசியலமைப்புகள் நீண்டதாயிருப்பதுடன் ஒரு ராஜ்ய அமைப்புக்குள்ளே கண்ணியம் வாய்ந்ததாக அவைகள் இல்லை.

பொதுஜன நம்பிக்கையில்லாமலும், கண்ணியமில்லாமலும் அரசியலமைப்புகள் இருந்தும், ராஜ்யங்களுக்குள்ள அதிகாரங்கள் மூலம் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் அதிசயிக்கத்தக்கதாகவே இருந்திருக்கின்றது. முனைந்து வேலை செய்தால் மக்கள் எண்ணம் ஈடேறுகிறது. மேலும் திறமை மிக்க கவர்னர்கள் மக்கள் எண்ணத்தை ஈடேற்றுகின்றனர்.:

ரயில் போடுவது, பொதுஜன வசதிகளை பெருக்குவது சாராய உற்பத்தியை ஒழுங்கு படுத்துவது போன்ற துறைகளில் பல ராஜ்யங்கள் வழிகாட்டிகளா யிருந்திருக்கின்றன. ராஜ்யங்கள்தான் பெண் குழந்தைத் தொழிலாளர்களுக்குப்

பாதுகாப்பளிக்கும் சட்டங்களை நிறை வேற்றின. நகரங்களுக்குப் புது ஆட்சி முறைகளை சோதித்துப் பார்க்க ராஜ்யங்கள் அனுமதியளித்தன. சமீப காலத்தில் ராஜ்ய சட்டசபைகள் தங்கள் வேலை முறைகளை சீர்திருத்திக் கொண்டிருக்கின்றன. இதற்காக சட்டசபை சம்பந்தமான ஆராய்ச்சி செய்ய, மசோதாக்கள் தயாரிக்க சட்டமியற்றுவது பற்றி படித்தறிந்துகொள்ள பல காரியாலயங்களை ஆரம்பித்திருக்கின்றன.

சமஷ்டி அரசாங்கம் இயற்றியுள்ள பல பொதுநல அபிவிருத்தி சட்டங்கள் ராஜ்ய சட்டங்களைப் பின்பற்றியே இயற்றப்பட்டன. அமெரிக்க பிரஜை ராஜ்யத்திற்கு ராஜ்யம் சுற்றிக் கொண்டிருந்தாலும் அவனுக்கு திட்டமான சில உரிமைகள் வேண்டும் என்கிற கருத்துத்தான் சமஷ்டி சட்டங்கள் இயற்றுவதற்கு முக்கியமான காரணம். பல புதுச் சட்டங்களுக்கு, ராஜ்யங்கள் ஆராய்ச்சிசாலைகளாக இன்னும் பயன்பட்டு வருகின்றன. இந்த ஆராய்ச்சி பயனளித்தால், இந்த அனுபவத்தின் மூலம் ஒரு சட்டத்தை நீடிக்கலாமா, அது ராஜ்ய சட்டமாயிருக்கலாமா, அல்லது சமஷ்டி சட்டமாயிருக்கலாமா என்பதை சுலபமாக முடிவு செய்யலாம்.

ராஜ்ய கோர்ட்டுகளும், சமஷ்டி கோர்ட் பாணியிலேயே அமைக்கப்பட்டிருக்கின்றன. ராஜ்யங்களிலும் ராஜ்ய சட்டங்கள் செல்லும் செல்லாது என்று தீர்ப்புக் கூறும் பிரதம கோர்ட்டுகள் இருக்கின்றன. ஆனல் ராஜ்யக் கோர்ட் மக்களை நெருங்கி இருப்பதால் அவைகள் வேறுவகையான சட்டத்தைப் பற்றித் தீர்ப்புக் கூறுகின்றன. சமஷ்டி கோர்ட்டுகள், சமஷ்டி அரசியலமைப்பில் குறிப்பிடப் பட்டிருப்பவைகளைப் பற்றி மட்டும் விசாரணை செய்கின்றன. ஆனல் ராஜ்யக் கோர்ட்டுகள் சமஷ்டி கோர்ட்டுக்கென ஒதுக்கப்பட்ட சட்டங்கள் தவிர மற்றெல்லா சட்டங்களையும் நிர்வாகிக்கின்றன. ராஜ்ய சட்டங்களில் சில அதன் அரசியமைப்பிலும், சில ராஜ்ய சட்டசபை நிறைவேற்றியதிலும், இருக்கின்றன. ஆனல் ராஜ்யங்களில் நிலவும் சட்டங்களில் பெருமளவு, ஆங்கில காமன்லா அமெரிக்கரின் அற நெறி, வாழ்க்கை நிலைக்கொத்த வகையில் கோர்ட்

டார் தங்கள் தீர்ப்புகள் மூலம் பயன்படுத்திக் கொண்டதேயா கும். லூயிஸியானுவில் நிலவும் சட்டத்தில் பெரும் பகுதி நெப்போலியன் இயற்றிய பிரஞ்சு சட்டத்திலிருந்து பெயர்த் தெடுக்கப்பட்டதாகும்.

இங்கிலாந்தில் காமன்லா என்பது பிரிட்டிஷ் கோர்ட்டு களின் முன்னுள் தீர்ப்புகள் அடங்கியவை. சட்டசபையினுல் நிறைவேற்றப்பட்ட சட்டங்களின் கீழில்லாமல், மற்றபடி தனிப்பட்டவர்களுக்குள், வழக்குகள் கிரிமினல் வழக்குகளில் கூறப்பட்ட தீர்ப்புகளும் இதில் அடங்கியவை. அமெரிக்காவில் எவ்வழக்கும் சட்டப் பிரகாரம் தொடர்ந்து நடக்க வேண்டு மென்பது இங்கிலாந்தில் 'காமன்லா' அளிக்கும் உரிமைகள் போன்றவை.

உதாரணமாக 1876-ல் துணிக் கடைபற்றிய 'இலினுய் சட்டம்' இலினுய் கோர்ட்டுகளின் ஆதரவு பெற்றது. சட்டப் பிரகாரம் இன்றி சொத்தை இந்த சட்டம் பறிமுதல் செய்கிறது என்றுகூறி, இந்தச் சட்டத்தை ஆட்சேபித்து அமெரிக்கபிரதம நீதிஸ்தலத்தில் அப்பீல் தாக்கல் செய்யப்பட்டது. துணிக் கடைகளை சட்டம் ஒழுங்குசெய்யலாம் என பிரதம நீதிஸ்தலம் தீர்ப்பு அளித்தது. இதனுல் பொதுநலம் பாதிக்கப்படுகிறது என்று கோர்ட்டார் தங்கள் தீர்ப்புக்குக் காரணம் கூறினர். இந்த அபிப்பிராயம் 'பிரிட்டிஷ் காமன்லா'வுக்கு ஒத்தது என நீதிபதிகள் கருதினர். சமஷ்டி அரசியலமைப்பின் மூலம் தோன்றியதானுலும். அதன் நடைமுறை—புதிய சட்டங்கள் அல்லது அமைப்பில் செய்யப்பட்ட சீர்திருத்தம் இல்லாத சந்தர்ப்பங்களில்—பெரிதும் காமன்லாவை அனுசரித்தே இருக்கும்.

சமஷ்டிக் கோர்ட்டுகளை விட ராஜ்ய கோர்ட்டுகளே, 'தர்ம நியாயம்' வழங்குகின்றன. தர்ம நியாயம் என்பது தனிப்பட்ட கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டது. ஒரு சொத்தை வாரிசுகளிடையே எப்படி பிரித்துக்கொடுப்பது என்பதுபோன்ற சிவில் வழக்குகளிலேதான் தர்ம நியாயம் இடம் பெறும். ஒருவன் சட்டப்பிரகாரம் செய்யும் காரியத்தில் அகாரணமாகப் பிறருக்

குத் தீங்கு செய்ய நேரிட்டால், அந்தத் தீங்கு நடைபெருமல் ஒரு நீதிபதி தடையுத்தரவு பிறப்பிக்கலாமா என்று "தர்ம நியாயம்," நிர்ணயிக்கின்றது.

'தர்ம நியாய முறை' இங்கிலாந்தில் தோன்றி வளர்ந்ததற்குக் காரணம் மக்கள் 'காமன்லா' முறையில் அதிருப்தி கொண்டதுதான். இந்த 'காமன்லா' முறை எதிர் பாராத சந்தர்ப்பங்களில் நீதி வழங்க முடியாமல் கட்டு திட்டமாயிருந்தது. 'தர்ம நியாயம்' வழங்குவது மன்னர் பிரானின் மனச்சாட்சியை பொருத்தது. சட்ட யந்திரம் பட்டவர்த்தனமான அநியாயம் செய்ய நேரிட்டால் மன்னன் மக்களுக்கு தர்மம் வழங்குவான். மன்னனின் மனச்சாட்சியின் பாதுகாப்பாளர், சான்ஸலர். இந்த தர்ம நியாயம் வழங்கும் 'சான்ஸரி' கோர்ட்டுகள் தனிக் கொள்கைகளை வகுத்துக்கொண்டன. சர்ச் சட்டம், ரோமன் சட்டத்திற்கு கீழ் வகுக்கப்பட்ட விதிகளையும் கொண்டவைகள் இத் தனிக் கொள்கைகள்.

இங்கிலாந்தில் சான்ஸரி கோர்ட்டு, தான் இயற்றிய விதிகளின் சிக்கல்களில் அகப்பட்டுக் கொண்டதனுல் பெரிய எஸ்டேட்டுகளின் வாரிசுகளுக்கு சொத்துரிமை பற்றி சமாதானம் ஏற்படாமல் தவித்தார்கள் என்பதை சார்லஸ் டிக்கன்ஸின் கதைகளைப் படித்தவர்கள் அறிவர். அமெரிக்காவில் பிரிட்டனிலிருந்து பெற்ற தர்ம நியாய முறை சட்டத்தால் திட்டமான உருப்பெற்றிருக்கிறது. சில ராஜ்யங்களில் தர்ம நியாய வழக்குகளை விசாரிக்க தனி சான்ஸரி கோர்ட்டுகள் இருக்கின்றன. ஆனல், பெருவாரியான ராஜ்ய கோர்ட்டுகளும், எல்லாசமஷ்டி கோர்ட்டுகளும் சட்டத்தின் கீழ் வரும் வழக்குகளையும் தர்ம நியாய வழக்குகளையும் விசாரிக்கின்றன.

அனேக ராஜ்யங்களில் மாஜிஸ்திரேட் கோர்ட்டுகளும், போலீஸ் கோர்ட்டுகளும் அடிப்படையிலுள்ள நீதிஸ்தலங்கள், இந்த கோர்ட்டுகளில் நீதிபதி ஒரு குடிகாரனை 30 நாட்களுக்கு ஜெயிலுக்கு அனுப்பலாம்; அளவுக்கு மீறி மோட்டாரை ஓட்டுபவனுக்கு அபராதம் விதிக்கலாம். இந்த வழக்குகளை ஜூரிகளின் உதவி கொண்டு விசாரிக்கவேண்டியதில்லை. இந்த

மாஜிஸ்டிரேட்டுகள் கொலைக் குற்றம் சாட்டப்பட்டவனை விசாரித்து மேல் கோர்ட் விசாரணைக்கு அனுப்பலாம்.

இந்தக் கோர்ட்டுகளுக்கு மேலே, ஜூரிகளின் உதவி கொண்டு விசாரிக்கவேண்டிய உயர்தரக் கோர்ட்டுகள் இருக்கின்றன.

மாஜிஸ்டிரேட் அல்லது போலீஸ் கோர்ட்டுகளில் அரசியல் ஊழல்களின் விளைவைப் பார்க்கலாம். இங்கே நீதிபதியாயிருப்பவர்களுக்கு, போதிய பயிற்சி இருக்காது. இவர்கள் மோசமான அரசியல் செல்வாக்கினால் பதவிக்கு வந்தவர்களாயிருப்பார்கள். இவ்வளவு ஊழல்கள் விசாரணைக் கோர்ட்டுகளிலிருக்காது.

அனேக ராஜ்யங்களில் விசாரணைக் கோர்ட்டு நீதிபதிகள் குறைந்த கால அளவுக்கு மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். நீதிபதிகளைத் தேர்ந்தெடுப்பது வக்கீல்களுக்குப் பிடிப்பதில்லை. ஏனெனில் அரசியல் கட்சி போகும் வழியில் நீதிபதிகளும் செல்லவேண்டியிருக்கிறது. வக்கீல்கள் சங்கத்தார் தங்கள் கருத்திற்கேற்ற நல்லநீதிபதிகள் வெற்றி பெறுவதற்காகத் தேர்தலில் ஈடுபடுகின்றனர். தொழிலாளர் சங்கத்தினரும் விவசாய ஸ்தாபனத்தாரும் நீதிபதிகள் தேர்ந்தெடுக்கப்படுவதையே விரும்புகின்றனர். ஏனெனில், சட்டசபையினரும், கவர்னரும், பெருத்த வியாபார ஸ்தாபனத்திற்கு வேண்டியவர்களையே நீதிபதிகளாகப் பொறுக்குவர் என இவர்கள் அஞ்சுகின்றனர், ஆகையால் பெருவாரியான வழக்குகளை விசாரிக்கும் ராஜ்யக் கோர்ட்டுகள் ராஜ்யத்தை இயக்கும் அரசியல் சக்திக்குப் பயப்படும் நிலைக்கு வந்து விடுகிறார்கள். ஆகையால் ஓட்டர்கள் ஆதரிக்கும் அல்லது கோரும் நாணயத்தைப் பிரதிப்பலிப்பார்களாகவே, நீதிபதிகள் அமைந்து விடுகின்றனர்.

ராஜ்ய அரசாங்க உத்தியோகஸ்தர்கள் பெரிதும் தகுதியின் காரணமாகவின்றி அரசியல் சிபாரிசுகளின் பேரில் நியமிக்கப்பட்டவர்கள். சட்டசபை மாதிரியே, ராஜ்ய உத்தியோகஸ்தர்களையும், பொதுமக்கள் கவனிப்பதில்லை. ஆனால், அவர்கள் நிலைமையைச் சீர்திருத்த பலவித சக்திகள் முயற்சித்து வருகின்றன.

உதாரணமாக, ஆரோக்கிய பாதுகாப்பு, என்ஜீனியரிங் துறைகளில் அதிகமாக தொழில் தெரிந்தவர்களே உத்தியோ கத்திலிருக்கின்றனர். இப்படிச் சிறப்பு வாய்ந்தவர்களிருக்கு மிடங்களில் சிபாரிசினுல் உத்தியோகத்திற்கு வந்தவர்களின் திறமைக் குறைவினுல் அதிகாரம் வகிக்கும் கட்சி, பொதுஜன நிந்தனைக்குள்ளாகும். இந்தத் துறைகளில் தகுதியின் பேரில் நியமனம் செய்யப்பட்டால் இந்த முறை பிற பகுதிகளுக்கும் பரவும்.

சீர்திருத்தத்திற்கான மற்ருெரு சக்தி சமஷ்டி ஆட்சி யினரின் பண உதவி. இதை உபயோகப்படுத்தும் ஸ்தல அதி காரிகள் பணத்தை சரிவரப் பயன்படுத்தாமல் சொந்த உபயோ கத்திற்கு எடுத்துக்கொள்ளுவது முண்டு. இப்படிச் சில காலம் நடந்தால் பொதுமக்களுக்கு இவர்கள் பேரில் ஆத்திரமேற் படும். வாஷிங்டனில் அதிகாரம் வகிக்கும் கட்சி தனது உதவி பயன்படாமல் வீணுகி விட்டதை அறியும். அடுத்த தடவை சமஷ்டி ஆட்சியினர் பணம் கொடுக்க வேண்டிய சமயத்தில் தகுதி முறையில் உத்தியோகங்கள் கொடுத்தால்தான் உதவி கிடைக்கும் என நிபந்தனை விதிப்பார்கள்.

இம்மாதிரி முயற்சிகளால் ராஜ்ய நிர்வாகம் திறமை மிக்கோராலும், நாணயமுள்ளவர்களாலும் நடந்தால் ராஜ்யத் தலைநகரில் யோக்கியமான ஆட்சி நிலவப் பாடுபடும் பொது நல ஸ்தாபனங்கள் ஊக்கம் பெறுகின்றன்.

ராஜ்யஅரசாங்கங்கள் தங்கள் வருவாயிலிருந்தே செலவைச் சரிக்கட்ட முடியாமல் கஷ்டப் படுவதன் காரணம் அமெரிக்க வர்த்தக ஸ்தாபனங்களைவிட இவைகளின் செலவினங்கள் அதிகம் என்பதல்ல; ராஜ்யத்தில் விதிக்கப்படும் வரிகளைச் சுலப மாக வசூல் செய்ய முடியாததுதான். பெரிதும் விவசாயத்தை நம்பி வாழும் ராஜ்யத்தின் செலவு 1000 அல்லது 2000 லட்சம் டாலராகும். நியூயார்க் போன்ற ராஜ்யத்தின் செலவு ஒரு மிலியன் டாலராகும். அதாவது நடுத்தர அல்லது பெரிய வர்த்தக ஸ்தாபனத்தின் செலவுக்கொப்பாகும். நியூயார்க் நகரத்தின் செலவைவிட நியூயார்க் ராஜ்யத்தின் செலவு அதிகமே யாகும்.

ஒரு ராஜ்ய அரசாங்கம் ஸ்தாவர சொத்து ஜங்கம சொத்துக்களுக்கு, வரி வசூலிக்கலாம். வர்த்தகம் விற்பனை முதலியன தொடங்க லைசன்ஸ் அளிக்கலாம். வர்த்தக சொந்த வருமானத்திற்கு வரி விதிக்கலாம் ; எரிவாயு, சிகரெட் முதலியவற்றிற்கு கலால் வரி விதிக்கலாம். ஸ்தல வருமானத்தில் சொத்துவரி ஒரு அளவுக்குத்தான் விதிக்கலாம். சொத்தின்மீது விதிக்கப்படும் மொத்த வரி அகாதமா யிருக்காது. அதிக வரி விதித்தால் சொத்து வாங்குபவர்கள் வாங்குவதைக் கைவிடுவார்கள். அம்மாதிரியே வருமான வரியும், ராஜ்யங்களில் குறைவாகத்தான் வசூலிக்க முடியும். ஏனெனில் அதிக வருமான முள்ளவர்களிடம் சமஷ்டி அரசாங்கம் பெருந்தொகை வசூலித்து வருகிறது. ஒரு பணக்காரன் தனது வருமானத்தில் 60 அல்லது 75 சதம் சமஷ்டி ஆட்சியினருக்குச் செலுத்தி விட்டால் பாக்கியுள்ளதில் அதே அளவுக்கு ராஜ்ய சர்க்காருக்குச் செலுத்த முடியாது.

ஆகையால் ராஜ்ய வருமான வரியில் பணக்காரர்கள் செலுத்தும் பணத்திற்கும் பணக்குறைவானவர்கள் கொடுக்கும் பணத்திற்கும் சமஷ்டி வரி செலுத்துவதுபோல் வித்தியாசமிருக்காது. ராஜ்யங்கள் விதிக்கும் சொத்து விற்பனை, எரிவாயு, சிகரெட் வரிகள் பெரிதும் குறைந்த வருமான முள்ளவர்களே செலுத்துவதால் அது வியாபார மந்தத்தை விளைவிக்கக் கூடும். ராஜ்யங்கள் வரியை அதிகமாக உயர்த்த முற்பட்டால் அண்டை ராஜ்யங்களில் சரக்கு மலிவாகக் கிடைக்குமானால், வியாபாரம் இங்கிருந்து பிற ராஜ்யங்களில் பெருகும்.

ராஜ்யங்களில் வருமானம் குறைவாயிருப்பதால் அவர்களுடைய பொறுப்புக் குறைவாயிருக்கிறது. ஆகையால் தாங்கள் சுமக்கவேண்டிய பாரத்தில் ஒருபகுதியை சமஷ்டி அரசாங்கத்தின் மீது சுமத்துகின்றன. சமஷ்டி நிதியிலிருந்து ராஜ்யங்கள் பலவகையான உதவிகளை எதிர்பார்க்கின்றன. ரஸ்தா போடுவதற்கும் கல்வி வளர்ச்சிக்கும், சமஷ்டி ஆட்சியினர் நீண்ட காலமாகவே உதவி வருகின்றனர். 1933-லிருந்து வேலையில்லாத் திண்டாட்டம் போன்ற சங்கடங்களைத் தவிர்க்க வேண்டிய ராஜ்யங்களின் பொறுப்பை சமஷ்டி பாதுகாப்பு

ஸ்தாபனம் மேற்கொண்டு விட்டது. பொது மராமத்துக்கு சமஷ்டி உதவி புரியவேண்டும் எனும் கொள்கை பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

ராஜ்யங்களுக்குச் சமஷ்டி உதவி அளிப்பதற்கு இருவகை ஆதாரங்கள் இருக்கின்றன. ஒன்று ராஜ்யங்களைவிட சமஷ்டி ஆட்சியினருக்கு வரி வசூலிக்கும் அதிகாரம் அதிகமாயிருக்கிறது. இதற்குக் காரணம் சமஷ்டி வரியைக் கொடுக்காமல் தப்பமுடியாது. தப்பவேண்டுமானுல் அமெரிக்காவை விட்டே வெளியேறவேண்டும். மற்ருெரு காரணம் பணக்காரனுக்கு வரி விதித்து, அவனைப் பணமில்லாதவனுடன் சமமாக்குவது பொது நன்மையே ஆகும். சில ராஜ்யங்கள் மற்றவைகளைவிடப் பணம் படைத்தவைகளா யிருக்கின்றன. வழக்கமாகப் பணம் படைத்த ராஜ்யங்களில் பணம் போட்டிருப்பவர்கள் ஏழ்மையான ராஜ்யங்களிலிருந்து அதிக வருமானம் பெறுகின்றனர். சமஷ்டி அரசாங்கம் பணக்கார ராஜ்யத்திலுள்ளவர்களுக்கு வரிவிதித்து அதிலிருந்து வரும் பணத்தில் ஒரு பகுதியை ஏழ்மை ராஜ்யங்களில் போட்டால் பணம் எங்கும் புழங்குவதுடன் சுபிட்சமும் பெருகுகிறது. ஒரு ராஜ்யம் சுயதேவைப் பூர்த்திசெய்யவேண்டும் எனும் வாதத்தைப் பணத்தைச் சமமாகப் புழங்க வேண்டும் எனும் கொள்கை ஜெயித்து விடுகிறது.

இம்மாதிரியே ராஜ்யத்தின் சுபிட்சப் பகுதிகளையும் ஏழ்மை பகுதிகளையும் ஓரளவு சம நிலைக்குக் கொண்டு வருவது ராஜ்ய அரசாங்கங்களின் முக்கிய பொறுப்புகளில் ஒன்ருகும். வழக்கமாக நகரங்களே விவசாயப் பகுதிகளுடன் நடத்தும் வர்த்தக லாபத்தில் பெரும் பகுதியை அடைகின்றன. நிலங்கள் எவ்வித தடையுமின்றி பாங்குகள், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள், பண லேவாதேவிக் காரர்கள் உடமைகளாகி விடுகின்றன. 1933-க்கு முன் இந்த நிலைதான் ஏற்பட்டது. இதன் விளைவு மக்களின் சுபிட்சத்தைப் பாதிக்கிறது. தனிப்பட்ட வர்த்தகத்தினுல் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளைச் சரிப்படுத்த ராஜ்யங்கள் ஏழ்மைப் பகுதிகளுக்கு பண உதவி செய்யவேண்டி வருகிறது. ரஸ்தாக்கள் மராமத்து வேலைகளை ராஜ்ய சர்க்காரே செய்வது தவிர

பள்ளிக் கூடங்கள் நூல் நிலையங்கள் சமூக நல ஸ்தாபனங்களுக்கு நேரடியாகப் பண உதவி செய்கின்றன.

இந்தச்சமநிலை ஏற்படுவதற்கும், சமஷ்டி அரசாங்கமே ஏராளமான வரி விதிக்கும் அதிகாரம் பெற்றிருப்பதால் ராஜ்யங்கள் எல்லாம் வாஷிங்டன் உதவியையே எதிர்நோக்குகின்றன. இந்த நிலை அமெரிக்க மக்களுக்கு மிகுந்த கவலையை யளிக்கிறது. மற்ருெரு புறம் சமஷ்டி சர்க்காரில் அதிகாரம் யாவற்றையும் தன்கைக் கொண்ட அதிகார வர்க்கம் இருக்கிறது. இந்த வர்க்கத்தின் பிரதிநிதிகள் நாடெங்கும் இருக்கின்றனர். இதனுல் ராஜ்யங்களின் பொறுப்புக் குறைந்து, அவைகளின் கண்ணியம் மக்கி விடுகிறது. இரு அரசியல் கட்சிகளின் தலைவர்களும் சமஷ்டியின் உதவியின் அளவைக் குறைக்கவேண்டும் என்று வற்புறுத்துகின்றனர்.

1952-ல் கவர்னர் ஸ்டீவன்ஸன் ஜனுதிபதி பதவிக்கு போட்டியிடுகையில் வாஷிங்டனிலிருந்து பொறுப்புகளை ஸ்தல அரசாங்கங்களுக்கு மாற்றவேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தினுர். 1953-ஆரம்பத்தில் ஜனுதிபதி ஐஸன்ஹோவர் சமஷ்டி வருமானத்திற்கும் ராஜ்ய வருமானத்திற்கும் உள்ள வித்தியாசங்களை பொதுவாக ஆய்ந்தறியும்படி உத்தரவிட்டார். இந்த உத்தரவின் நோக்கம் ராஜ்யங்களில் அரசியல் உறுதியும் வலிமையும் பெருகவேண்டும் என்பதுதான்.

ராஜ்யங்களின் கௌரவத்தையும் பொறுப்பையும் வளர்க்கப் பல யோசனைகள் கூறப்பட்டிருக்கின்றன. எரிவாயு வரிவிதிப்பதன் மூலம் ராஜ்யங்கள் ரஸ்தா போடும் செலவை ஈடுசெய்ய விரும்புகின்றனர், இந்த வரியை சமஷ்டி அரசாங்கம் விதிக்கலாகாது என்பது ஒரு யோசனை. குறிப்பிட்ட வரி விதிக்கத் தவறும் ராஜ்ய பிரஜைகளிடமிருந்து மட்டும் சமஷ்டி ஆட்சியினர் வசூலிக்க வேண்டுமென்பது மற்ருேர்யோசனை, இம்மாதிரி நிர்ப்பந்த முறை அனுஷ்டித்து சமஷ்டி சமூகப் பாதுகாப்புத் திட்டங்களில் ராஜ்யங்கள் ஒத்துழைக்கும்படி செய்யப்பட்டது. இதே முறையை வருமான வரி முறைக்கும் கையாளலாம் எனக் கூறப்படுகிறது. சௌகரியமான வசதி செய்து கொடுப்பதன்

மூலம் வியாபாரத்தையும் பணக்காரர்களையும் கவர ராஜ்யங்கள் போட்டியிடாமலிருந்தால் ராஜ்ய வருமானம் பெருவாரியாகப் பெருகும். மத்திய அதிகாரத்தை வலிமையுடைய தாக்குவ தற்கு இயல்பாகவே செல்வாக்குள்ளவர்கள் முயற்சித்து வரு கிறார்கள். அரசியல் துறையில் சாத்யமான மட்டில் இந்தப் போக்கைத் தடுக்க பல்வேறு செயற்கை முறைகள் கையாளப் படலாம். அமெரிக்க மக்கள் அனேகமாக தங்கள் ராஜ்ய ஆட்சியில் அக்கரை செலுத்தாவிட்டாலும் அந்த ஆட்சிக்கு ஆபத்து ஏற்படுகையில் அதைக் காப்பாற்றவே முன்வரு வார்கள்.

## 9. ஸ்தல ஆட்சி

அமெரிக்காவில் பாதிக்கு மேற்பட்ட மக்கள் நகரங்களிலே வசிக்கின்றனர். இந்த நகரங்களில் சுமார் 100ல், 100,000க்கு மேற்பட்ட மக்கள் வசிக்கின்றனர். மற்ற ஜனங்களுக்கு ஸ்தல ஆட்சி கவுண்டிகள் மூலம் நடக்கிறது. பள்ளிகள், சுகாதார வசதிகள், மற்றும் பொது நல நோக்கங்கள் நிறைவேற விசேஷ ஜில்லாக்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஜில்லாக்கள், கவுண் டிகள், நகரங்கள், பிரத்தியேகமாக இல்லாமல் பிசிரி இருக் கின்றன. ஒரே பிரஜை சமஷ்டி, ராஜ்யம், நகரம், கவுண்டி இரண்டு ஜில்லாக்கள் ஆகிய இவ்வெல்லாவற்றிற்கும் வரி செலுத்த வேண்டியிருக்கும்.

நகரங்கள் ஊழல் நிறைந்த இடங்கள் என தாமஸ் ஜெபர்ஸன் அவைகளை வெறுத்தார். 19-வது நூற்றாண்டில் நகர அரசியல் வாழ்க்கை ஊழல் நிறைந்தது என்பது நாடறிந்த விஷயம், இந்த நிலைமைக்குக் காரணம் ஐரோப்பாவிலிருந்தும், அமெரிக்க விவசாயப் பகுதிகளிலிருந்தும் நகரங்களுக்கு வந்த புதிய மக்களை நகர அரசியல் யந்திரக்காரர்கள் சுரண்டிப் பிழைப்பது சுலபமாயிருந்ததனால்தான். 1900-க்குப் பிறகு நகர ஆட்சியின் நாணயம் சற்று சீர்திருந்தியிருக்கிறது. இந்த சீர் திருத்தத்திற்குக் காரணங்கள், நகரத் தொழிலாளிகளின் வாழ்க் கைத்தரமும், சமூகப் பாதுகாப்பு வசதியும் உயர்ந்திருப்பதும்,

இதன் விளைவாக அரசியல் தலைவர்களின் தர்ம கைங்கரியத்திற்குத் தேவை குறைந்திருப்பதும், நகர ஆட்சிமுறை திறமை மிக்கதாயிருப்பதும்தான்.

நகரங்கள் பூரண சுதந்திர உரிமையுள்ளவைகளல்ல. ஆனால் நகர மக்கள் விரும்பும் நகர ஆட்சி சாஸனத்தை ராஜ்ய ஆட்சியினரிடமிருந்து பெறுவதற்கான செல்வாக்குள்ளவைகள். நகர ஆட்சிமுறை மூன்று வகைப்பட்டது ஆனால் மேயரும் கவுன்ஸிலும் உள்ள பழைய ஆட்சியே அனேகமாக நடைமுறையில் இருக்கிறது. கமிஷன் ஆட்சி முறை டெக்ஸாஸிலுள்ள கால்வெஸ்டனின் ஏற்பட்டது. இது 1901-ல் கொடுமையான வெள்ளத்தை சமாளிப்பதற்காக ஏற்பட்டது. இந்த முறை நடுத்தர விஸ்தீரணமுள்ள நகரங்களுக்கு 15 ஆண்டுகளில் பரவின. அதற்குப் பிறகு எந்தப் பகுதியும் இந்த முறையை ஏற்கவில்லை.

மூன்றுவதான கவுன்ஸில்—மானேஜர், அல்லது நகர மனேஜர் முறையை பொதுமக்கள் ஆர்வத்துடன் வரவேற்கத் தொடங்கினர். நடுத்தரமான சுமார் 900 நகரங்களில் இந்த முறையையே நிலைபெற்றிருக்கிறது.

பழங்கால மேயர்—கவுன்ஸில் ஆட்சி முறையில் கவுன்ஸிலர்கள் அல்லது ஆல்டர்மென்கள் ஸ்தல அரசியல் வாதிகளாயிருப்பார்கள். அந்த ஆட்சியிலுள்ள சிப்பந்திகள் தாங்கள் வகிக்கும் பதவிகளை அரசியல் சேவைக்குப் பரிசாகப்பெற்றனர். ஊழல் நிறைந்த நகராட்சியை கீழ்த்தரமான அரசியல் சூழ்ச்சிக்குப் பயன்படுத்திக் கொண்டனர். இதன் காரணமாக நலம் பெற்றவர்கள் புதிய ஆட்சி முறைகளை ஏற்பதை ஆட்சேபித்தனர். ஆனால் மேயர்—கவுன்ஸில் முறையிலேயே அனேக சீர்திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன.

அனேக இடங்களில் இரண்டு கவுன்ஸில்களுக்குப் பதிலாக ஒரே கவுன்ஸில் தானிருக்கிறது. இந்த ஒரு கவுன்ஸிலும் உருப்பினர் எண்ணிக்கை குறைக்கப்பட்டு அவர்கள் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். நல்ல தேர்ச்சி பெற்ற சிப்பந்திகள் தேவைப்படும் புதிய சேவைகள் பலவற்றை

தற்காலத்தில் நகரங்கள் மேற்கொண்டிருப்பதால், நகர நிர்வாகம் வெகுவாகத் திருத்தியமைக்கப்பட்டிருக்கிறது. அனேக நகரங்களில் மேயரின் அதிகாரங்கள் விரிவடைந்திருக்கின்றன. அவருக்கு ஆட்சி நடத்தும் பொறுப்பு அதிகம் அளிக்கப்பட்டிருக்கிறது. இந்த மாறுதல் மூலம் மேயர் கவுன்ஸில் முறை நகர மனேஜர் முறையாக மாருவிட்டாலும் அதன் சில அம்சங்களைப் பழைய முறையில் புகுத்தியிருக்கின்றனர்.

கமிஷன் நிர்வாக முறை ஒரு சிறு கூட்டத்தினருக்கு அதிகாரத்தையளிக்கிறது. இவர்கள் பொதுஜனங்கள் கவனத்தைக் கவரும் முறையில் பணிபுரிவார்கள் என்பது தான் இந்த அமைப்பின் நோக்கம் இந்தக் கமிஷனில் ஐயர் இருப்பர். இவர்களில் ஒருவர் தலைவர். அவருக்கு மேயர் என்று பெயர். கமிஷன் முழுதும் கூடி, கொள்கைகள் வகுக்கின்றது பிறகு அதன் அங்கத்தினர் ஒவ்வொருவரும் ஒரு இலாகாவை நிர்வகிப்பர். ஆனல் இவர்களுக்குள் அபிப்பிராயபேதம் ஏற்பட்டு நெருக்கடி நிலவுமானல் அதைத் தவிர்ப்பதற்கு வழி இல்லை.

கவுன்ஸில் மானேஜர் முறையை 1908-ல் வர்ஜீனியாவிலுள்ள ஸ்டாண்டனில் அமைத்து சோதனை செய்து பார்த்தார்கள். இந்த முறையில் கவுன்ஸிலர்கள் கொள்கைகளை வகுத்தனர், அவைகளைத் தாங்களே நியமித்த ஒரு மானேஜர் மூலம் அமுல் செய்தனர்.

அம்மானேஜர் வேறு நகரவாசியாக இருக்கலாம். மானேஜர் பதவியை வெற்றிகரமாக வகித்தவர், மற்றும் உயர்ந்த பதவிகளை ஏற்கும்படி அழைக்கப்படலாம். நகர சிப்பந்திகளை மானேஜர் தகுதி பார்த்து நியமிப்பார். இதன் மூலம் நகரவேலை சிறப்பாக நடக்க வழியுண்டு. குறைந்த செலவில் உயர்ந்த முறையில் மக்கள் தேவைகளைப் பூர்த்தி செய்ய தனிப்பட்ட வர்த்தக நிலையங்கள் இருப்பது போலவே, நகராண்மைக் கழகமும் மக்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்யவே இருக்கின்றன என்கிற எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டுதான் மானேஜர் முறை அமைக்கப்பட்டது. ஆகையால் ஒரு மானேஜர், நிர்வாக டைரக்டர்கள் கொண்ட

தனிப்பட்ட வர்த்தக நிலையம் போலவே, நகர ஆட்சியை அமைக்க மக்கள் விரும்புவது இயல்புதான்.

தேசீய நிர்வாகத்திற்குத் தேவையான அளவு நகர நிர்வாகத்திற்கு, அரசியல் தேவையில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. அரசியல் மூலம்தான் பரிகாரம் காணலாம் என்னும் அளவுக்கு சிக்கலான பிரச்னைகள் நகர நிர்வாகத்தில் எழுவதுமில்லை. உதாரணமாக நகரங்களுக்கு அயல் தேச உறவுகள் இல்லை. பணப்பெருக்கம், அல்லது பொருளாதார மந்தம் போன்று, மத்திய சர்க்காரால்தான் தீர்க்க முடியும் என்கிற கஷ்டமான விவகாரங்களும் நகர நிர்வாகத்தில் குறுக்கிடுவதில்லை. மானேஜர் முறையைப் பற்றிச் சிறுபான்மையினர் குறை கூறுகின்றனர். ஏனெனில் கவுன்ஸிலர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவதால் சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்வம் கிடைப்பதில்லை. கவுன்ஸிலில் விகிதாசார பிரதிநிதித்வம் அளிப்பதன் மூலம் மக்களிடையே உள்ள அபிப்பிராய பேதத்திற்கு மதிப்பளிக்க வேண்டிய அவசியத்தை பல நகரங்கள் ஒப்புக்கொள்கின்றன. இந்த முறைப்படி 5-ல் 2 பங்கு ஓட்டுகள் கிடைத்தால் அந்தக் கட்சிக்கு 5-ல் 2 பங்கு ஸ்தானங்கள் கிடைக்க வேண்டும். ஆனால் இந்த முறையை தேசீயத் தேர்தலில் அனுஷ்டித்தால் உதிரிக் கட்சிகள் ஏற்பட ஊக்கமளித்து அதன் மூலம் இரு கட்சி முறைக்கும் பங்க மேற்படும். இந்த ஆட்சேபத்தினால் விகிதாசார ஓட்டு முறை குறைந்த அளவுக்குத்தான் பயன்படுத்தப் படுகிறது.

நகரங்களைவிட நகர ஆட்சிகள் விரைவாகவும் விரிவாகவும் முன்னேறியிருக்கின்றன. ஏனெனில் சில நூதன வசதிகளின்றி மக்கள் வாழ விரும்புவதில்லை. நகரங்கள் பிரம்மாண்டமாய்ப் பெருகி வருவதாலும், ஜன நெருக்கம் அதிகரித்து வருவதாலும் ஜார்ஜ் வாஷிங்டன் காலத்தில் தேவைப்படாத போக்குவரத்து, சுகாதார வசதிகள் அவசியமாகிவிட்டன. பொதுநல வேலைகள் பொது மராமத்து வேலைகள், தீயணைப்பு வசதிகள், பள்ளிகள் நூல் நிலையங்கள் போலீஸ் படைகள், இவைகளுக்கான செலவுகள் நகரங்களின் வரிவிதிக்கும் திறமைக் கொப்ப வளர்ந்துவிட்டன.

வருமானத்திற்கான வழி, ஸ்தாவர சொத்துக்களுக்கு வரி, விற்பனைவரி, வர்த்தகத்திற்கு விதிக்கப்படும் நேரடியான வரிகள் முதலியவற்றை நகரத்தில் தாங்க முடியாத அளவு விதித்தால், அதைச் செலுத்த முடியாமல் வர்த்தகம் நகராட்சிக் கப்பால் சென்று பெருகும்.

நகர வருமானத்தை மிஞ்சிய செலவு செய்ய வேண்டி வந்தால் அனேக நகரங்கள் அரசாங்க உதவியை நம்பியே வாழவேண்டி வந்து விடுகிறது. நகரங்கள் பெரிதும் மத்ய அரசாங்கத்தின் உதவியையே நம்பி இருக்கின்றன. ஏனெனில் ராஜ்யங்கள் விவசாய ஓட்டுப் பலத்தால் இயங்குகின்றன. மேலும் ராஜ்ய சர்க்கார்கள், பணக்காரன், ஏழை என்கிற ஏற்றத்தாழ்வைக் குறைக்கப் பாடுபடுவதுடன் நகர மக்களிடம் வரி வசூலித்து விவசாயப் பகுதிகளைச் செழிக்கச் செய்கின்றன.

1953-ல் நியூயார்க்கில் ராஜ்ய சர்க்கார், நகரத்திற்கு எவ்வளவு பண உதவி அளிக்கவேண்டும் என்பது பற்றி மேயருக்கும், கவர்னருக்கும், தகராறு ஏற்பட்டது. அந்த ராஜ்யம் தனது வருவாயில் 55 சதத்தை ஸ்தல ஆட்சியினருக்கு உதவி செய்ய அளித்ததாகக் கூறப்பட்டது. நியூயார்க் நகரத்திற்கு அதன் வரவு செலவுத் திட்டத்தில் 15 சத விகிதத்தை அந்த ராஜ்யம் அளித்தது. இதுபற்றி நகர மேயர் கூறிய புகார் என்னவெனில் ராஜ்யத்தின் சட்டங்கள், விதிகள்படி அதன் பணம் அளவுக்கு மிஞ்சி சிறு நகர்களுக்கு அளிக்கப்படுகின்றது என்பதுதான்.

பணக்காரனையும், ஏழையையும், சமமாக்குவதற்காக நகரங்கள் சமஷ்டி உதவியை நாடவில்லை. ஏனெனில் மிகுந்த பணம், பெரிய நகரங்களில்தான் குவிந்திருக்கிறது. நகரங்கள் தங்கள் எல்லைக்குள்ளிருக்கும் பணக்காரர்களுக்கு வரிவிதித்தால் அவர்கள் வெளியேறிவிடுவார்கள். ஆனால் சமஷ்டி ஆட்சியினர் பணக்காரர்களுக்கு அதிக வரி விதிக்கலாம். இப்படி வசூலாகும் பணத்தில் ஒரு பகுதியை நகரங்களுக்குக் கொடுக்கிறார்கள்.

பெருத்த பொருளாதார மந்தம் ஏற்பட்டிருக்கையில் நகர ஆட்சிகள் வாழ வழியின்றி சிதைந்திருக்கையில், அவர்கள்

ராஜ்ய ஆட்சியினரை மாற்றுந் தாயாகவும், சமஷ்டி ஆட்சியை அன்புமிக்க மாமனாகவும் கருதத் தொடங்கினர்.

நகர சிப்பந்திகளில் நுணுக்க ஞானமுள்ள புதிய பகுதியினர் நாணயமும், திறமையும் மிகுந்தவர்களாக முன்னேறியிருப்பினும், அனேக நகரங்களில் போலீஸார் நல்ல பெயரெடுக்கவில்லை. இந்தப் படையினர் அரசியல் காரணங்களுக்காக அரசியல் செல்வாக்கினால் பதவி பெற்றவர்கள். மேலும் தகுதியின் பேரில்' பதவி பெறும் முறை அமுலுக்கு வருமுன் நியமிக்கப்பட்டவர்கள். இவர்களுக்கும், குற்றம் புரிபவர்களுக்கும் நேரடியான தொடர்புண்டு. இவர்கள் துர்த்தர்களுக்கு அளிக்கும் பாதுகாப்புக்கு நல்ல ஊதியம் பெறுகின்றனர். இவர்களுக்கு சம்பளம் குறைவு, இவர்களை 'நல்லவர்கள்' சந்தேகக் கண்களுடன் பார்க்கின்றனர். 1950—லிலும் அமெரிக்க செனடஸ் ஈஸ்டஸ் கிபாவர் தலைமையில் ராஜ்யங்களுக்கு ராஜ்யம் புரியப்படும் குற்றங்களைப்பற்றி விசாரிக்க கமிட்டி நியமிக்கப்பட்டது. போலீஸார் குற்றம் புரிபவர்கள் ஸ்தாபனங்களிடமிருந்து பணம் பெறுகிறார்கள் என்று இந்தக் கமிட்டியினர் செய்த விசாரணை மூலம் வெளியாயிற்று. புலன் விசாரணை சம்பந்தமான நவீன முறைகள் தெரிந்தவர்களே அதிகமாகத் தேவைப் படுவதால் போலீஸாரும் பிற துறையினர் மாதிரி திருந்துவர் என்றும் அவர்கள் சேவையைப் பொதுமக்களும் நல்லெண்ணத்துடன் கவனிப்பார்கள் என்றும் எதிர்பார்க்கலாம்.

நகரங்களில் வசிக்காத 6 கோடி மக்கள் பெரிதும் கவுண்டி ஆட்சியின் கீழ் வாழ்கின்றனர். கவுண்டி ஆட்சி முறை குடியேற்றநாட்டு ஆட்சிக் காலத்திலிருந்து தொன்று தொட்டு வந்தது. கவுண்டியை 10-க்குக் குறைவான அங்கத்தினர்கொண்ட போர்டு ஆட்சி புரிகிறது. இவர்களில் ஒருவர் தலைவராகவும், நீதிபதியாகவும் பணிபுரிவார்.

பத்திரங்கள், சொத்து சம்பந்தமான உயில்கள் திருமணப் பதிவு ரிஜிஸ்டர் பொதுவான தஸ்தாவேஜு, அவசியமான தனிப்பட்டவர்கள் பத்திரங்களை கவுண்டி காரியாலயத்தினர் வைத்திருப்பர். மேலும் கவுண்டி ஆட்சியினர் ஸ்தலத்தில் ரஸ்தா

போடுவர், ராஜ்ய தேசீய தேர்தல்களில், தங்கள் பிராந்திய தேர்தல்களை நடத்துவர். ஜனன மரணப் பதிவுப் புத்தகம் புள்ளி விவரங்கள் அளிப்பர். ராணுவத்திற்கு ஆள் சேர்ப்பர். மேலும் கவுண்டியில் ஷெரிப், கரோனர் முதலிய உத்தியோகங்களும் கோர்ட்டுகள் ஜெயில்களுமுண்டு.

கவுண்டி ஆட்சியின் வேலை ஒவ்வொரு இடத்தில் ஒவ்வொரு மாதிரி இருக்கிறது. உத்தியோகங்களின் பெயர்களும் வெவ்வேறு மாதிரி இருக்கின்றன. நாணயக் குறைவு, லஞ்ச ஊழல் எல்லாம் பலதரமாக நிலவுகின்றன. இந்த ஆட்சிகள் மக்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவை பழைய சம்பிரதாயங்களில் ஊறித்தோய்ந்தவை. நாட்டுப்புற மக்கள் இயல்பாகவே பிற்போக்கானவர்கள். அவர்கள் மூதாதையர் விட்டுப்போன பழக்கங்களை எளிதில் மாற்றிக் கொள்ளுவதில்லை. திறமைக் குறைவும், லஞ்சம் கொடுப்பதும், வாங்குவதும், அவர்களுடைய முன்னோர்களின் பழக்கங்களே.

ரஸ்தாக்கள், பள்ளிகளுக்கான செலவை கவுண்டியிலிருந்து ராஜ்ய அல்லது சமஷ்டி ஆட்சியினர் மீது சுமத்தப் பார்க்கிறார்கள். கவுண்டியில் கொலை நடந்தாலும் ராஜ்ய அதிகாரிகள் புலன் விசாரணை செய்ய வந்து விடுகின்றனர். அதிகாரங்கள் கொஞ்சங் கொஞ்சமாக மத்திய ஆட்சியினரிடம் மாறுவதால் கவுண்டிகளின் பழங்காலப் பணிகள் குறைந்து வருகின்றனர். ஆனால் அதே அதிகாரம் மத்திய ஆட்சிக்கு மாறுவதால், ஜில்லாக்களில் சிறுபகுதிகள் செய்துவந்த வேலைகளை கவுண்டி ஆட்சியினர் மேற்கொள்ள வேண்டி வந்துவிட்டது.

ஒரு பள்ளிக்கூடத்தை நடத்துவதற்காகவே, அநேக ஜில்லாக்கள் அமைக்கப்பட்டன. வரி வசூலிப்பதற்கென சில ஜில்லாக்கள், ரஸ்தாக்கள் நிர்வாகத்திற்கு மட்டும் சிலஜில்லாக்கள், தேர்தல் தினத்தன்று ஓட்டுப் பதிவுக்காக சில ஜில்லாக்கள் அமைக்கப்பட்டுள்ளன. சில ஜில்லாக்கள் ஒரு சிறு நீதிபதியுடன் ஆட்சிக்குட்பட்டிருக்கும் ஜில்லா நிர்வாகத்திற்கான அமைப்புகள் இருந்தால் அவைகள் மிகவும் எளியவைகளாகவே இருக்கும். ஒரே அறையில் நடக்கும் பள்ளிகள் பலவற்றை ஒரே அதிகாரத்திற்குக் கொண்டு வருவதாலும், கெட்டிப்படுத்

தப்பட்ட ரஸ்தாக்களும், மோட்டார்களும், அதிகமானதன் விளைவாக அதிகாரங்கள் கவுண்டி ஆட்சியைச் சார்வதால் ஜில்லா நிர்வாகம் வெறும் ஏட்டுச் சுரைக்காயாகி விட்டது.

நியூ இங்கிலாந்தில் ஆதியில் நகரங்கள்தான் ஸ்தல ஆட்சி அடிப்படைகளாக இருந்தன. நியூ இங்கிலாந்து நகரம் ஒவ்வொன்றும் சுமார் 60 சதுர மைல் விஸ்தீரணமிருக்கும். மழையில்லாக் காலங்களில் குதிரையும் வண்டியும் உள்ள குடியானவன், தனது ஊரிலிருந்து அருகாமையிலுள்ள நீதிஸ்தலத்திற்குப் போய் விட்டு மாலைக்குள் திரும்பிவிட முடியும். நகர ஆட்சியின் அடிப்படை அம்சம் நகரப் பிரஜைகள் கூடி நகர நிர்வாகப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பது. இவர்கள் வரி விதிப்பர், ஒரு ரஸ்தாவை மராமத்து செய்வதா, நந்தவனத்தில் பெஞ்சுகள் அமைப்பதா, என்பன போன்ற பிரச்னைகளை முடிவு செய்வார்கள். ஜனத்தொகை அளவுக்கு மீறிப் பெருகும் வரையில், இந்தச் சுத்த ஜனநாயகம் ஒழுங்காக வேலை செய்கிறது. ஜனத்தொகை பெருகியவுடன் நகருக்குப் பெருநகர் அந்தஸ்தளிக்கும்படி ராஜ்ய அரசாங்கத்தினரைக் கேட்பர்.

நகரைவிட சிறியதான டவுன்ஷிப் 6 சதுர மைல் விஸ்தீரணமுள்ளது. இவைகள் நகரத்திற்கும், கவுண்டிக்கும் தொடர்புக் கயிறு போன்றவை. ரஸ்தாக்கள் கெட்டியாகப் போய் பிரயாணமும் எளிதாகி விட்டதால் டவுன்ஷிப்புகள் கவுண்டிகளுடன் ஒன்றிவிட்டன.

மோட்டார் தோன்றியது பழங்கால சமுதாயங்கள் சிதைவுறக் காரணமாயிருக்கின்றது. முன்பெல்லாம் ஜில்லா, கிராமம் முதலியவற்றில் வசித்தவர்கள் காலால் நடந்தோ குதிரை வண்டியில் ஏறியோ கடைகளுக்கும், ஆலயங்களுக்கும், நண்பர் வீடுகளுக்கும் சென்று வந்தார்கள். தற்சமயம் நகரங்களில் ஒரே பகுதியில் வசிப்பவர்கள் தொலை தூரத்தில் வேலைக்குச் செல்லவோ, நண்பர்களைப் பார்க்கவோ, வெகுதூரம் செல்ல வேண்டியிருக்கிறது, ஏனெனில் இவைகள் திக்குக்கொன்றாய் அமைந்திருக்கின்றன. இந்த மாறுதல் சமுதாயத்தின் அரசியல், சமூக வாழ்வின் வேரையே பாதித்துவிட்டது. இப்பொழுது மக்கள் அரசியலை அறிந்து கொள்ளலாம், கட்சியின் ஸ்தாபனங்

களில் பங்குகொள்ளலாம். ஆனால் முன்னைவிடப் பெரிய பிராந்தியங்களில் பல அன்னியர்களுடன் பழகுவதன் மூலம் பயிற்சி பெற வேண்டியிருக்கிறது.

தங்கள் பழக்க வழக்கங்களையும், ஸ்தாபனங்களையும் திருத்தி யமைத்துக்கொள்ள பல வழிகளில் அமெரிக்க மக்கள் முயற்சித்து வருகின்றனர். பழைய நெருங்கிய உறவு சிதைந்து விட்டதனால் மீண்டும் இது நம் நாடு என உடமையுணர்ச்சி பெற விரும்புகின்றனர். அமெரிக்க அரசாங்கம் தனது பணி களில் பலவற்றை அடிப்படை ஸ்தலத்தில் நடப்பதற்கான முயற்சி செய்து வருகிறது, விவசாய இலாகாவினர் நெருங்கிப் பழகும் உணர்ச்சி பெருக செயற்கை முறைகளைக் கையாண்டு பார்க்கின்றனர். உதாரணமாக பலதரப்பட்டவர்களை ஒன்று சேர்த்து விவசாயப் பயிற்சி யளிக்கின்றனர். பரஸ்பரசிற்றுண்டி வழங்க ஏற்பாடு செய்கின்றனர். பல குடும்பங்களிடையே சினேக உணர்ச்சி ஏற்படுத்த வகை செய்கின்றனர். பல கிராமப் பள்ளிகள் ஒரு நிர்வாகத்தின் கீழ் நடப்பதன் மூலமும், கிராமங் களில் மின்சாரம் வழங்கும் திட்டம் மூலமும், ராஜ்யப் பல்கலைக் கழகங்கள் மூலமும், மோட்டார் உபயோகத்திற்கேற்ற முறை யில் பரஸ்பர நேசபாவம் நிலவச் செய்கிறார்கள்.

இந்தப் புது ஸ்தாபனங்கள் இயல்பாகத் தோன்றாமல் சட்ட மூலம் அமைந்தவையானாலும், அவைகள் அமெரிக்காவுக்கு ஏற்றவையே, தேவையிருக்கும்போது புது ஸ்தாபனங்களை அமெரிக்கர் மகிழ்ச்சியுடன் தோற்றுவிக்கின்றனர். தொழில் நுணுக்க வளர்ச்சியினால் மத்திய அதிகாரம் பலப்படுவதை அமெரிக்கர் அவநம்பிக்கையுடன் நோக்குகின்றனர். அவர்கள் ஆட்சியின் கடமைகள் பரவலாக அமைவதற்கு இடைவிடாது முயற்சிக்கின்றனர். ஏனெனில் வேரில் நீர் ஊற்றி வளர்த்தால் நாட்டின் அரசியல் வளர்ச்சிக்கான உயிர் சத்து பெருகும் என்பதை அவர்கள் அறிந்திருக்கின்றனர். பெரிய ஆட்சி முறையும் சிறிய ஆட்சி முறையும் ஒரே சமயத்தில் நிதானமாக முன்னேறி வருவதை, இந்த மத்திய ஆட்சியைப் பலப்படுத்து வதும் பரவலான ஆட்சி முறையைப் பலப்படுத்துவதும் பாதிக் கின்றன.

# 10. அரசாங்கமும் வர்த்தகமும்

மற்ற ஜனநாயக நாடுகளிலுள்ள மாதிரியே அமெரிக்கப் பொருளாதாரம் பல முறைகளும் கலந்த கதம்பமாகும். பள்ளிப் பாடப் புத்தகங்களில் குறிப்பிடப்பட்ட மாதிரி முதலாளித்துவ முறையின் கீழ் சுதந்திரமாகப் போட்டியிடும் வசதியிருக்கிறது. சில்லறை வியாபாரக் கழகங்கள், உற்பத்தி ஸ்தாபனங்கள், விவசாயிகள், சுதந்திரமாகத் தொழில் புரியும் தனிப்பட்டவர்கள் யாவும் கலந்திருக்கின்றன.

ஏகபோக உரிமை முறையின் கீழ், பெரிய வியாபார ஸ்தலங்கள் இருக்கின்றன. இவைகள் உற்பத்தி செய்யும் சரக்குகளுக்கு விலை திட்டமிட்டுக் கட்டுப்படுத்த தலைமைக் குழு இருக்கிறது. டெலிபோன், வீட்டுக்கு மின்சார சப்ளை செய்யும் ஸ்தாபனங்கள், பொதுஜன வசதி செய்து கொடுப்பதில் ஏகபோக உரிமை பெற்றிருக்கின்றன. லாபம் கருதாமல் பொது நலனுக்குப் பணிபுரியும் ஸ்தாபனங்களும் இருக்கின்றன. இவை சர்ச்சுகள், தனிப்பட்டவர்கள் நடத்தும் சர்வகலாசாலைகள், சங்கங்கள், பொழுதுபோக்கு ஸ்தாபனங்கள், தர்ம ஸ்தாபனங்கள், தொழிலாளர் சங்கங்கள், மக்கள் கொடுக்கும் பண உதவியால் நடக்கின்றன. மேலும், பொதுப் பாடசாலைகள், தபால் நிலையங்கள்போல், சர்க்கார் நடத்தும் ஸ்தாபனங்களும் இருக்கின்றன.

சர்க்காருக்கும். வர்த்தகத்திற்குமுள்ள தொடர்பு சிக்கல் நிறைந்தது. இதற்குக் காரணம் சர்க்கார் வர்த்தகம் உள்பட பல்வேறு பொருளாதார முறைகள் இருப்பதும், ஒவ்வொருமுறையின் தன்மையையும், தேவைகளையும் பூர்த்தி செய்ய வேண்டியதும்தான். சர்க்கார் வியாபாரத்திலேயே சமஷ்டி, ராஜ்யம், ஸ்தலம், நிர்வகிக்கும் வர்த்தக ஸ்தாபனங்கள் வேறு இருக்கின்றன. சர்க்கார் உதவியை வற்புறுத்திக் கேட்பவர்கள் முதலாளித்துவ வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் தான். இவர்களில் பெரிய வியாபாரிகள், சில்லறை வியாபாரிகள், பாங்கு முதலாளிகள், விவசாய விற்பன்னர்கள் இருக்கின்றனர்.

இவர்கள் யாவரும் சில சமயங்களில் மாறுபட்ட அக்கரையுள்ள வர்களாயிருப்பர். இது தவிர சர்ச்சுகள், கல்லூரிகள், கூட்டுறவு ஸ்தாபனங்கள் முதலியவற்றிற்கும் சர்க்கார் உதவி அளிக்கப்படுகின்றது. இந்த உதவி வரி செலுத்துவதற்கு விதிவிலக்கு அளிப்பதன் மூலம் அளிக்கப்படுகிறது.

அரசியல் சாஸனத்தின் கீழ் சமஷ்டி அரசியல் அமைப்பு நிறுவப்பட்டதின் நோக்கம் ஐரோப்பாவில் ஷுமன் திட்டம் வகுத்ததன் நோக்கமேதான்—சிறு சிறு பகுதிகளில் ஒன்றுக் கொன்று தடுப்பு வரி விதித்து வியாபாரத்தைச் சுருக்கியதற்குப் பதிலாக விரிவான சந்தை ஏற்படுத்தி வர்த்தகம் பெருகச் செய்வதுதான். இந்த நோக்கத்தை, ராஜ்யங்களுக்குள் இருந்த வியாபாரத் தடைகளை நீக்கியதன் மூலம் சமஷ்டி ஆட்சியினர் நிறைவேற்றினர்.

அந்தக் காலத்திலிருந்து அலெக்ஸாண்டர் ஹமில்டனின் மேற்பார்வையில் அரசாங்கம் திருப்திகரமான நிதி நிலைமை ஏற்படுத்தி வியாபாரத்தை வளம்பெறச் செய்தது. சற்று மதிப்பில்லாத யுத்தக் கடன் பத்திரங்களை அரசாங்கம் வாங்கிற்று. ஒரு டாலர் பெறுமானப் பத்திரங்களுக்குச் சில சென்டுகள் கொடுத்து, பின்னர் லாபமடையலாம் என வர்த்தகச் சூதாடிகள் இவைகளை வாங்கி வைத்திருந்தனர். இவைகளில் ராஜ்ய கடன் பத்திரங்களும் இருந்தன. இறக்குமதிக்கு வரி விதிப்பதன் மூலம் சர்க்கார் பணம் சேர்த்து இந்தக் கடன் பத்திரங்களைத் தீர்த்தனர். ஆரம்ப தசையிலிருந்த அமெரிக்காவில் இந்தப் பணம் புது தொழில்கள் ஆரம்பிக்க உதவி புரிந்தது.

இந்த'வரி மூலம் வருமானம் பெருகியதுமின்றி, அயல் நாட்டுச் சரக்குகளின் விலையை உயர்த்தி உள்நாட்டுத் தொழில்களை அயல் நாட்டுப் போட்டியினின்றும் காப்பாற்றிற்று.

தனிப்பட்ட வர்த்தகத்திற்கு சமஷ்டி அரசாங்கம் நேரிடையாகவும், மறைமுகமாகவும் பண உதவியளிக்க ஆரம்பித்தது. மேலும், அரசாங்கம் வாய்க்கால் வெட்டி, தபால் எடுத்துச் செல்லும் ரஸ்தாக்களும், பின்னர் ரயில் பாதைகளும் அமைத்து வியாபாரம் பெருகச் செய்தது. மேற்குப் பகுதியில் அரசாங்கம் வாங்கிய அல்லது யுத்தத்தில் கைப்பற்றிய நிலங்களைச் சொற்ப

விலைக்குக் கொடுத்து வின்ஸ்கான்ஸின் மினஸோடா தேக்குக் காடுகளும் பயிரிடப்படாத 'பிரயரி' நிலங்களும் பல்லாண்டு களாக, சுரங்கங்களாகப் பயன்பட்டு வந்தன. அவைகளை விளைச்சலுக்கான பூமியாகச் செய்ய எவ்வித முயற்சியும் செய் யப்படவில்லை. 20-வது நூற்ருண்டு மத்தி வரையில் கோதுமை, தேக்கு விற்பனை மூலம் வரும் பணக்தைக்கொண்டு அவற்றின் உற்பத்தியின் பொருட்டுச் செலவழித்த தொகையளவுக்காவது ஈடு செய்யவேண்டு மென்றே அவசியமில்லாமலிருந்தது. அந்த உற்பத்திச் செலவை ஈடு செய்ய பண உதவி அளிக்கப்பட்டு வந்தது. சமஷ்டி அரசாங்கம் அமைந்த முதல் நூறு வருஷத் தில் மேற்கத்திப் பகுதிகளில் வரும் பணத்தை தனிப்பட்டோர் வர்த்தகத்திற்குக் கொடுத்து, அது செழிப்பதற்கு வழி செய் தனர்.

வர்த்தகத்தைக் கண்காணிப்பது மிக மெதுவாக வளர்ந்து வந்தது. ஆரம்பத்தில் வர்த்தகத்திற்கு விசேஷமான சமஷ்டி பாதுகாப்பு தேவையில்லாமலிருந்தது. திருட்டுச் சரக்கு கொணர்தல், கள்ள நாணயம் சிருஷ்டி செய்தல், கடல் கொள்ளையடித்தல் போன்ற பழங்காலத் தீமைகளிலிருந்து மாத் திரம் பாதுகாப்பு வேண்டியிருந்தது. போகப் போக புதிய தொழில்கள் தலை தூக்கியதும், உலகமெங்கும் வியாபாரம் பெருகி சிக்கல்கள் நிறைந்ததும், புதிய தீமைகள் தோன்றி போலீஸ் நடவடிக்கைக்கு அவசியம் ஏற்பட்டது.

19-வது நூற்ருண்டின் பிற்பகுதியில் மக்களுக்குக் கவலை யளித்த வியாபார ஊழல் ஏகபோக உரிமைதான். 1861—68 உள்நாட்டுச் சண்டைக்குப் பிறகு வியாபாரம் பெருகி ஏகபோக உரிமை தலை காட்டியது. மக்கள் மனத்தைப் பெரிதும் உறுத் திற்று. அமெரிக்க மக்கள் இந்தச் சந்தர்ப்பத்தில் வர்த்தகத் தின் ஆரம்ப தசையில் தானிருந்தனர். புதிய மேற்கத்தி ராஜ் யங்களில் ஒவ்வொரு குடும்பமும் தினசரி வாழ்க்கையில் பெரி தும் சுதந்திரமாகவே இருந்தது. ஆனால் விளைந்த கோது மையை விற்று மற்ற சாமான்கள் வாங்கவேண்டிய தருணம் வந்தபொழுது விவசாயத் தொழிலில் ஆரம்பத் தசையிலிருந்த வர்கள், ஏகபோக கொள்முதல்காரர்கள், ஏகபோக ரயில்

கம்பெனிகள், ஏகபோக விற்பனையாளர்கள் பிடியிலகப்பட்டுக் கொண்டனர். இந்த நிலைமை அவர்களுக்குப் பெரிதும் ஆத்திரத்தை யளித்தது. இந்தக் காலத்திலிருந்துதான், அமெரிக்க மக்களிடையே ஏகபோக வியாபாரத்திற்கு எதிர்ப்பு உணர்ச்சி தோன்றியது.

1890-ம் ஆண்டு தொடக்கத்தில், தெற்கத்தி, மேற்கத்தி குடியானவர்கள் கொண்ட பாப்புலிஸ்டு கட்சி யமைக்கப்பட்டது. இதன் நோக்கம் ஏகபோக வியாபாரத்தை எதிர்ப்பது. இந்தக் கட்சி ரயில்கள், தந்தி, டெலிபோன் யாவற்றையும் தேசிய மய மாக்கவேண்டும் என்று கோரிற்று. இந்தக் கட்சியினர் தபால் ஆபீஸ் சேமிப்பு ஸ்தாபனத்தை அமைக்கவேண்டுமென்றும், கோரிற்று. பண விஷயத்தில் பாங்குகளின் ஏகபோகத்தைத் தகர்க்க இவர்கள் நோட்டுகள் அச்சடிக்க வேண்டும்; அல்லது வெள்ளியை மக்களே நாணயமாக்கிக் கொள்ள உரிமையளிக்க வேண்டுமென்றும் வாதாடினர். நோட்டு மாதிரியே, இந்த நாணயப் பதிப்பு உரிமையும் பண வீக்கத்தை விளைவித்தது, ஏனெனில் ஒரு டாலருக்குக் குறைவான பெறுமானமுள்ள வெள்ளியை நாணயமாகப் பதித்தால் அது ஒரு டாலர் மதிப் புள்ளதாகிவிடும். வில்லியம் ஜே. பிரயான் தலைமையில் ஜன நாயகக் கட்சி வெள்ளியை சுதந்திரமாக நாணயமாக்குவதை ஆதரித்து பாப்புலிஸ்டுகள் கொள்கையை ஆதரித்தது. ஆனால், பிரயான் தேர்தலில் தோற்றுப் போனார்.

பாப்புலிஸ்ட் கட்சியினர் கிளர்ச்சியினால் பொது மக்க ளிடையே ஏற்பட்ட ஆத்திரத்தின் விளைவாக ஏகபோக வியா பாரத்தை எதிர்த்து தேசீய அடிப்படையில், ஏதாவது செய் தாகவேண்டும் எனும் உணர்வை இரு பெரிய கட்சியினரிடை யேயும் ஏற்படுத்தியது, இதன் பயனாகத்தான் ஷெர்மனின் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டம் உருப்பெற்றது. ஷெர்மன் சட்டப்படி ராஜ்யங்களுக்குள்ள பரஸ்பர வியாபாரத்தையும், அயல் நாட்டு வியாபாரத்தையும் பாதிக்கும் முறையில் வியாபார ஸ்தா பனங்கள் கூட்டுச் சேருவது அல்லது சூழ்ச்சி செய்வது சட்ட விரோதமாகும்.

இந்தச் சட்டம் இயற்றப்படுமுன் சாதாரணச் சட்டத்தின் மூலம் ராஜ்யங்கள் ஏகபோக போக்கைத் தவிர்க்க முயன்றன. வியாபார ஸ்தாபனங்கள் பெருகி நாடெங்கும் வியாபிக்கத் தொடங்கியதும், இந்த முயற்சிகள் அவ்வளவாகப் பயன்படவில்லை. சாமான்யச் சட்டத்தின் விளக்கம் அல்லது அரசியலமைப்பில் திருத்தம்போல் ஷெர்மன் சட்டமும் பொதுப்படையான முறையில் வகுக்கப்பட்டது. அதை எந்தெந்தச் சந்தர்ப்பத்தில் பிரயோகிக்கலாம் என கோர்ட்டு தீர்ப்புகள் திட்டம் செய்தன. இந்தத் தீர்ப்புகள் உறுதிப்படுத்தும் வகையில் புதிய சட்டங்களும் இயற்றப்பட்டன. ஆகையால் நாளாவட்டத்தில் அமெரிக்கக்கம்பெனிகள் ஏகபோக எதிர்ப்புச் சட்டம், சாமான்ய சட்டம் போல் சந்தர்ப்பத்திற்கேற்றபடி பிரயோகப்படுத்தும் தன்மை வாய்ந்ததாகப் போய்விட்டது. புதுப் புது ரூபம் எடுத்துக்கொள்ளும் தன்மை வாய்ந்த தீமையைக் கட்டுப்படுத்தச் சட்டம் இம்மாதிரி அமைந்திருப்பது பயனுள்ள தாகும்.

கம்பெனி ஏகபோக எதிர்ப்புச் சட்ட அமுலின் வெற்றி தோல்விகள், பெரிய அளவில் வியாபாரக் கட்டுப் பாட்டினுல் ஏற்படும் நன்மை தீமைகள் விளைவாக, ஐரோப்பாவில் இத் தீமைகளை அடக்குவதற்குக் கையாளப்படும் முறைக்கும், அமெரிக்கா கையாளும் முறைக்கும் திட்டமான மாறுபாடு இருக்கிறது. அமெரிக்க சுதந்திரத்திற்கு ஷெர்மன் சட்டம் ஒரு அஸ்திவாரக் கல் என்று அமெரிக்க மக்கள் ஜனநாயகக் கட்சியினராயினும் குடியரசுக் கட்சியினராயினும் மதிப்பு வகிக்கின்றனர். அதை மீறியவர்கள் சட்டத்தை நேரிடையாக மீறவில்லை. அதற்குத்தங்கள் இஷ்டப்படி வியாக்யானம் செய்வதன் மூலமே மீறியிருக்கின்றனர். இந்த மதிப்பளிப்பதில் சூது வாது இருப்பதாகக் கருதினுலும் அமெரிக்க மக்களின் சிந்தனையில் அழியாத இடம் பெற்றிருக்கும். சுதந்திரமான வியாபாரப் போட்டிக்கு அவர்கள் ஆழ்ந்த மரியாதை செலுத்துகின்றனர்.

அமெரிக்க வர்த்தகர்கள் எவ்வளவுதான் கொள்கைகளிலிருந்து புரண்டாலும் இவ்விஷயத்தில் அமெரிக்கர் சிந்தனைக்கும், மற்ற சுதந்திர மக்கள் சிந்தனைக்கும் விசேஷ வித்தியாசம் இருக்கிறது. வியாபார ஸ்தாபனங்கள் நன்னோக்கின்றி ஒன்று

கூடி இயங்குவதும், ஏகபோக வியாபாரமும், அதர்மமானது; பொருளாதார தற்கொலைக் கொப்பானது என்று அமெரிக்கர் நம்புகிறார்கள். ஏகபோக வியாபார எதிர்ப்புச் சட்சிம் எவ்வளவு தான் குறைபாடுள்ளதாயிருந்தாலும், அது சுயேச்சை மனிதரின் சுதந்தரக் கொடியாயிருந்து அமெரிக்க முன்னேற்றத்திற்குப் பெரிதும் காரணமாயிருந்திருக்கிறது.

போட்டியின் மூலம் தொழில் திறனை அபிவிருத்தி செய்யும் நோக்குடன் ஐரோப்பிய, எ.ஃகு, நிலக்கரிக் குழுவின் சாஸனத்தில், வியாபார ஏகபோகத்தை எதிர்க்கும், விதியிருப்பது சரியான வழியில் முன்னேறுவதற்குகந்தது என அமெரிக்க மக்கள் கருதுகின்றனர். தவறுகளால் ஏற்படும் அனுபவத்தின் மூலமும் சோதனைகள் செய்து பார்ப்பதன் மூலமும், ஒரு உண்மையை அமெரிக்க மக்கள் அறிந்துகொண்டிருக்கின்றனர். முதலாளித்வ முறையின் மூலம் உற்பத்தி பெருகி, பணமும் நிரம்பக்கிடைக்குமானால் அந்த முறையில் கார்ல்மார்க்ஸ்கூறிய குறைபாடுகளைத் தவிர்க்கலாம் என அறிந்து கொண்டு விட்டனர். ஆனால், இந்த உணர்வு பயன் அளிக்க சர்க்கார் உதவி மூலம் ஏகபோக வியாபாரம் எனும் களைகளை அடிக்கடி களைந்து கொண்டிருக்க வேண்டும்.

சாமான்கள் வாங்குபவர்களை, மோசடிக்குள்ளாகாமல் காப்பதற்கே சமஷ்டி, ராஜ்ய சர்க்கார்கள் சாமான்யக் கண்காணிப்பு முறைகளைக் கையாள்கின்றனர். குடியானவர்கள் எளிய வாழ்க்கை நடத்திய முந்திய நாட்களில் தெருக் கடைகளிலே தான் தங்களுக்கு வேண்டியவைகளை வாங்கினார்கள். அந்தக் கடைக்காரர்களும், மக்களுக்கு அருகாமையில் தொழில் நடத்தி வந்ததால் நாணயமாக நடந்துகொள்வதே லாபகரமானது என உணர்ந்து நடந்து கொண்டனர். ஆனால், வியாபாரம் நாடெங்கும் பெருகி முன்பின் தெரியாத சரக்குகள் விற்பனைக்கு வந்ததும் ஜனங்கள் திகைத்துப் போயினர். இதைப் பயன்படுத்திக் கொண்டு வர்த்தகர்களும் மோசடி செய்து கொள்ளை லாபம் பெற்றனர்.

இந்த நிலை ஏற்பட்டதனால் வாசனைத் திரவியங்களிலும் உணவுப் பொருள்களிலும், விஷம் கலப்பதையும் மோசடியான

விளம்பரங்களையும் தவிர்ப்பதற்கான சட்டங்கள் நிறைவேற்றப் பட்டன. டப்பாக்களில் அடைக்கப்பட்ட உணவு, மருந்துகளில் என்னென்ன சேர்க்கப்பட்டிருக்கின்றன என்றும் உள்ளிருக்கும் சாமானின் எடை என்னவென்றும் அறிவிக்க வேண்டும் எனச் சட்டம் நிறைவேற்றப்பட்டது.

அரசியல் நோக்கிலிருந்து பார்த்தால் மோசடியைத் தவிர்ப் பதற்கான சட்டங்கள் சிறப்பான சாதனைகளாகும். ஏனெனில் சாமான்கள் வாங்குபவர்கள், நலனே பிரதானம், அவர்கள் அர சியல் சக்தியைப் பிரயோகம் செய்து கூட்ட மியற்றுவதைத் தூண்டும்படியான அரசியல் சக்தியுள்ள ஸ்தாபனம் எதுவும் இல்லாதவர்கள், உற்பத்தியாளர்கள் ஸ்தாபன ரீதியில் பலம் வாய்ந்தவர்கள், நாட்டுத் தலைநகர்களிலும் அவர்கள் சார்பாக வாதிக்கப் பலம் வாய்ந்த பிரதிநிதிகளோ, குழுவினரோ இருக் கின்றனர். சில சமயம் ஒரு தொழில் பிரமுகர்கள் கலப்படச் சரக்குகள், சுத்தமான சரக்குகளின் வியாபாரத்தை, பாதிக்கா மலிருப்பதற்காக பலமான பாதுகாப்பு அவசியம் என நினைக்க லாம். இம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் அதற்கான சட்டமியற்ற இவர்கள் பாடுபடுவார்கள். ஆனால், அதே சமயங்களில் குறிப் பிட்ட தொழில் பிரமுகர்கள் எதிர்த்தும், பத்திரிகைகளிலும், சஞ்சிகை மூலமும் மக்கள் கிளர்ச்சி செய்து இம்மாதிரி பாது காப்புச் சட்டங்கள் இயற்றப்படுவதும் உண்டு.

ஜனாதிபதி பிராங்லின் ரூஸ்வெல்ட் பதவிக்கு வந்த ஆரம்ப காலத்தில் நடந்த பெரிய போராட்டங்களில், பங்கு மார்க்கெட் டில் நாணயம் நிலவுவதற்காக நடந்ததே சிறப்பு வாய்ந்தது. 1933-ம் வருஷத்தில் பங்குகள் பற்றிய சட்டமும், 1934-ம் வரு ஷத்திய பங்குகள் நாணயமாற்று சம்பந்தமான சட்டமும், பங்கு கள் விற்கும் கம்பெனிகள் தங்கள் ஸ்தாபனங்களின் உண்மை நிலையை வெளிப்படுத்த வேண்டும் எனக் கட்டுப்படுத்தின. அப்படி வெளியிடா விட்டால், அதனால் ஏற்படும் நஷ்டங் களுக்கு அந்தக் கம்பெனிகளே பொறுப்பாளிகள். நீதி மார்க் கெட்டைப் பாதித்த மற்றொரு புதுப் பொருளாதாரச் சட்டம், 1935-ம் வருஷத்தில் இயற்றப்பட்டது. பொதுஜன வசதிகள் அளிக்கும் கம்பெனிகள், பல ஏற்பட்டு ஒவ்வொன்றும் தனக்குக்

கீழுள்ள கம்பெனிகளின் பங்குகளுக்கு, உடமையாய் இருப்பதை இந்தச் சட்டம் தடுத்தது. இம்மாதிரி பல கம்பெனிகளை அடுக்கடுக்காக அமைப்பதன் நோக்கம் வருமானத்தை மறைப்பதாகும். இதன் விளைவாக கம்பெனிகளில் பங்கு எடுத்தவர்களுக்கு எவ்வித லாபமும் கிட்டுவதில்லை.

பொய் விளம்பரம், பங்கு மார்க்கெட்டில் தகடுதத்தம், லாபத்தை மறைப்பதற்காகப் பல கம்பெனிகள் அமைத்தல் மூலம் கொள்ளை லாபம் பெற்றுவந்த கம்பெனிகள் மேற்கூறப்பட்ட கம்பெனிகளைக் கடுமையாக எதிர்த்தன. இந்தச் சட்டங்களை எதிர்த்துக் கையெழுத்துகள் வாங்க எல்மர்டேனில்ஸ்டன் எனும் ஒரு பையனுக்கு 3 செண்ட் கொடுத்ததாக, அவனே சாட்சியம் கூறினான். இந்தச் சட்டத்திற்கு விரோதமாக இறந்தவர்கள் பெயர்களில்கூட ஏராளமான தந்திகள் அனுப்பப் பட்டனவாம். இப்படி மோசடியான வகைகளில் எதிர்ப்பு திரட்டப்படுகிறது என்பது ருசுவானதால், சட்டம் எளிதில் நிறைவேறிற்று. இந்தச் சட்டத்தின் நற்பயன் பண மார்க்கெட்டில் மக்கள் நம்பிக்கை கொண்டனர். பண மந்தத்தால் பாதிக்கப்பட்டவர்களின் அபயக் குரலே, பாதுகாப்புச் சட்டம் நிறைவேற்றப் பேருதவியாய் இருந்தது.

அரசாங்கத்திற்கும், வர்த்தகத் துறைக்கும் மற்றொரு தொடர்பு; தொழில் நுணுக்க யோசனைகளை அனேகமாக இலவசமாக அளிப்பது. விவசாய ஆராய்ச்சி, கல்வி போதனை வசதி இரண்டும் ஆதியில் சமஷ்டி ஆட்சியினரே அளித்து வந்தனர். இப்பொழுது சமஷ்டி அரசாங்கம் விஞ்ஞான ஆராய்ச்சி, புள்ளி விவரத் தகவல்கள், சீதோஷ்ண நிலை அறிவிப்பு, உள் நாட்டிலும், வெளி நாடுகளிலும் மார்க்கட் நிலவரம் முதலியனவற்றையும் வழங்குகின்றது. அரசியலமைப்பு ஷரத்துப்படி, அரசாங்கம் வியாபாரத் தனி உரிமை இலக்கியப் பதிப்புரிமைகளையும் பாதுகாக்கின்றது.

ஜனாதிபதி ஹெர்பர்ட் ஹூவர் காலத்தில் புனரமைப்பு நிதி கார்ப்பரேஷன் நிறுவப்பட்டது. பங்கு மதிப்பு வீழ்ச்சியால் மூடப்படும் நிலையிலுள்ள கம்பெனிகளுக்கு இந்தக் கார்ப்பரேஷன் கடன்கொடுத்து உதவியது. இந்தக் கார்ப்பரேஷன்

இரண்டாவது மகாயுத்தக்காலத்தில், உலோக ரிசர்வ் ஏஜன்ஸி, ரப்பர் ரிஸர்வ் ஏஜென்ஸி, பாதுகாப்பு சப்ளை கார்ப்பரேஷன் எனப் பலவகைகளில் அனேகலட்சம் டாலர்களை கடன் கொடுத்தும், செலவு செய்தும், பணி புரிந்தது. மேலும் 193‑-ல் நிறுவப்பட்ட ஏற்றுமதி, இறக்குமதி பாங்க், அயல் தேச வர்க்கத்தின் விருத்தி செய்யப் பணம் கடன் கொடுக்கிறது. சமஷ்டி குடியிருப்பு நிர்வாகம் எனும் ஸ்தாபனம் லேவாதேவிக் காரர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதன் மூலம் வீட்டை அடமானம் வைத்துக் கடன் வாங்குபவர்கள் செலுத்த வேண்டிய வட்டியைக் குறைத்தது. கிராமாந்திர மின்சார நிர்வாகம் அமைத்ததன் மூலம் கிராமந்திரங்களுக்கு மின்சார வசதியளிப்பதற்குக் குறைந்த வட்டியில் கடன் கொடுத்து உதவியது.

சமஷ்டி அரசாங்கம் உலகத்திலேயே பெரிய லேவாதேவி ஸ்தாபனம் மட்டுமல்ல ; வேலையில்லாதார். முதியோர், யுத்த வீரர் யாவருக்கும் பாதுகாப்பளிக்கும் இன்ஷ்யூரன்ஸ் ஸ்தாபனமும், குடித்தனங்களுக்குக் கடன் கொடுப்பது, சிறு வியாபாரம் நடத்துவது, விவசாயம் செய்வது ஆகியவற்றிற்கு உதவும் ஸ்தாபனமும் ஆகும்.

சர்க்காரே தொழில் நடத்துவதற்கு எல்லை என்ன எந்தத் துறைகளில் தனிப்பட்டோர் வர்த்தகம் நடத்லாம் என்கிற பிரச்சனை அமெரிக்கர் அரசியல் வாழ்வில் அடிக்கடி எழுகிறது. நீர் வீழ்ச்சி மின்சார உற்பத்தி மாதிரி தனிப்பட்டோர் வர்த்தகமே. சிறப்பாக நடத்தக்கூடிய துறைகளை அரசாங்கம் மேற்கொள்ளலாகாது எனக் குடியரசுக்கட்சியினர் வாதிக்கின்றனர். ஆனால் ஜனநாயகக் கட்சியினர் டென்னசி, கொலம்பிய நீர்வீழ்ச்சி மின்சார உற்பத்தி ஸ்தாபனங்களில் செய்த மாதிரி பரீட்சை செய்து பார்க்கின்றனர். இம்மாதிரி நிலையங்களில் சில சமயம் நேரடியாகவும், அல்லது தனிப்பட்டோர் ஸ்தாபனங்கள் வசூலிக்க வேண்டிய கட்டணம் நிர்ணயம் செய்வதன் மூலம் மறைமுகமாகவும் இவர்கள் போட்டி யிடுகின்றனர்.

ஆனால், ஜனநாயகக் கட்சியினரும், குடியரசுக் கட்சியினரும் சோஷலிஸத்தை நடைமுறைக் கொள்கையாக

ஏற்கவில்லை. பொது ஸ்தாபனமாக நடத்த பலத்த காரணங்களிலிருந்தால் ஒழிய இரு கட்சியினரும் எந்தத் தொழிலையும் சர்க்கார் மேற்கொண்டு நடத்தவேண்டும் என விரும்பவில்லை. ஒரு தொழிலை அரசாங்கம் நடத்துவதா அல்லது தனிப்பட்டோர் நடத்துவதா என்பதை முடிவு செய்ய மூன்று முக்கிய அம்சங்களை ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

1. வெள்ளக் கட்டுப்பாடு அல்லது சீதோஷ்ண நிலை அறிவிப்பு போன்ற உதவியை பொது மக்கள் விரும்பி, இந்த உதவிக்கான செலவை பொது மக்களிடமிருந்து வசூலிக்க உகந்த வழி இல்லாமலிருந்தால் இந்தத் துறையில் அரசாங்கம் பொறுப்பேற்றது.

2. பொதுப் பள்ளிக் கூட வசதி அல்லது முதியோர் இன்ஷ்யூரன்ஸ் முதலியவற்றை பொது மக்கள் விரும்பி இந்த உதவியை தனிப்பட்டோரைவிட அரசாங்கம் குறைந்த செலவில் அளிக்க முடியுமானால் அந்தப் பணியை அரசாங்கம் மேற்கொள்ளும்.

3. தபால் அல்லது டெலிபோன் வசதிபோல் தனிப்பட்டோர் பிரத்தியேகமாக நடத்தும் ஸ்தாபனம் திருப்திகரமாக வேலை செய்யாவிட்டால் இதைச் சர்க்காரே ஏற்று நடத்தலாம் எனப் பொது மக்களே கோருவார்கள். பார்சல், தபால் வசதியை சர்க்கார் அளிக்க முன்வந்தால் காரணம் அதை நடத்தி வந்த கம்பெனிகள் மீது பொது ஜன அதிருப்தி ஏற்பட்டது தான். அநேக தண்ணீர் சப்ளை ஸ்தாபனங்களையும், சில மின்சார சப்ளை ஸ்தாபனங்களையும் முனிசிபல் நிர்வாகம் மேற்கொண்டு நடத்துகிறது. தங்கள் தொழில்மீது பொது மக்கள் அதிருப்தி அடைந்து, சர்க்கார் அதை மேற்கொள்ளுவதைத் தவிர்ப்பதற்காக டெலியோன் கம்பெனிகள் தங்கள் சேவை மற்றெல்லாருடையதையும் விட மேலானது என அடிக்கடி விளம்பரம் செய்கிறார்கள். ரயில் பாதை, டெலிபோன், தந்தி, ரேடியோ,விமானப் பிரயாணம் யாவும் சர்க்கார் கட்டுப்பாட்டுக்குட்பட்டு தனிப்பட்டோர் ஏகபோகமாகவோ, அல்லதுகிட்டத் தட்ட ஏகபோகமாகவோ நடப்பதையே அமெரிக்க மக்கள் பெரி

தும் விரும்புகின்றனர். தனிப்பட்ட வியாபாரிகள் அகம்பாவம் கொள்வதையோ, இவைகளை மேற்பார்வை பார்க்கும் ஸ்தாபனங்களில் ஊழல் புகாமலோ தவிர்க்க இவைகளை சர்க்கார் மேற்கொள்ளலாம் என்கிற பயம் உதவியாயிருக்கிறது.

இந்தச் சிக்கல் நிறைந்த வர்த்தகத் துறையில் சர்க்கார் நிர்வாகத்திற்கும், தனிப்பட்டோர் நிர்வாகத்திற்கும் உள்ள வித்தியாசங்கள் அமெரிக்கச் சுபாவத்தின் பிறப்பியல்புகளாகத் திகழ்கின்றன. சமஷ்டி, ராஜ்யம், ஸ்தல ஆட்சி வரவுசெலவுத் திட்டங்களும், பாதுகாப்புத் துறை திட்டமும், முக்கியமாக வியாபார முறை சம்பந்தப்பட்டதாகவே இருக்கின்றன. பெரிய விஷயங்களிலும் அமரிக்கா சாமான்ய மக்கள் அறிவுக்கேற்ற நடுத்தர வழியையே பின்பற்றுகின்றனர். வர்த்தகச் சுதந்திரத்தை அவர்கள் ஆதரிக்கின்றனர். நடுத்தர வழியை விட்டு விட்டு பாஸிஸ்டு முறையை ஆதரிப்பதா, கம்யூனிஸ்ட் முறையை ஆதரிப்பதா? என அமெரிக்கர் வாதிப்பதில்லை. எம்மாதிரி நடுநிலைமை வழியை மேற்கொள்ளுவது என்பதைப் பற்றியே அவர்கள் வாதம் செய்வார்கள்.

## 11. தனிப்பட்டோர் உரிமை

சுதந்திர பிரகடனத்தில் கீழ்க்காணும் வாசகங்கள் இடம் பெற்றிருக்கின்றன.

மனித வர்க்கத்தைப் படைத்த பரம்பொருள் அவர்களுக்குப் பராதீனம் செய்ய முடியாத சில உரிமைகளை அளித்திருக்கிறன். உயிர் வாழ்வது, சுதந்திரம், இன்ப வாழ்வை நாடுவது அவைகளில் சிறப்பானவை. இந்த உரிமைகளைப் பெறுவதற்கே மனிதர்களிடையே அரசாங்கங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

1946-ல் ஜனாதிபதி ட்ரூமன் உரிமைகளைப் பற்றி ஆராய்ந்து அவைகளைப் பெறுவதற்குச் சிறந்த வழிகள் யாவை என்பதைத் திட்டம் செய்யும்படி ஒரு பிரஜா உரிமைக் கமிட்டி நியமித்தார். அந்தக் கமிட்டி குறிப்பிட்ட 4 வகை உரிமைகள் பின்வருமாறு :

1. தனிப்பட்டவர் உயிருக்குப் பாதுகாப்பு.

2. பிரஜா உரிமையும், அதனாலான நலன்களும்.

3. மனச்சாட்சிப்படி பேசவும் நடந்து கொள்ளவும் உரிமை.

4. சம சந்தர்ப்பம் பெற உரிமை.

உரிமைகளை வேறு விதமாகவும் வகுக்கலாம். சர்க்காருக்கு எதிராகப் பிரஜையைப் பாதுகாப்பது; ஒரு பிரஜையை மற்ற பிரஜைகளிடமிருந்து காப்பது; வேலையில்லாத் திண்டாட்டத்திலிருந்து வைசூரி வரையிலுள்ள நோய்கள் வராமல் மக்களைக் காப்பது முதலியவற்றைக் கூறலாம்.

இம்மாதிரி பாகுபாடுகள் அரசியல், அரசாங்கம் முதலியவற்றைச் சர்ச்சை செய்ய உதவியாயிருக்கும். ஏனென்னில் உயிர் சுதந்திரம், இன்பம் நாடுதல் ஆகிய உரிமைகளைப் பாதிக்கும் மூவகைப் பகைவர்களை வெவ்வேறு விதத்தில் சர்க்கார் சமாளிக்கிறது. பல்வேறு அரசியல் அம்ச அடிப்படையில் சர்க்கார் இந்தத் தீமைகளைச் சமாளிக்கின்றனர்.

சமஷ்டி அல்லது ராஜ்ய அல்லது ஸ்தல ஆட்சியினர் பறிக்காமலிருக்க அரசியலமைப்பில் பாதுகாப்புக்கள் அளிக்கப்பட்டு கோர்ட்டுகள் இவைகளை உறுதி செய்கின்றன. சட்ட விரோதமாகச் சிறைபடுத்தப்பட்டவனை விடுதலை செய்யும்படி கோர்ட்டுகள் உத்தரவிடலாம். அரசாங்கம் எப்பொழுதும் கோர்ட்டுத் தீர்ப்புகளை மீறுவதில்லை.

ஒரு பிரஜைக்கு மற்ற ஒரு பிரஜை தீங்கிழைப்பதன் மூலம் அவருடைய உரிமை பாதிக்கப்பட்டால் அது சாமான்ய சட்டப்படியோ அல்லது புதிதாகச் சட்டசபைஇயற்றும் சட்டப்படியோ குற்றமாகும். சர்ச்சுகளோ அறநெறிக் குழுவினரோ தவறு என்று கருதும் பல ஆபாசமான செயல்கள் இன்றும் சட்ட விரோதம் என்று நிர்ணயிக்கப்படவில்லை. மதம் அல்லது சாதிக் காரணமாக ஏற்றத் தாழ்வு காண்பிப்பது மேற்குறிப்பிட்ட பகுதியில் அடங்கும். இம்மாதிரி ஏற்றத் தாழ்வுகள் தண்டனைக்குள்ளாக்கப்பட வேண்டுமா என்பது பற்றி அரசியல் வாதப் பிரதிவாதம் கடுமையாக நடக்கிறது.

சமுதாயத்தில் ஒருவன் தேசத்தின் ஒரு பிரஜை என்கிற அடிப்படையில் பொதுவான தீமைகளுக்கு எதிராக பாதுகாப்பு எதிர்பார்க்க உரிமை உண்டு. உதாரணமாக படையெடுத்து வரும் வெடி விமானங்கள் மட்டுமின்றி, கொள்ளை நோய், தீ, வெள்ளம் முதலியன பாதிக்காமல், பிரஜைகள் பாதுகாக்கப்பட வேண்டும். இங்கிலாந்து காமன்லாபடி ஒரு பிரஜை பட்டினியால் சாகாமல் தவிர்க்க அரசாங்கம் இலவச உதவியளிக்க வேண்டும். இந்த உதவி கோரும் உரிமையின் எல்லை என்ன என்பது பற்றிப் பிற்போக்காளர்களுக்கும், தாராள நோக்குள்ளவர்களுக்கும் வாதப் பிரதிவாதம் நடந்து வருகிறது. இது பற்றி குடியரசுக் கட்சியினருக்கும் ஜனநாயகக் கட்சியினருக்கும் அபிப்பிராய பேதமிருக்கிறது. இவ்விரு கட்சிகளுக்குள்ளேயே இவ்விஷயத்தில் கருத்து வேற்றுமை யிருக்கிறது.

அமெரிக்க மக்கள் புரட்சியில் வெற்றி பெற்றுப் புதிதாகப் பூரண சுதந்திரம் பெற்றதும், அநீதி அடக்கு முறைக்குட்படாமல் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளும் உரிமை பெறுவதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்தனர். மற்ற உரிமைகள் பழக்கத்தின் மூலமும், 'காமன்லா' மூலமும், பாதுகாக்கப்பட்டிருந்ததனுல், அவைகளுக்காகப் போராட வேண்டிய அவசியமோ, அவசரமோ இல்லை.

அமெரிக்கப் பிரஜைகளுக்கும், அமெரிக்க அரசாங்கத்திற்குமுள்ள தினசரித் தொடர்பில் சட்டப்படிக்கு உரிமைகள்உண்டு என்பது ஆட்சேபணையின்றி ஒப்புக் கொள்ளப்படுகிறது. இந்த உரிமைகள், குறிப்பட்ட சந்தர்ப்பங்களில் உண்டா இல்லையா என்று சந்தேகம் ஏற்பட்டால் கோர்ட்டுகள் தீர்ப்பளித்து சந்தேகத்தை நீக்குகின்றன.

உதாரணமாக 1957-ல் பிரதம நீதிஸ்தலம் துன்புறுத்தி ஒப்புதல் வாக்குமூலம் வாங்குவது அரசியலமைப்பின், 15, 14-வது திருத்தங்களுக்கு முரணானது எனத் தீர்ப்புக் கூறியது. இந்தச் சீர்திருத்தங்களின்படி யாரையும் சட்டத்தின் மூலமல்லாமல், உயிரை வாங்கவோ, சுதந்திரத்தையோ, சொத்தைப் பறிக்கவோ சர்க்காருக்கு உரிமையில்லை.

செய்ததாக சந்தேகிக்கப்பட்டவனை, பலாத்காரம் செய்து அவனிடம் ஒப்புதல் வாக்குமூலம் வாங்கியதின்மூலம் ஒரு போலீஸ் அதிகாரி சமஷ்டி சட்டத்தை மீறியதாகத் தீர்ப்புக் கூறப்பட்டது. இதன் மூலம் ஒரு பழைய உரிமைக்கு புதுப் பொருள் கூறப்பட்டது.

எந்த ராஜ்யமும், எந்த பிரஜைக்கும் சட்டங்களின் பாதுகாப்பை மறுக்கலாகாது, என 14-வது திருத்தம் விதிக்கிறது. கொலைக் குற்றம் சாட்டப்பட்ட ஒருவன் சிறையிலடைக்கப்பட்டான். சிறை விதிப்படி அந்தச் சிறை அதிகாரி ஒருவன். கைதியின் அப்பீல் விண்ணப்பத்தை ராஜ்ய பிரதம நீதிஸ்தலத்திற்கு அனுப்ப மறுத்தான். இந்தக் குற்றம் சாட்டப்பட்டவனுக்கு சட்டத்தின் சமமான பாதுகாப்பை அளிக்க ராஜ்யம் மறுத்தது என்று பிரதம நீதிஸ்தலம் கூறி, அவனை ஒன்று முறையான விசாரணைக்குக் கொண்டு வரவேண்டும் அல்லது விடுதலை செய்ய வேண்டும் எனத் தீர்ப்பளித்தது.

4-வது திருத்தம் யாருடைய வீடும் அகாரணமான சோதனைகளுக்குக்குட்படுத்தலாகாது என்று உத்தரவாதமளிக்கிறது. எந்தச் சோதனை அகாரணமானது என்பதைத் கோர்ட்டுகளே முடிவு கட்டவேண்டும், ஒரு வழக்கில் மயக்க மருந்துகள் விற்பவன், சில மருந்துகளை ஒரு நண்பன் அறையில் ஒளித்து வைத்திருந்ததாகப் போலீஸார் சந்தேகித்தனர். ஆனால், இது அரசியலமைப்பு உரிமைக்கு மாறானது எனப் பிரதம நீதிஸ்தலம் தீர்ப்பளித்தது. சந்தேகத்துக் கிடமானவன், எவ்வளவு குற்றம் செய்தவனாயிருந்தாலும், அவனைச் சட்டத்திற்கு மாறான வகையில் பிடிக்க, போலீசாருக்குச் சட்டம் இடமளிக்காது. அப்படி இடமளிக்குமானால், நிரபராதிகளின் உரிமைகள் பறிபோய்விடும்.

சீரான விசாரணை கோரும் உரிமைக் கோர்ட்டுகள் அடிக்கடி வியாக்யானம் கூறவேண்டி யிருக்கிறது. ஏனெனில் சட்டத்தைப் புது வகைகளில் மீறுவதையும், மக்கள் மனத்தை வருத்தும் பழைய சட்ட மீறுதல்களையும் கோர்ட்டுகள் களைந்தெறிய வேண்டியிருக்கிறது.

பிளாரிடா ராஜ்யத்தில் இரண்டு நீக்ரோக்கள் ஒரு பெண்ணைப் பலவந்தமாகக் கற்பழித்தாகக் குற்றம் சாட்டப்பட்டு ஜூரிகள் உதவியுடன் விசாரிக்கப்பட்டு தண்டிக்கப்பட்டனர். அந்த ஜூரியில் வெள்ளையர்கள் மட்டுமே மேலும் இடம் பெற்று விசாரிக்கவேண்டும் என்று உத்தரவிடப்பட்டிருந்தது. ராஜ்ய கோர்ட்டு இந்தத் தீர்ப்பை ஊர்ஜிதம் செய்தது. ஆனால், பிரதம நீதிஸ்தலத்தினர் ஏக மனதாகத் தண்டனையை ரத்து செய்தனர். இதற்குக் காரணம் ஜூரிகள் யாவரும் வெள்ளையராயிருந்தது சட்ட விரோதம் என்பதுதான். இந்த விசாரணையின் மற்றொரு அம்சம் குற்றவாளிகள் தங்கள் குற்றத்தை ஒப்புக்கொண்டனர் எனச் சர்க்கார் வாதிக்காவிட்டாலும், அவர்கள் ஒப்புக்கொண்டதாகப் பத்திரிகைகள் செய்திகளை வெளியிட்டன பிரதம நீதிபதிகளில் இருவர் இம்மாதிரி விசாரணைகளில் பத்திரிகைகள் குறுக்கிடுவது விசாரணை நேர்மையைப் பாதித்தது என்று அபிப்பிராயம் கூறினர்.

ஜூரியினர் விசாரித்துத் தீர்ப்புக் கூறுமுன் ஒரு பிரதிவாதியைப் பற்றி பத்திரிகைகள் ஆராய்ச்சி செய்யலாகாது என்று கோரும் உரிமை பிரிட்டனில் உள்ளதுபோல் அமெரிக்காவில் உருப் பெறவில்லை. பிளாரிடா நீக்ரோக்கள் வழக்கு மூலம் இந்த உரிமை அமெரிக்காவில் இடம் பெறத் தொடங்கியது.

அரசியலமைப்பின் ஐந்தாவது திருத்தத்தின்படி ஒரு சாட்சி, தான் கூறும் பதிலின் விளைவாகச் சர்க்கார் வழக்குக்குள்ளாவான் எனத் தோன்றினால், அவன் அக்கேள்விக்குப் பதில் கூற மறுத்து விடலாம். அரசாங்கத்தைப் பலாத்காரமாக கவிழ்க்கச் சதி செய்தனர் என்று கம்யூனிஸ்ட் கட்சியின் பிரபல தலைவர்கள் தண்டிக்கப்பட்டனர். இவர்கள் தண்டனை பெற்ற 1940-ம் வருஷ 'ஸ்மித்' சட்டம் செல்லுபடியாகாது எனப் பிரதம நீதிஸ்தலம் தீர்ப்புக்கூற மறுத்துவிட்டது. காங்கிரஸ் விசாரணைக் கமிட்டிமுன். சாட்சியம் கூற வர வழைக்கப் பட்டவனை, கம்யூனிஸ்ட் கட்சியுடன், தொடர்புள்ளவனா என்று கேட்டால் அவன் அதற்குப் பதில் கூற மறுக்கலாம். ஏனெனில் கம்யூனிஸ்ட் கிளர்ச்சி சட்ட விரோதமானதாகையால் இந்தச் சாட்சி கம்யூனிஸ்ட் தொடர்பு உள்ளவன் என ஒப்புக்கொண்டால்

தண்டனைக்குள்ளாவான். மேலும் ஒரு கட்சியை ஏதாவது ஒரு விஷயத்தைப் பற்றி தகவல் கூறும்படி கேட்டால் பதில் கூற மறுக்கலாம். ஏனெனில் அந்தத் தகவல் சாமான்ய விஷயமானாலும் அதை வெளியிடுவதால், சர்க்கார் வழக்குத் தொடரக்கூடிய வேறு விஷயம் வெளியாகலாம்.

5-வது திருத்தத்தின் உதவியால் ஒரு சாட்சி கம்யூனிஸ்ட் சதிக்குற்றம் சாட்டப்படுவதிலிருந்து தப்பலாம். ஆனால், இந்த நிலைக்கு வந்தவன் தனது பதவியைக் காப்பாற்றிக் கொள்ள முடியாது. ஏனெனில் அவனுடைய முதலாளி இம்மாதிரி சந்தேகம் ஏற்பட்டவனைத் தன் கீழ்ப் பதவியில் நீடித்து வைத்துக் கொள்ள விரும்ப மாட்டார்.

முதல் திருத்தத்தில் உத்திரவாதம் செய்யப்பட்ட சமய சுதந்திரத்திற்கு இன்னமும் தெளிவான விளக்கம் தேவை. மதப் பிரசாரம் செய்பவர்கள், தெருக் கோடிகளிலோ, பொது நந்தவனங்களிலோ நின்றுகொண்டு பேசும் விசித்திரப் பேர்வழியாயிருக்கலாம். இவர்களின் பேச்சினால் கலவரம் ஏற்படலாம். இப்பேர்ப்பட்டவர்கள் மதப்பிரசார உரிமையை உபயோகிக்கின்றனரா அல்லது கலகாஸ்பதமான செயல் புரிகின்றனரா என்று முடிவு கட்டுவது சங்கடமான காரியம். இதில் போலீஸார் மதப் பிரசாரச் சுதந்திரத்துக்கும், கலகச் செயலுக்கும், வித்தியாசம் கண்டுபிடிக்கவேண்டிய தர்மசங்கடமான நிலையில் இருப்பர். மற்றும் சில பேர் ஏதாவது ஒரு சர்ச்சின் பெயரைச் சொல்லிக்கொண்டு பணமோசடி செய்பவர்களா யிருக்கலாம்.

பத்திரிகைச் சுதந்திரம் அமெரிக்காவில் மிகவும் தாராளமாகப் பயன்படுகின்றது. இதன் கீழ் அரசாங்க அதிகாரிகள் நியாயமாகவும், அநியாயமாகவும் தாக்கப்படுகின்றனர். ஜன நாயகத்திற்குப் பத்திரிகை சுதந்திரம், ஜீவாதாரமான பாதுகாப்பளிப்பதாகக் கருதப்படுகிறது. ஆனால் சட்டப்படி உத்தரவாதம் செய்யப்படும் சுதந்திரத்தின்கீழ் பொருளாதாரச் சுதந்திரத்துடன், நாம் விரும்பும் முறையில் பத்திரிகை நடத்துவது சங்கடமாயிருக்கிறது. பத்திரிகை நுணுக்கம் மிகவும் முன்னேறி யிருப்பதால் பெரிய பத்திரிகைகள், குறைந்த கட்டணம்

பெறும் விளம்பரம் பெறலாம். ஆனல், சிறு பத்திரிகைகள், இதே விகிதத்தில் விளம்பரம் பெற்று உயிர் வாழ முடியாது. இதன் விளைவாக அனேக வகுப்பினர் சார்பாகப் பேச ஒரே பத்திரிகை தான் உயிர் பெற்று நடத்த முடிகிறது. தங்கள் ஸ்தலப் பத்திரிகைகளில் எதிர்க் கட்சியின் கருத்துக்களைப் படித்தறியும் சுதந்திரத்தை அமெரிக்கர் இழந்து விட்டனர்.

பத்திரிகை சுதந்திரம் சம்பந்தமான இந்த முக்கியமான பிரச்சனைக்கு அரசியல் யந்திரத்தால் வழி காண முடியவில்லை. சில சமயம் ஒரு பத்திரிகையின் மீது அதனுடன் போட்டியிடும் பத்திரிகையின் விளம்பரத்தைப் பறித்து விட்டதாக ஏகபோக உரிமை எதிர்ப்புச் சட்டத்தின் கீழ் வழக்குத் தொடரலாம். ஆனல், பத்திரிகைகள் ஏகபோக நிலைக்கு வருவது சட்ட விரோதமான செயல்கள் மூலமல்ல. அது சுதந்திர வியாபாரப் போட்டியின் விளைவேயாகும். இதற்குப் பரிகாரமாக சர்க்கார் சிறு பத்திரிகைகளுக்குப் பண உதவி செய்வது நேரான செயலாகாது. இதற்கு ஏதாவது வழி உண்டு என்ருல் சிறு பத்திரிகைகளுக்குச் சாதாரணமான முறையில் பத்திரிகை தயாரிப்பு நுணுக்கங்கள் சீர் பெறவேண்டும்.

பத்திரிகை சுதந்திரத்தை ஓரளவு இழந்ததிலிருந்து ஒரு படிப்பினை தெரிந்துகொள்ளலாம். அரசியலமைப்பு ஒரு சுதந்திரத்தை உத்தரவாதம் செய்யலாம். ஆனல், இந்தச் சுதந்திரத்தைப் பெற்ற அவருக்குப் பொருளாதார அல்லது சமூக சுதந்திரம் கிட்டும் என்று அரசாங்கம் உத்திரவாதம் கூறமுடியாத நிலையிலிருக்கலாம். ஜாதி வித்தியாசம், மதவித்தியாசத் துறைகளிலும் இம்மாதிரிப் பல சிக்கல்கள் தோன்றுவதை நாம் காணலாம்.

அமெரிக்க மக்கள் பல நாடுகளிலிருந்து வந்தவர்கள். ஐரோப்பாவில் வடமேற்குப் பகுதியிலிருந்து வந்தவர்கள், இன்னும் சக்திவாய்ந்தவர்களா யிருக்கின்றனர். அவர்களிடமே சொத்தில் பெரும்பகுதியும், அரசியல் அதிகாரமும் இருக்கிறது. இவர்களிடமிருந்து மதம், பழக்க வழக்கங்கள், நிறம் முதலிய காரணங்களால், மாறுபட்டவர்கள் தாழ்வாக நடத்தப்படுகின்

றனர். நீக்ரோக்கள், சீனர்கள், ஜப்பானியர், மெக்ஸிகர்கள், அமெரிக்க இந்தியர்கள், ரியோகிராண்ட் பள்ளத்தாக்கில் முதலில் குடியேறிய ஸ்பானிஷ் நாட்டினரின் சந்ததிகளான ஹிஸ்பாஞே அமெரிக்கர்கள் யாவரும் ஏதாவது ஒரு விதத்தில் வித்தியாசம் பாராட்டப்படுகின்றனர். இம்மாதிரியே யூதர்களும்' கத்தோலிக்கர்கள், "ஜிஹோவாவின் சாட்சிகள்" போன்ற சில புரோடெஸ்ட்டண்ட் சமயத்தைச் சேர்ந்தவர்களும் பாரபட்சமாக நடத்தப்படுகின்றனர். அனேகமாகக் கிழக்கு அல்லது தென் ஐரோப்பாவிலிருந்து வந்தவர்கள், தனித்து வாழ்ந்து, தங்கள் பாஷையே பேசிவரும் வரையில் அன்னியர்களாகவே பாவிக்கப் படுவர்.

சிறுபான்மையோரைப் பாதிக்கும் முறையில் நடத்துவதற்குக் காரணம், அவர்களுக்கு வேலை கொடுத்தால், தங்களுக்கு வேலையில்லாமல் போய்விடுமோ என்று பெரும்பான்மையோர் பயப்படுவதுதான். குறிப்பிட்ட ஒரு வகுப்பினருக்கு வேலை கொடுக்கப்படும் என்ருல் அதை வைத்துக்கொண்டு சில மதத்தினர், ஜாதியினர் வேலைகளைப் பற்றிக்கொள்வதனுல் பெரும்பான்மையோர் பீதியடைகின்றனர். 1940-லிருந்து அதிகமாக வேலை கிடைத்துவருவதானுல், நீக்ரோக்களுக்கு எதிராக இருந்த வெறுப்புக்கூடக் குறைந்து வருகிறது.

ஜனுதிபதி ட்ரூமன் நியமித்த பிரஜா உரிமைக் கமிட்டி சிறுபான்மையோருக்கு உள்ளாகும் பல அநீதிகளைப்பற்றிக் குறிப்பிட்டிருந்தது. அநீதிகளை எடுத்துக் கூறி, அவைகளுக்குப் பரிகாரம் சொல்லும்படியே இக்கமிட்டி பணிக்கப்பட்டிருந்தது. இம்மாதிரி அநீதிகளையும் குறிப்பிட்டுவிட்டு, அமெரிக்க வாழ்க்கையில் சிறுபான்மையினரும், சிறப்பாக வாழச் சுதந்திரமும், சந்தர்ப்பமும் இருக்கின்றன என்றும், இந்தச் சூழ்நிலை தலைமுறைக்குத் தலைமுறை விரிவடைந்து வருகிறது என்றும் இந்தக் கமிட்டியினர் கூறியிருக்கின்றனர்.

தனிப்பட்டவர்கள் உயிருக்குப் பத்திரமும் பாதுகாப்பும் பெற உரிமையுண்டு எனும் பகுதியில் மக்களிடையே பலாத்காரத்தினுல் ஏற்படும் மரண விகிதம் குறைந்து வருகிறது என்றும்

கமிட்டியினர் சுட்டிக் காட்டியிருக்கின்றனர். இந்த நூற்றுண்டின் முதல் 10-வருஷத்தில் வருஷம் ஒன்றுக்கு 150 பேருக்கு மேல் பொதுஜன ஆத்திரத்தால் மரணமடைந்தனர். ஆனுல், 1940-க்குப் பிறகு இதே காரணத்தினுல் வருஷத்திற்கு ஆறு பேருக்குக் குறைவாகவே கொலையுண்டனர் என்பது குறிப்பிடத் தக்கது.

சமீபகாலத்தில் ஒரு சிலர் மக்கள் கூட்டத்தினரால் கொல்லப்பட்டது ஒருபுற மிருக்க, அனேக சந்தர்ப்பங்களில் பலர் கொல்லப்படாமல் ஸ்தல அதிகாரிகளால் காக்கப்பட்டனர். பொதுஜன ஆத்திரத்தால் கொலையுண்டவர்கள் பற்றிய, புள்ளி விவரங்களைக் கவனித்து, பதிவு செய்துகொள்ளும் டஸ்கிஜி ஸ்தாபனம் 1946-லிருந்து 7 வருஷங்களில் பொதுமக்களால் கொல்லப்படாமல் 226 பேர் காக்கப்பட்டனர் என்றும் இதில் 200 பேர் நீக்ரோக்கள் என்றும் குறிப்பிட்டிருக்கிறது.

கல்வியினுலும், சுபிட்சம் நிலவுவதாலும் ஷெரிப்கள், போலீஸார் முதலியோரின் திறமையினுலும் பொதுஜன பலாத்காரம் குறைந்து வருகிறது. சமீப காலங்களில் பொதுமக்களை எதிர்த்து நின்ற அநேக ஷெரிப்களை மக்கள் துன்புறுத்தவில்லை.

பொது மக்கள் பிறரைக் கொல்வது, சமஷ்டி சட்டப்படி குற்றமாகும் எனச் சட்ட மியற்றும்படி ஜனுதிபதி ட்ரூமன் காங்கிரஸுக்குச் சிபாரிசு செய்தார். ஆனுல், இதைச் செனட்டில் நிறைவேருமல் செய்து விட்டார் ஒரு வாயாடி.

தனிப்பட்டோர் உயிருக்கு ஆபத்து நேரும்படியான பிற செயல்கள், போலீஸாரின் மிருகத்தனமான செயல்களும், கோர்ட்டார் ஓரவஞ்சனையுமாகும். இம்மாதிரிக் குற்றங்கள் பெருவாரியாகச் சமஷ்டி அரசியலமைப்புக்கு மாருனவை. இவைகளைப் பற்றி அமெரிக்க பிரதம நீதிஸ்தலம் விசாரித்துத் தீர்ப்புக் கூறலாம். கடன்பட்ட ஏழைகளைத் துன்புறுத்தி, அவர்கள் கடன் தீரும் வரையில், அவர்களிடம் கூலி இல்லாமல் வேலை வாங்குவது மற்ருேர் வகைக் குற்றம்.

ஒருவர் எக்குடியில் பிறந்தவராயினும் எல்லா மக்களுக்கும் பிரஜா உரிமை உத்திரவாதம் செய்யப்பட்டிருக்கிறது. ஆனுல்,

ஆசிய மக்களின் குழந்தைகள், அமெரிக்காவில் பிறந்தோரா யினும், அவர்கள் அமெரிக்க பிரஜைகளாக அனுமதிக்கப்படுவ தில்லை. கலிபோர்னியாவிலும், மற்றும் சில மேற்கத்தி ராஜ்யங் களிலும், பிரஜா உரிமைக்கு லாயக்கற்ற அன்னியர்கள் நில உடைமை உரிமையைப் பெற மறுக்கப்படுகின்றனர். மற்றும் சில சமயங்களில் இவர்கள் வயிற்றில் பிறந்தவர்கள் நிலத்தில்வேலை செய்யக்கூட அனுமதிக்கப்படுவதில்லை. சட்டப்படி இம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் சமஷ்டி அரசாங்கம் ஏற்றத்தாழ்வுகளை நீக் கியோ, குடியேறுவது சம்பந்தமான சட்டத்தைத் திருத்தியோ நியாயம் வழங்க அதிகாரம் உண்டு. ஆனால், அரசியல் நிலை யில் மக்கள் மனம் மாறினாலொழிய மாறுதல் எதுவும் செய்வது சாத்தியமில்லை.

பலவிதத் தந்திரங்களால் ஓட்டுரிமை ஒடுக்கப்படுகிறது. இம்மாதிரித் தந்திரங்கள் ஒவ்வொன்றுகச் செல்லுபடியாகாது என்று கோர்ட்டுகள் தீர்ப்பளித்து வருகின்றன. தெற்கே சில பகுதிகளில் பொதுஜன ஆத்திரத்திற்குப் பயந்து நீக்ரோக்கள் ஓட்டுச் செய்யாமல் தடுக்கப்படுகின்றனர். ஆனால், 1952-ம் வருஷ தேர்தல் புள்ளி விவரங்களைப் பார்த்தால் முன்னைவிட அதிக நீக்ரோக்கள் ஓட்டுச் செய்திருப்பதாகத் தெரிகிறது.

1921-ல் 11 தெற்கத்தி ராஜ்யங்களில் ஆள் வரி செலுத்திய வர்களுக்குத்தான் ஓட்டுரிமை உண்டு. இந்த வரியினால் ஏழை களாகிய வெள்ளையர்களும், நீக்ரோக்களும் ஓட்டின்றித் தடை செய்யப்பட்டனர். 1944-ல் ஆள் வரியுள்ள ராஜ்ய மக்களில் 10 சதத்தினர்தான் ஓட்டுச் செய்தனர் என்று கணக்கிடப்பட் டிருக்கிறது. ஓட்டுரிமை பெறச் சொத்து வரி செலுத்தவேண் டும் எனும் யோக்யதாம்சம் 150 ஆண்டுகளுக்கு முன் விதிக்கப் பட்டது. இந்தத் தடையை நீக்க செனட்டில் சட்டம் இயற்ற முடியாமல் வாயாடிகள் தடுத்துவிட்டனர். ஆனால், பல ராஜ் யங்கள் இவைகளை நீக்கி விட்டன.

பிரஜா உரிமையின் மற்றொரு அம்சம் ஆயுதம் தாங்குவது. இந்த உரிமையினால் அபாயம் ஏற்படுமானாலும் சிறுபான்மை யினருக்கு சமத்துவம் உண்டு எனும் லட்சியத்தின் சின்னமாக விளங்குகிறது. அமெரிக்க ராணுவத்தில் முன்பெல்லாம் நீக்

ரோக்கள் தனிப்படையினராகவோ அல்லது போர் சம்பந்த மில்லாத வேலைகள் செய்யும் பகுதியிலோ சேர்த்துக் கொள்ளப் பட்டனர். ராணுவ உத்தியோகஸ்தர்கள் பயிற்சி நிலையத்தில் அனேகமாக நீக்ரோக்கள் சேர்த்துக் கொள்ளப்படுவதில்லை. சமீப காலமாகப் போர்ப் படையில் நிற வித்தியாசம் துரிதமாக நீக்கப்பட வேண்டும் என உத்திரவிடப்பட்டிருக்கிறது.

வெள்ளையர் படையில் நீக்ரோக்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும் எனும் யோசனை வெள்ளை வீரர்களுக்குப் பிடிக்க வில்லை என்பதை 1945-ல் பிரான்ஸில் ஏற்பட்ட அனுபவத்தில் கண்டோம். ஆனால், நீக்ரோக்கள் போர் புரிவதைப் பார்த்த தெற்கத்தியர் உள்ளிட்ட வெள்ளையர் அவர்களுடைய வீரத்தை மதிக்கத் தொடங்கினர். 1958-க்குள் நீக்ரோக்களை இனவித்தி யாசமின்றிச் சேர்த்துக் கொள்வது திருப்திகரமாயிருப்பதால் இந்தத் துறையில் தூண்டுதலின்றி முன்னேற்றம் ஏற்படும் என எதிர் பார்க்கலாம். நிற வித்தியாசம் அறவே ஒழிவது சாத்தியம் என்றே தோன்றுகிறது.

நீக்ரோக்களை தியேட்டர்களிலும், உணவு விடுதிகளிலும், அனுமதிக்கத் தொடங்கினல், இந்த நிற வெறுப்பு மற்றத் துறை களிலும் நீங்கிவிடும். எதிர்பார்த்தபடி கலவரம் நிகழாமல் நீக் ரோக்களை வெள்ளையர்களுடன் ஆலைகளில் சேர்த்தால் அபாயம் ஏற்படாது என்பதை இத்துறையில் பரீட்சை பார்த்ததிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

நீக்ரோக்களை ஒதுக்கிவைப்பதை ஒழித்தால் இனவெறி தானகவே அகன்றுவிடும் எனும் நம்பிக்கை இந்த நோக்கம் ஈடேறுவதற்குப் பாடுபடுபவர்களுக்கு ஊக்க மளிக்கிறது. சட்ட மூலம் நிர்ப்பந்தம் செய்து அகற்றினல் அதை எல்லோரும் தயங் காமல் ஒப்புக்கொள்வார்கள். இல்லையேல் அது தானக அக லாது என சமரஸவாதிகள் கூறுகிருர்கள்.

சர்க்கார் உத்தியோக நியமனங்களிலும் சர்க்கார் தேவை களைப் பூர்த்தி செய்ய உழைத்துவரும் வர்த்தக நிலையங்களிலும் உத்தியோக நியமன விஷயத்தில் யாவருக்கும் சமசந்தர்ப்ப மளிக்க 1941-ல் ஜனதிபதி ரூஸ்வெல்ட் ஒரு கமிட்டி நியமித்

தார். இந்தக் கமிட்டியின் விசாரணைக்கு வந்த மனுக்களில் 5-ல் 4 உத்தியோகம் மறுக்கப்பட்டனர், அல்லது வெள்ளையரைவிடக் குறைவான சம்பளம் பெறச் செய்தனர் என்று நீக்ரோக்கள் புகார் செய்தவை எனக் குறிப்பிட்டிருக்கின்றனர். 8 சதவிகித மனுக்கள் மதவித்தியாசத்தால் எழுந்தவை. அதுவும் பெரிதும் யூதர்கள் சம்பந்தமானவை. சர்க்கார் ஸ்தாபனங்கள், வர்த்தக நிலையங்கள், தொழிலாளர் சங்கங்கள் யாவற்றின் மீதும் சிறு பான்மையினரை அதர்மமாக நடத்தினர் என்று புகார் செய்யப் பட்டது. யுத்தத்தின்போது ரூஸ்வெல்ட் நியமித்த கமிட்டி வேலை செய்த சமயத்தில் உத்தியோகம் பெறச் சமசந்தர்ப்பம் அளிக்கப்படவில்லை எனும் புகார் பெரிதும் குறைந்திருந்தது. இதற்கு முக்கியமான காரணம் யுத்த சேவைக்குப் போதிய ஆட்கள் கிடைக்காததுதான்.

வேலை ஒழுங்காக யாவருக்கும் கிடைக்கும்படியான சட்டங் கள் அநேக ராஜ்யங்களில் இயற்றப்பட்டிருக்கின்றன. இம்மாதிரி சட்டங்கள் இயற்றுவதற்கான சமூகச் சூழ்நிலை உள்ள ராஜ்யங் களில் அதிகமான சமத்துவம் அளிக்க வேண்டும் என்பதற்குச் சாதகமாகப் பொதுஜன அபிப்பிராயம் திரண்டிருக்கிறது. அம் மாதிரி சந்தர்ப்பங்களில் சிறுபான்மையினருக்கு வேலைகொடுக்க வேண்டும் எனும் நிலைக்கு முதலாளிகளை எளிதில் திருப்பலாம். எல்லா ராஜ்யங்களிலும் இந்தச் சமத்துவ நிலை நிலவவேண்டு மென நிர்ப்பந்திக்கச் சமஷ்டி சட்டம் இயற்ற செனட்டில் தடங்கல் இருக்கிறது.

கல்வி இலாகா மற்றும் அரசாங்க உத்தியோகப் பதவிகளில் நீக்ரோக்களையும் வெள்ளையர்களையும் பிரித்து வைப்பதற்குச் சட்டம் அவசியம் என அநேக ராஜ்யங்கள் கருதுகின்றன. வெள்ளையருக்கு அளிக்கப்படும் வேலைகளை நீக்ரோக்களுக்குத் தனித்து அளிக்கும் வரையில் நீக்ரோக்களை ஒதுக்கி வைக்கும் 14-வது திருத்தம் அரசியலமைப்புக்கு மாறானதல்ல என்று 1896-ல் பிரதம நீதிஸ்தலம் தீர்ப்பளித்தது. இந்தத் தீர்ப்புக்கு மாறுபட்ட அபிப்பிராயத்தை நீதிபதி ஹார்லன் தனியாகக் குறிப்பிட்டார்.

பொதுப் பள்ளிக்கூடங்களில் நீக்ரோக்களுக்கும், வெள்ளையருக்கும் சமவசதியோ, சமபயிற்சியோ கிடையாது என்பது உண்மை. நீதிபதி ஹார்லன் கூறிய மாதிரி "நிர்பந்தமாக நீக்ரோக்களை ஒதுக்கிவைத்திருப்பது நமது சகபிரஜைகளில் பலரை அடிமைகள் எனப் பட்டயம் கட்டி இழிவு படுத்துவதாகும். இவ்வளவுக்கும் அவர்கள் சட்டத்தின் கண் நமக்கு சமமானவர்கள். இவர்களுக்குச் சமவசதி அளிக்கப்படுகிறது என்று கூறினால் யாரும் ஏமாந்துவிட மாட்டார்கள்."

1896-ம் வருஷத் தீர்ப்பு சுமார் 40 வருஷங்கள் நீடித்திருந்தது. படிப்படியாக உத்தியோக வசதிகள், சமமாக இல்லை என்பதை எடுத்துக் காட்டி, அவர்களை ஒதுக்கி வைத்திருக்கும் வரையில் சமமாயிருக்க முடியாது எனக் கோர்ட்டுகள் எடுத்து காட்டின. கோர்ட்டுகள் இவ்விஷயத்தில் கண்டிப்பாயிருப்பதனாலும், நீக்ரோக்களுக்கு மட்டும் தனிச் சர்வகலாசாலைகள் அமைப்பதனால் அதிகச் செலவாவதாலும், தெற்குப் பகுதிகளில் குறிப்பாகக் கல்லூரி மாணவர்களிடையே சகிப்புத்தன்மை அதிகரித்து வருவதனாலும், ஒரு சில நீக்ரோ மாணவர்கள் தென் பகுதிக் கல்லூரிகளில் அனுமதிக்கப் படுகின்றனர். இந்த மாறுதலால் பலாத்காரச் செயலோ, அருவருப்பான சம்பவங்களோ நிகழாததால் இந்தச் சீர்திருத்தம் பரவுவதற்கு இடமளிக்கிறது.

அரசாங்கம் தவிர பெரிய பந்தாட்ட நிலையங்கள், நீக்ரோ ஆட்டக்காரர்களைச் சேர்த்துக் கொள்வதால். கருப்பு ஜாதியினரின் அந்தஸ்தே உயர்ந்து வருகிறது, தேசீயக் கொடிக்கு அல்லது அரசியலமைப்புக்குள்ள மதிப்பை அமெரிக்கர் பந்து விளையாட்டிற்கு அளிப்பதால், இதில் ஈடுபட்டவர்கள் யாவரும் நெருங்கிப் பழகுகின்றனர். உலக ஆட்டங்களில் ஆடச் சந்தர்ப்பம் பெறுவது பூரண அமெரிக்கப் பிரஜைக்குள்ள மதிப்பைப் பெறுவதற் கொப்பாகும். புரூக்லின் விளையாட்டில் நீக்ரோக்கள் சேர்ந்திருக்கின்றனர் என்பதற்காகச் சிலர் ஆர்ப்பாட்டம் செய்ததும், ஆர்ப்பாட்டக்காரர்கள் மீது விளையாட்டுக் கழகத்தலைவர் நடவடிக்கை எடுத்துக் கொண்டதும் சமத்வத்தில் எல்லோருக்கும் அக்கறையுண்டு என்பதையே காட்டுகிறது. "இது அமெ

ரிக்க நாடு; விளையாடும் உரிமை எல்லா அமெரிக்கருக்கும் உண்டு'' என ஆட்டக் கழகத் தலைவர் கூறினார்.

எல்லாவிதமான பகைவர்களுக்கும் எதிராகவும் பிரஜை களை அரசாங்கம் பாதுகாக்க வேண்டும். குறிப்பாக வேலையில் லாத் திண்டாட்டம், அறியாமை, வறுமை, நோய் முதலியவற் றால் மக்கள் பீடிக்கப்பட்டால், ஆள்பவர்களான பெரும்பான்மை யினரைவிட சிறுபான்மையினரே அதிகமாகத் தொல்லைப்படு கின்றனர். ஆனால், எல்லோருக்கும் நோய், அல்லது மரணம் சம்பவிப்பது இயல்புதான். பெரும்பான்மையோர் வேலையில் லாமை அல்லது வருமானத் தட்டுப்பாடால் கஷ்டப்படலாம். பெரும்பாலோர் கூலிக்கு வேலை செய்பவர்கள். இவர்களுடைய வாழ்க்கைத்தரம் சீராக இருக்கவேண்டுமானால் போதிய அளவு வருமானத்திற்கான சட்ட பூர்வப் பாதுகாப்புக் கோருகிறார்கள்.

அனேக நூற்றாண்டுகளாகவே தொழிலாளர் நலன்களில் ஐரோப்பாவிலும் அமெரிக்க ஆட்சியினரும் அக்கறை கொண்டு வந்திருக்கின்றனர். முந்திய காலங்களில், அரசாங்கங்கள் மேல் வகுப்பினரை, கலகம் செய்யக்கூடிய தொழிலாள வர்க்கத்தின ரிடமிருந்து காப்பாற்றி வந்தனர். 19-வது நூற்றாண்டில் தொழி லாளர் சங்கங்களைக் கலைப்பது இயல்பாயிருந்தது. மேலும், காமன்லாபடி இவைகள் சதிக் கும்பல்களாகக் கருதப்பட்டன. ஆனால், இன்றோ முதலாளிகள் தங்களிஷ்டப்படி தொழிலாளர் களுக்கு இடர் செய்யாமலும், பலவிதமான விபத்துக்கள் நேரா மலும் சட்டம் பாதுகாப்பளிக்கிறது.

1933-ம் வருஷத்திய தேசீயத் தொழில் புனரமைப்புச் சட் டம் தொழிலாளர்களுக்கு ஸ்தாபனம் அமைக்க உரிமையளித்து தொழிலாளர் சார்பாகப் பேரம் பேச யூனியன்களின் உரிமையை முதலாளிகள் அங்கீகரிக்கும்படி கட்டுப்படுத்தியது. வாக்னர் சட்டமும், டாப்ட் ஹார்ட்லி சட்டமும் தொழிலாளிகள் உரிமை யென்ன என்பதைத் திட்டம் செய்தன. இவைகளில் வாக்னர் சட்டம் தொழிலாளர்களுக்குச் சாதகமாகவும், டாப்ட் ஹார்ட்லி சட்டம் முதலாளிகளுக்கு உதவியாகவும் உள்ளன. இந்தச் சட்டங்களின் பொதுநல நோக்கு என்னவெனில் கோர்ட்டார்

நிர்வகிக்கும்படியான விதிகள் செய்து, நியாயமான முறையில் தொழிலாளர் முதலாளிகளிடையே அமைதி நிலவச் செய்வது தான்.

ஆனால், எது நியாயம் என்று திட்டம் செய்வதில்தான் அரசியல் குறுக்கிடுகிறது. முன்காலத்தில் தொழிலாளர்கள் துன்புறுத்தப்பட்டனர். அவர்கள் தங்கள் ஸ்தாபன உரிமையை ரத்தம் சிந்தி நிலைபெறச் செய்யவேண்டியிருந்தது. அவர்கள் தலைவர்களுக்கும் போராட்டம் நடத்தத் தெரியுமே யொழிய சமரஸம் பேசத் தெரியாது. அந்தச் சந்தர்ப்பத்தில்தான் சட்டம் அவர்களுக்கு உதவி புரிய வந்தது. தொழிலாளர் சங்கங்கள் பலம் பெற்ற உடன், தொழிலாளர்களிடமிருந்த பொதுஜன அனுதாபம் குறையத் தொடங்கிற்று. அரசியல் நிலை மாறு தலால் 1947-ல் காங்கிரசில் குடியரசுக் கட்சியின் செல்வாக்கு உயர்ந்தது. முதலாளிகள் உரிமையைப் பாதுகாக்க டாப்ட் ஹார்ட்லி சட்டம் நிறைவேறிற்று. இதற்கிடையில் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்தவர்களிடையே பிளவு ஏற்பட்டது. அவர் கள் முதலாளிகளுக்கு எதிராகவோ, குடியரசுக் கட்சிக்கு எதி ராகவோ ஒன்றி நின்று போராட முடியாத நிலையிலிருந்தனர். 1952-ம் வருஷத் தேர்தலில் குடியரசுக் கட்சிப் பதவிக்கு வர அவர்கள் உதவி புரிந்தனர். இதிலிருந்து நாம் தெரிந்துக் கொள்ளக்கூடியது யாதெனில், தொழிலாளர் நலன்கள் திட்ட மாகிவிட்டதால், மற்றப் பிரச்னைகளில் அவர்கள் இஷ்டப்படி ஓட்டு செய்யும் நிலையடைந்து விட்டனர் என்பதுதான்.

ஒரு தேசீய சமூகப் பாதுகாப்புத் திட்டம் அமைப்பதில் உலகத்தில் மற்ற நாகரீக நாடுகளைவிட அமெரிக்கா பின் தங் கியே வந்திருக்கிறது. ஆனால், அமெரிக்காவில் பல ராஜ்யங் களில் நீண்ட காலமாக ஏதாவது ஒரு வகையில் சமூகப் பாது காப்புச்சட்டங்கள் இருந்தே வந்திருக்கின்றன. 1935-ல் தேசீயச் சட்டம் நிறைவேறிய பிறகு முதியோர் இன்ஷ்யூரன்ஸ், அதி கரித்திருப்பதுடன் மேலும் பலவகைத் தொழிலாளர்களுக்கு அது விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. மற்றும் வேலை இல்லாதார் இன்ஷ்யூரன்ஸ், அங்கஹீனர்கள், அந்தகர்களுக்கு அரசாங்க உதவி, இறந்தவர் வார்சுகளுக்கு உதவி போன்றவை சமஷ்டி

அரசாங்கங்களிலோ, ராஜ்ய அரசாங்கங்களிலோ, நீடிக்கப்பட்டிருக்கிறது. சமூகப் பாதுகாப்பு, நோய்வாய்ப் பட்டோர், முதியோர் வாழ்க்கைத் தரத்தை உறுதிப் படுத்துவதுடன் வேலையில்லாத் திண்டாட்டம் பெருமளவு நிலவுகையில் பேருதவி புரிகிறது என்பதை யாவரும் ஒப்புக்கொள்கிறார்கள். வர்த்தகத்திற்கும் தொழிலாளர்களுக்கும் அரசாங்கம் நலன் செய்கிறது என்பதை ஒப்புக்கொள்ளுவதால் சமூகப் பாதுகாப்புத் திட்டங்களுக்கு இருகட்சிகளின் ஆதரவு கிடைக்கின்றது.

அமெரிக்கர்கள் தங்கள் அரசாங்கத்தின் பல பகுதிகளிலிருந்து பாதுகாப்பு நாடுவது ஒரு விசித்திரமான அரசியல் வாதப் பிரதிவாதத்திற்குக் காரணமாயிருக்கிறது. ஒரு புதிய சேவைக்கு அடிகோலினால் அது சோஷலிஸ முறை என்றும், அதனால் வரி செலுத்துவோர் பணம் வீணாகிறதென்றும், பொது மக்களுக்குத் தேவையானதைத் தனிப்பட்டோர் ஸ்தாபனங்களே செய்யக் கூடுமென்றும் பிற்போக்காளர்கள் வாதாடுகின்றனர். ஆனால், இதற்கு எதிரிடையாகத் தாராளப் போக்குள்ளவர்கள், பொதுஜனத் தேவையைத் தனிப்பட்டோர் ஸ்தாபனங்கள் பூர்த்தி செய்யவில்லை என்றும் பல்வேறு காரணங்களால் அவர்கள் பூர்த்தி செய்ய மாட்டார்களென்றும், இந்தச் சேவை மூலம் பலவிதக் கஷ்டங்கள், விரயங்கள் ஏற்படாமல் வரிப் பணத்தை மிச்சப் படுத்தலாம் என்றும் பதில் கூறுகின்றனர்.

ஆனால், ஒவ்வொரு சேவைத் துறையிலும் இந்த வாதங்களில் ஏதாவது ஒன்று நியாயமாயிருக்கலாம். ஒவ்வொன்றும் அரசியல் வாதப்பிரதிவாத அடிப்படையில் தற்காலிகமாகமுடிவு செய்யப்படுகின்றது. செய்யப்பட்ட முடிவு தவறு என்று நினைப்பதற்குப் போதிய ருசுக் கிடைத்தால் பழைய முடிவு மாற்றப்படுகிறது. பொதுப்படையாகப் பார்த்தால், அரசாங்க பலத்தால் மட்டுமே தவிர்க்கக்கூடிய அபாயங்களைச் சர்க்கார் சேவைகளை மேற்கொள்ளுவதன் மூலம் சமாளிக்கலாம் எனும், கருத்தே ஆதரவு பெறுகிறது.

ஐக்கிய தேசங்கள் ஸ்தாபனத்தில் அமெரிக்கா அங்கம் பெற்றதன் நோக்கங்களில் ஒன்று அதன் உறுப்பினர்கள் பொது

வாக மனித வர்க்கத்தின் உரிமைகளேயும், சுதந்திரங்களேயும் வளர்ப்பதுதான். ஸ்ரீமதி எலியனுர் ரூஸ்வெல்ட் தலேவராயும், உறுப்பினராயும் இருந்த விசேஷ கமிஷன் மனித வர்க்க உரிமை சாஸனம் ஒன்றைத் தயாரித்தது. சோவியத் யூனியனும், அதன் கையாட்களாயுள்ள நாடுகளும் பலமாய் எதிர்த்ததும் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தின் பொதுக்கூட்டம் இந்த சாஸனத்தை அங்கீகரித்தது.

அமெரிக்க அரசியலமைப்பில் உள்ள உரிமைப் பட்டியலே விட ஐ. நா. உரிமைச் சாஸனம் விரிவானது. ஏனெனில், ஹிட்லரும், சோவியத் நாடுகளும் புதுப்புது அக்கிரமங்களேச் செய்ததால் ஐ. நா. சாஸனம் விஸ்தாரமாக அமைக்கப்பட்டது உதாரணமாக ஒரு அரசாங்கம் ஒரு இனத்தாரையோ, ஒரு மதத்தினரையோ பூண்டில்லாமல் அழிப்பது எனும் பழைய அக்கிரமம் 20-வது நூற்றுண்டு சர்வாதிகாரிகளால் புது உருப் பெற்றுத் தலே காட்டியதால் ஐ. நா. அவ்விஷயத்தில் விசேஷ கவனம் செலுத்தவேண்டி வந்தது.

மனித உரிமை சாஸனம் தவிர, அங்கத்தினர் நாடுகளின் அங்கீகாரத்திற்கு, ஒரு ஒப்பந்தத்தையும் தயார் செய்து அனுப் பும்படி மேற்படி கமிஷன் பணிக்கப்பட்டது. இந்த ஒப்பந்தத்தில் அடக்குமுறை அநீதிகள் நேராமல் பாதுகாப்பளிக்கும் உரிமை கள் தவிர, வேலேயில்லாத் திண்டாட்டம் போன்ற அபாயங்க ளேத் தவிர்க்கும் பாதுகாப்புகளும் சேர்ந்திருக்கவேண்டுமென்று ஆதியில் யோசனே கூறப்பட்டது. அமெரிக்கர்கள் இருவித மான ஒப்பந்தங்கள் வேண்டுமென்று கோரினுர்கள். ஒன்று அமெரிக்க உரிமை சாஸனத்தில் உள்ளவைகள் சம்பந்தமானது. இவைகளேக் கோர்ட் மூலம் அமுல் செய்யக் கோரலாம். மற்ருென்று வறுமை, நோய் முதலியவற்றை எதிர்க்கச் சர்க்கார் உதவியை நாடுவது. பிந்திய கஷ்டங்களே அறவே ஒழித்துவிடு வது முடியாத காரியம். இந்த நலன்களேக் கோர்ட் மூலமும் பெற முடியாது. இம்மாதிரித் தீமைகளிலிருந்து மக்களே அர சாங்கம் காப்பாற்றியிருக்கிறதா, இல்லேயா என்பதுபற்றி மக்கள் தீர்ப்புக் கூறி, அரசியல் அதிகாரத்திலிருப்பவர்களே வாழ்த் தியோ, வீழ்த்தியோதான் இவ்வுரிமைகளே நிலேநாட்டலாம்.

இந்த இரு ஒப்பந்தங்களில் எதுவும் செனட் அங்கிகாரத்திற்கு அனுப்பப்படப் போவதில்லை. இதற்கு முக்கியமான ஆட்சேபம் அமெரிக்க சட்டங்களில் இடம் பெற்றிருக்கும் எல்லா உரிமைகளையும், மற்ற ஐ. நா. நாடுகள் ஒப்பந்தத்தில் சேர்த்துக்கொள்ள இணங்கவில்லை என்பதுதான். பிறநாடுகளுடன் செய்துகொள்ளும் ஒப்பந்தத்தினால் அரசியலமைப்பு அளிக்கும் உரிமைகள் பாதிக்கப்படவில்லை என்பதற்குச் சட்ட பூர்வ ஆதாரம் இருக்கிறது என்று கூறினாலும் இந்த வாதம் ஏக மனதாக ஒப்புக் கொள்ளப்படவில்லை. விளைவுகளைக் கவனியாமல் முடிவு செய்ய செனட் சபை தயாராயில்லை.

ஐ. நா. வில் அமெரிக்கா மேற்கொள்ளும் கட்சி யாதெனில் "எல்லா நாடுகளிலும் தனிப்பட்டோர் உரிமைகளைப் பாதுகாக்க வழி செய்யவேண்டும் என்பதை நாம் ஆதரிக்கிறோம். ஆனால், எங்கும் இது பூரணமாக நிறைவேறும் என நாம் எதிர்பார்க்கவில்லை" என்பதுதான். நமது நாட்டிலேயோ நமது சட்டங்களிலும், பழக்கங்களிலும் எவ்வளவோ குறைபாடுகளிருப்பதைக் காண்கிறோம்; அப்படி இருக்கின்றன என்று ஒப்புக்கொள்கிறோம் ஆனால் நீதியையும், சமத்துவத்தையும், நோக்கி முன்னேறுவதையும் காண்கிறோம். நாம் எவ்வளவு வேகமாகத் தனிப்பட்டோர் உரிமைகளை உணருகிறோமோ, அவ்வளவு வேகமாக நடைமுறையில் அனுஷ்டிக்கப்படும் வகையில் வேலை செய்து வருகிறோம். இது தவிர சிறப்பான வழி எதுவும் நமக்குத் தென்படவில்லை.

## 12. அமெரிக்கர் ஆட்சித் தத்துவம்

அமெரிக்க அரசியலமைப்பு ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் குடியரசு ஆட்சியை உத்தரவாதம் செய்திருக்கிறது. இந்த வாக்கியப் பகுதியைப் பற்றிக் குறிப்பிட பின்னர் சந்தர்ப்பம் எழவில்லை. ஏனெனில் இந்நாட்டில் அரசியல் கொள்கைகள் பற்றி விவாதம் செய்பவர்கள், அரசாங்கம் எவ்விதமான பணிகளை ஏற்கலாம் என்பது பற்றியே சர்ச்சை செய்வார்கள். இங்கு சர்வாதிகாரம் ஏற்படுத்தலாம் எனக் கனவு காண்பவர்கள்

ஸ்தல ஆட்சியில்கூட அதிகாரம் பெற இயலவில்லை. 1840-ல் 'ரோடு தீவு'ராஜ்யத்தில் கலகம் ஏற்பட்டது என்பது உண்மை. எந்தப் பக்கத்தில் நியாயம் இருக்கிறது என்று எண்ணினரோ, அந்தப் பக்கத்திற்கு, அக்கால ஜனாதிபதி ஆதரவளித்தார். 1874-ல் பெண்கள் ஓட்டுரிமைவாதிகள், தங்களுக்கு ஓட்டுரிமையளிக்காத ராஜ்யங்கள் குடியரசு அல்ல என வழக்குத் தொடுத்தார்கள். ஆனால், அவர்கள் முயற்சி பலிக்கவில்லை- குடியரசு ஆட்சி, யாது என்பது அரசியல் சம்பந்தமான பிரச்சினை எனக் கூறி கோர்ட்டுகள் இது விஷயமாகத் தங்கள் கருத்தைக் கூற மறுத்து வந்திருக்கின்றன.

1930-ம் ஆண்டு ஆரம்பத்தில் லூயிஷியானாவில் ஹுவே லாங்க் நடத்திய ஆட்சி போன்றது சர்வாதிகாரமா அல்லது சர்வாதிகாரமானால் பிற அமெரிக்கர்கள் தலையிட்டுத் தடுப்பதா என்பதை அமெரிக்கர் அரசியல் வாதப்பரதிவாத மூலமே முடிவு கட்டுவர் என்பதுதான் நாம் அறிந்து கொள்ள வேண்டும் எனத் தீர்மானிக்குமானால், அமெரிக்காவில் குடியரசு ஆட்சி முறை கவிழ்ந்துவிட்டது எனக் கருதலாம். அப்படிக் கருதினால் பிரதம நீதிஸ்தலம் ஆட்சேபிக்காது.

அமெரிக்கர்கள் குடியரசு ஆட்சியையே, நிலையாகப் போற்றி வருகின்றனர். சில சமயம் பொறுப்பற்ற அரசியல் வாதிகள் இந்த முறையின் உண்மை மகத்துவத்துக்கு மாறாக நடந்து கொள்வதுமுண்டு. ஒவ்வொரு ராஜ்யமும் அதன் அரசியல் அமைப்புப்படியே ஆட்சி நடக்கிறது. இந்த அமைப்பை பலாத்காரப் புரட்சியின்றி மக்கள் தங்களிஷ்டப்படி மாற்றிக் கொள்ளலாம். ராஜ்ய சட்டங்களை மக்களுக்குப் பொறுப்பு வகிக்கும் பிரதிநிதிகள் நிறைவேற்றுகின்றனர். பாதுகாப்புத் தேவையென்று மக்கள் நினைக்கும் தனிப்பட்டோர் உரிமைகளைப் பாதுகாக்கச் சட்டமிருக்கிறது. இந்தப் பாதுகாப்பை அமுலுக்குக் கொண்டுவருவதில் ஊழலிருக்கலாம். சர்க்கார் அடக்குமுறைக்கெதிராகப் பாதுகாப்பளிக்கும்படி பிரஜைகள் கோர்ட்டுகளின் உதவியை நாடலாம். இவைகள்தான் குடியரசு ஆட்சி முறையில் அமெரிக்கர் காணும் லட்சணங்கள். ஏட்டி லிருக்கிறபடி

ஆட்சி நடத்தாமலிருக்கலாம். ஆனால், பாதுகாப்பு ஏட்டிலிருக்கிறது என்பது உண்மை.

20-வது நூற்றுண்டில், ஹிட்லர், சோவியத் நாடு முதலியவற்றின் போக்கைப் பார்த்தவர்கள் சுதந்திர மக்கள் பெருமையுடன் போற்றும், சுதந்திர வாசகங்கள் மதிப்பு மிக்கவையாகப் பிரகாசித்து நிற்பதைப் பார்த்திருப்பார்கள். சோவியத் ருஷ்யா போன்ற நாட்டில் தனது சுதந்திரத்தைக் காப்பாற்றுவதற்குத் தேவையான அமெரிக்கர் கருதும் உத்திரவாதங்கள் யாவும் இருக்கலாம். ஆனால், ஆட்சி நடத்துபவர்களை எதிர்த்து ஸ்தாபன ரீதியாகக் கிளர்ச்சி செய்ய உரிமையில்லாவிட்டால், அந்த உத்தரவாதங்கள் உதவாக்கரையாகப் போய்விடும். குடியரசு ஆட்சி முறையின் உறுப்புகள் யாவும் துஷ்பிரயோசனத்திற்குள்ளாகலாம். ஆனால், மக்களுக்கு ஸ்தாபனம் அமைக்கும் உரிமை இருக்குமானால், ஊழலை வேரோடு களைந்துவிட்டு புராதனமான சுதந்திரத்தை நிலைநாட்டிவிடலாம். ஒரு சுதந்திர நாட்டில் ஒரு ஓட்டர் ஓட்டுச் செய்யும்பொழுது அவனைக் கண்காணிக்கலாகாது. மிரட்டலாகாது எனச் சட்டமிருந்து, அந்தச் சட்டத்தின் பொதுவான அம்சத்தை மதித்துநடந்தால் மக்கள் தங்களுக்கிஷ்டமான சட்டசபையையும், ஜனாதிபதியையும் தேர்ந்தெடுத்துத் தங்களுக்குத் தேவையான உரிமைகளைப் பாதுகாக்கும்படி மக்கள் அவர்களைப் பணிக்கலாம்.

பூரண உரிமையுடன் செயல் புரிவதற்கு ஆதாரமான சட்ட வாசகங்கள் இருந்தாலும் மக்கள் தங்களுடைய பல்வேறு மாறுபட்ட அக்கரைகள், அரசியல் தத்துவம் விஷயங்களை மதிப்பிடுவதற்கான கொள்கைகள் முதலியவற்றல் தூண்டப்பட்டே செயல் புரிகின்றனர். அமெரிக்க மக்களின் அரசியல் தததுவம் சிக்கல் நிறைந்தது. முன்னுக்குப் பின் முரணானது,

அரசாங்கம் பற்றி அமெரிக்கரின் சித்தாந்தம் அரசியல் அடக்குமுறையை, ஆங்கிலேய, அமெரிக்கர் எதிர்த்த வரலாற்றினால் உருவாக்கப்பட்டது. இந்த எதிர்ப்புக்குப் பிரசித்தி பெற்ற சிறப்பான உதாரணம் 1215 ல் ஆங்கிலேயப் பிரபுக்கள் மன்னர் ஜானுடன் நடத்திய போராட்டம்தான். இதன் விளைவா

கத்தான் மாக்ஞ கார்ட்டா என்னும் மகாசாஸனம் கிடைத்தது. இந்தச் சாஸனம் அந்தக் கால நிலப் பிரபுத்வ சட்டங்களை எழுத்து மூலமாக உத்தரவாதம் செய்தது. 'மாக்ஞ கார்ட்டா', கீழ் வகுப்பினரைவிடப் பிரபுக்களின் உரிமைகளையே குறித்தது. ஆனல், மன்னருக்கு எதிராகப் பிரபுக்களை மக்கள் ஆதரித்த காரணம் அந்தக் காலத்தில் அவர்கள் பட்ட சொல்லொணுக் கஷ்டங்களுக்கு மன்னருடைய அளவற்ற செலவும், ஊழல் மிக்க அதிகாரிகளின் அடாச்செயல்களை எதிர்த்து மக்களைப் பாதுகாக்கத் தவறியதும்தான். இம்மாதிரிச் சம்பவம் அமெரிக்கப் புரட்சிக் காலத்தில் நிகழ்ந்தது. அப்பொழுது மக்கள் குடியேற்ற நாட்டு ஆட்சியினரை ஆதரித்து, மன்னருடன் போராடினர் தங்களுடைய கஷ்டத்திற்குச் சட்டத்தை மன்னர் துஷ்பிர யோகம் செய்ததுதான் காரணம் என மக்கள் நினைத்தது மின்றிக் குடியேற்ற நாட்டுச் சட்டசபைகளும், ராஜ்ய அரசாங் கங்களும், மக்களின் சார்பாகப் போரிடும் வீரர்களெனவும் மதித்தனர்.

மாக்ஞ கார்ட்டாவிலிருந்து, தொழிலாளர் சங்கங்களுக்குத் தங்கள் கூலி சம்பந்தமாகப் பேரம் பண்ணும் உரிமை கிடைத்தது வரையில் அமெரிக்கச் சித்தாந்தத்திற்கு அடிப் படையான சமத்துவமும், சுதந்திரமும், குடிசை வாழ் புரட்சி வாதிகளால் சம்பாதிக்கப்படவில்லை. இதற்காகப் பாடுபட்ட வர்கள் ஏதாவது ஒருவிதத்தில் தனி உரிமை பெற்றவர்கள். 1381-ல் வாட் டைலர் கலகம் செய்த மாதிரி ஆரம்பகாலத்தில் பாமர ஆங்கிலேயர் தங்களுக்கு மேம்பட்டவர்களுக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்தார்கள். ஆனல், நிதானம் தவருத, பதட்டப் படாத தலைவர்கள் இல்லாததால் அவர்கள் எதிர்பார்த்த நலன்கள் கிட்டவில்லை. ஜன நாயக சமுதாயத்தை அமைப்ப தற்கான முயற்சி அதிகாரம் செல்வாக்கு முள்ளவர்கள் தங்களை விட அதிகச் செல்வாக்கும் அதிகாரமும் படைத்தவர்களுடன் போராட்டம் நடத்தியதால் வெற்றி பெற்றது. இந்த சரித்திரப் போக்கிலிருந்து பார்த்தால் அமெரிக்கத் தத்துவம் பெரிதும் மத்தியதர வகுப்பினரின் தத்துவமேயாகும். உதாரணமாக ஸ்தாபனரீதியில் அமைந்த தொழிலாளர்கள் தாங்கள் 'பாட்டாளி

மக்கள்' என நினைத்துக்கொள்வதில்லை. அவர்கள் தங்கள் சங்கங்களை ஆதரிக்கிறார்கள். ஆனால், அந்த ஆதரவளிப்பதன்மூலம் இந்த நாட்டில் கம்யூனிஸ்ட் சர்வாதிகாரத்தை அமைக்கலாம் என்று அவர்கள் எண்ணுவதில்லை. மத்தியதர வகுப்பினரின் வாழ்க்கைத்தரத்தை யடைந்து, அதை நீடித்து அனுபவிக்கலாம் என்றும், அமெரிக்க சமூகத்தில் மத்தியதர வகுப்பினருக்குள்ள மதிப்பைப்பெறலாம் என்றும்தான், அவர்கள் தங்கள் சங்கங்களைப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். சக்தி வாய்ந்த மதிப்பு மிக்க உரிமையாளர்களுக்குள் நடந்த நீடித்த போராட்டத்தின் முலமே அமெரிக்க அரசியல் சம்பிரதாயம் உருவாயிற்று. இதற்கு அமெரிககப் புரட்சியே தக்கச் சான்றாகும். மன்னரின் சார்பாகச் செல்வாக்குள்ள ஆங்கில வர்த்தகர்களும் உற்பத்தியாளர்களும் போராடினர். இவர்கள் அமெரிக்க வர்த்தகப்போட்டியை ஒடுக்கும் நோக்கத்துடனேயே மன்னரை ஆதரித்தனர். அவர்களுடைய நலன்கள் முன்னர், பார்லிமெண்ட் ஆதரவால் பலம் பெற்றன.

அமெரிக்கர் சார்பில் அமெரிக்க வர்த்தகர்கள், புகையிலைத் தோட்டக்காரர்கள், நிலச்சுவான்தாரர்கள், மற்றும் பிரிட்டிஷ் வியாபாரத் தடைகளாலும், வரிகளாலும் பாதிக்கப்பட்டதாக எண்ணிய குடியானவர்களும் இருந்தனர். அமெரிக்கர் தங்களுடைய ராஜ்ய பலத்தாலும், ஓரளவு காண்டினண்ட்டல் காங்கிரஸினாலும் கட்டுக் கோப்பாய் இருந்தனர். மன்னரை ஆதரித்த செல்வாக்குள்ள அமெரிக்கர், பின்னர் நாட்டை விட்டு விரட்டப்பட்டனர். நாட்டு மக்களை ஒன்று கூட்டி அதன் சரித்திரத்தை உருவாக்கும் பொறுப்புப் பெற்ற மற்றவர்கள் மத்திய அரசாங்கம் கொடுமையாக நடக்கும் என உறுதியாக நம்பினர். ஆகையால், ஸ்தல ஆட்சிகள் மத்திய அரசாங்கத்தை எதிர்க்கவல்ல சாதனங்கள் என்றும் அவர்கள் நம்பினர். இந்த முறையில் இவர்களுக்கும் முன்னர் இங்கிலாந்தில் மன்னர் ஜானை எதிர்த்த பிரபுக்களுக்கும் ஒருமைப்பாடு இருந்தது.

மத்திய அரசாங்கத்தினரிடமிருந்த இந்த அச்சமும் வெறுப்பும்தான் தாமஸ் ஜெபர்ஸனின் சிஷ்யர்களின் அடிப்

படைக் கொள்கை. ஜெபர்ஸன் கண்ட ஜனநாயகத்தின் சித்தாந்தம் "குறைவாக ஆட்சி புரியும் அரசாங்கமே சாலச் சிறந்தது" என்பதுதான்.

மத்திய அரசாங்கம் மக்களுடைய உரிமைகளை ஒடுக்கு வதை ஸ்தல ஆட்சிகள் எதிர்க்க நேரிட்டாலும் சில தேவைதை களை மத்திய ஆட்சி மட்டுமே பூர்த்தி செய்ய முடியும். புரட் சிக்குப் பின் மத்திய ஆட்சியை எதிர்க்க வேண்டும் என்பதை யும் மறந்துவிட வேண்டிய நிலை நாட்டில் ஏற்பட்டது. வியா பாரத்தின் வீழ்ச்சியும், நாட்டின் பாதுகாப்பின் பலவீன மும், வர்த்தகர்கள், பண முதலாளிகள், அதிகாரத்திலிருப் பவர்கள் முதலியோருக்குத் தெள்ளெனத் தெரிந்தது. இவர் களுக்குத் தலைவர் அலெக்ஸாண்டர் ஹமீல்டன். ஆதரவாள ராகிய சமஷ்டி வாதிகள் இங்கிலாந்தின் மத்திய ஆட்சியைப் பலமாக எதிர்த்தவர்களாயினும், அவசியமான காரணங் களுக்காக அமெரிக்காவில் பலத்த ஆட்சி வேண்டும் என்று வாதித்தனர். வேண்டா வெறுப்பாக ஜெபர்ஸன்கூட இந்த யோசனையை அரசியலமைப்பின் அங்கீகார காலத்தில் ஆதரித்தார்.

இன்று வரையில் அமெரிக்கர் மனம், ஹமீல்டன் கொள் கைக்கும், ஜெபர்ஸன் கொள்கைக்குமாக ஊசலாடிக் கொண்டி ருக்கிறது. இவ்விரு தலைவர்களும், தத்தம் மனதிலுள்ள நோக்கத்திற்கேற்றாற்போல் தங்கள் கொள்கைகளை வகுத்துக் கொண்டனர்.

இம்மாதிரி ஊசலாடலுக்குச் சிறந்த உதாரணமாக 1933-லிருந்து 1953 வரையில் நிலவிய ஜனநாயகக் கட்சியின் கொள் கைகளைக் குறிப்பிடலாம். ரூஸ்வெல்ட்டும், ட்ரூமனும் சமஷ்டி ஆட்சியின் பலத்தையும், வேலையையும் பெருக்கினர். ஜன நாயகக் கட்சியினர் ஜெபர்ஸனினின் வாரிசுகளானாலும், அவரு டைய கொள்கைகளுக்கே இன்னும் மதிப்பு வகித்து வந்தாலும் இவ்விஷயத்தில் ஹமீல்டனின் கொள்கைகளையே பின்பற்றினர். 1786-ல் பெரும் பஞ்சம் நிலவியதுபோல் 1933-லும் மக்கள் பெருத்த வியாபார மந்தத்தால் கஷ்டப்பட்டனர். 1787-ல்

ஹமில்டன் எண்ணிய மாதிரியே ஜனநாயகக் கட்சியினரும், சமஷ்டி ஆட்சி அதிகாரத்தைப் பயன்படுத்துவதனுல், மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியாது என்று எண்ணினர். நிலைமைக்கேற்றவாறு கொள்கைகளை மாற்றிக்கொள்ள வேண்டி யிருந்தது.

ஆட்சிமுறை பற்றி ஹமில்டன், ஜெபர்ஸன் கருத்துக்கள் ஒருபுறமிருக்க அமெரிக்க அரசியல் தத்துவம், ஆட்சியின் தன்மை, நோக்கம் முதலியன பற்றிய சித்தாத்தங்களால் உருவாக்கப்பட்டது. பிரஸ்தாப சர்ச்சை சம்பந்தமாக நான்கு முக்கியக் கொள்கைகள் இருக்கின்றன. அராஜகம், சோஷலிஸம் போன்ற தீவிரக் கொள்கைகள் தவிர, நிதானப் போக்குள்ள இருவித நம்பிக்கைகளின் அடிப்படையில்தான் அமெரிக்கரிடையே வாதப் பிரதிவாதம் நடக்கிறது. இவ்விரண்டு நடுத்தரக் கொள்கைகளில் ஒன்று தனிப்பட்டோர் உரிமை பற்றியது. மற்ருெரு கொள்கைக்கு அமெரிக்கரிடையே திட்டமான பெயர் கிடையாது. மக்கள் சுபிட்சத்தைப் பெருக்க அரசாங்கம் தலையிட வேண்டும் என்பதுதான் அதன் சாராம்சம். இதைத் 'தலையீட்டு'க் கொள்கை என்று குறிப்பிடலாம்.

அரசாங்கத்திற்கும், சோஷலிஸத்திற்கும் அவ்வளவாக அமெரிக்கர் வாழ்வில் செல்வாக்கு இல்லை. அரசாங்கம் ஒரு கொடுங்கோல் மன்னனுகையால் அதை அறவே ஒழித்துக் கட்டவேண்டும் என்பதே அராஜகத்தின் அடிப்படைத் தத்துவம். மற்ருெரு புறம் தனியார்கள் வர்த்தகத்தையும், தொழிலையும், நடத்துவதால் மக்கள் நசுக்கப்படுகின்றனர். கூலிக்கு ஆள் வைத்து நடத்த வேண்டிய பெரிய தொழில்கள் யாவற்றையும் அரசாங்கமே நடத்தவேண்டும் என்பது சோஷலிஸத்தின் அடிப்படை. இந்தக் கொள்கைகள் அமெரிக்கர்களைக் கவரவில்லை. அமெரிக்கரினுல் பெரும்பான்மையோரின் நடுத்தர வழியைப் பின்பற்றுதல் எளிமையாக, ஆனுல் தீவிரக் கொள்கை வளர சாதகமாயில்லை. இன்று ஹமீல்டனுடனும், நாளை ஜெபர்ஸனுடனுமாக ஊசலாடிக் கொண்டிருக்கும் அமெரிக்கரின் நீண்ட கால அனுபவம் விவாதத்தில் நடுத்தரக் கொள்கைகளை

ஆதரித்து நிற்பதே சௌகரியமானது என்று எண்ணத் தூண்டு கிறது. அரசாங்கத்தின் நியாயமான பயன் என்ன என்றும், விவ தத்தில் அடிக்கடி அமெரிக்கர் ஆதரவு பெறுவது ஜெபர்ஸன் கட்சியைக் கிட்டத்தட்ட ஒத்திருக்கும் தனிப் பட்டோர் உரிமை யும், ஹமீல்டன் தலைமையில் முதன் முதல் அமெரிக்க அரசியல் தோன்றிய, "தலையீட்டு"க் கொள்கையும்தான்.

தனிப்பட்டோர் உரிமைக் கொள்கைப்படி அரசாங்கத்தின் தனிப்பெரும் நோக்கம், நாட்டில் அமைதியை நிலைநாட்டி அன்னியர் தாக்காமல் நாட்டைக் காப்பது தான். "அரக்கர் தங்களிஷ்டப்படி நடந்து கொள்ளட்டும்" என்பதுதான் இந்தக் கொள்கையின் சாராம்சம். குற்றம் புரிபவர்கள் தவிர மற்ற மக்களைத் தங்களிஷ்டப்படி நடக்க விட்டு விட்டால் தங்கள் கதி மோட்சத்தைத் தாங்களே தேடிக் கொள்வார்கள் எனும் நம்பிக்கை தான் இந்தக் கொள்கையின் அடிப்படை.

தங்களுடைய தெளிவான புத்தியை உபயோகித்து அவர் கள் ஒத்துழைப்பார்கள், அல்லது போட்டியிடுவார்கள், அல்லது தங்கள் எதிரிகளை எதிர்ப்பார்கள். தோன்றாத் துணை யாயிருக்கும் பரம்பொருள் மக்களை நியாயமான வழியில் அழைத் துச் சென்று சுகதுக்கங்களைச் சமமாகப் பகிர்ந்து கொள்ள உதவுவார் என்பது இந்தக் கொள்கையின் ஜீவநாடி அக்கிரம மாகக் கஷ்டத்துக்குள்ளாக்குபவர்களைப் பொதுஜன தர்ம ஸ்தா பனங்கள் மீட்டுவிடலாம்.

தனிப்பட்டோர் உரிமை நலக் கொள்கைப்படி சமூகத்தின் வருவாயைப் பெருக்கும் ஒரே சாதனமான ஒரு ஆலை, நஷ்டத்தி னுல் வீழ்ந்து விட்டால் அது பொருளாதார அமைப்பின் இயற் கை விளைவு. நாட்டில் பொருளாதார மந்தம் ஏற்பட்டால் அது வும் பொருளாதார அமைப்பின் விளைவுதான். இயற்கையின் போக்கைத் தடுப்பது அசட்டுத்தனமானது; அபாயமானது. இயற்கை விதிகளுக்கு மாருக நடந்தால் கஷ்டம் அதிகரிக்கும் என இவர்கள் அஞ்சுகின்றனர். 1929-ல் நிகழ்ந்த பெரிய வியா பார மந்தத்தின் விளைவாக ஏற்பட்ட மேற்கூறப்பட்ட கருத் துக்கள் பெரிதும் அடிபட்டன.

இதற்கு மாறுபட்ட கொள்கைக்குத் திட்டமான பெயர் கிடையாது. ஏனெனின், எதிர்க் கட்சிக்காரர்கள் தாக்குதல்களுக் குத் தற்காப்புச் செய்து கொள்வதிலேயே அதன் ஆதாரவாளர் கள் ஈடுபட்டிருக்க வேண்டியிருக்கிறது. அரசாங்க உதவி பெறுவது வெட்கக்கேடு என்றே அமெரிக்கர் போதனை பெற்றி ருக்கின்றனர். அம்மாதிரி உதவி பெறுவது இயல்புதான் என்று வாதம் செய்யவும், அவர்கள் தயாராக இல்லை. அரசாங்கம் தங்களுக்கு ஏதாவது செய்யவேண்டும் என நினைக்கும் பொழுது, அதற்கான சட்டம் இயற்றப்பட வேண்டும் என அவர்கள் நம்பினாலும், பிறருக்கு உதவிசெய்வதற்காக வரி செலுத்த வேண்டிவரும் சமயத்தில் இதெல்லாம் அமெரிக்க ருக்கு சம்பிரதாயத்தைப் பாழ்படுத்தும் என்று நம்புகின்றனர்.

அரசாங்கத் 'தலையீட்டு'க் கொள்கையின் சாராம்சம் வருமாறு?—

போலீஸ், ராணுவப் பாதுகாப்புத்தவிர மற்றும் சில தேவை களை அரசாங்கம்தான் பூர்த்தி செய்ய முடியும். வர்த்தகத்தடை களினால் பண மதிப்பு தலைகால் தெரியாமல், ஏற்றத் தாழ்வடை வதிலிருந்து வர்த்தகத்தைக் காப்பாற்றவேண்டுமென வர்த்தகர் கள் கூக்குரலிட்டதனால்தான் அரசியலமைப்பு வகுக்கப் பட்டது மத்திய ஆட்சிக்கு வியாபாரத்தை, பணப் புழக்கத்தை, தபால் முறையை, வியாபார உரிமைகளைக் கட்டுப் படுத்த வும், பொதுநல வசதிகளுக்கு ஏற்பாடு செய்யவும் மத்திய ஆட் சிக்கு அதிகப்படியான அதிகாரம் அளிக்கவேண்டும் எனும் பிரத்தியேக நோக்கம் ஈடேறவே அரசியலமைப்பும் தயார் செய்யப்பட்டது.

இன்றைய குடியரசுக் கட்சியினரின் மூதாதையரான சமஷ்டி வாதிகள், போலீஸ் பாதுகாப்பளித்து அன்னியப் பகைவர்களை விரட்டுவது மட்டுமன்றி, அரசாங்கம் மற்ற நலன்களையும் அளிக்கவேண்டும் என்று சொல்லித்தான் தங்கள் கட்சி வேலையைத் தொடங்கினர். வர்த்தகச் செழிப்புக்கும் நாட்டின் முன்னேற்றத்திற்கும் தேவையான அளவுக்கு அர

சாங்கம் வர்த்தகத்திற்கு உதவி புரிய வேண்டும் என அவர்கள் கருதினர்.

சமஷ்டி வாதிகள் எந்த நோக்கத்துடன் அரசியலமைப்பை ஆதரித்தனரோ, அதே நோக்கத்திற்காக அவர்களுக்குப் பின் வந்தவர்கள் தொழில் செழிப்பதற்காக காப்பு வரிகள் விதிக்க வேண்டும் என்று கோரினர். தேச சரித்திரத்தின் தொடக்கத்தில் சமஷ்டி ஆட்சியின் க்ஷேம நலச் செயல்கள், தொழிலாளர்கள், சிறுகுடியானவர்களை விட வர்த்தகத்திற்கே நேரடியான நன்மையளித்தன.

ஆகையால், ஜெபர்ஸன் கொள்கையாளர்கள் அரசாங்க சேவை விஸ்தரிப்பை எதிர்த்து தனிப்பட்டோர் உரிமைகளை வற்புறுத்தினர். 1828-ல் எல்லைப்புற வாசிகளின் காப்பாளராக ஜனாதிபதி பதவி வகித்த ஆண்டிரு ஜாக்ஸன் தேசிய பாங்குக்கு எதிராகப் போராடினார். இதற்குக் காரணம் அந்தப் பாங்கின் அலுவல்கள் எல்லைப் புறத்தில் வசித்த குடியானவர்கள், சில்லறை வியாபாரிகளைவிட நகர வியாபாரிகளுக்கே அதிக நன்மையளித்தனர் என்பதுதான்.

ஒரு சமயம் ஒரு கட்சி தனியார் உரிமையையும், மற்றொரு சமயம் அரசாங்கத் தலையீட்டையும் ஆதரிப்பதன் நோக்கம். எந்தச் சமயத்தில் எந்தக் கொள்கை தங்களுக்கு நன்மை பயக்கும் என்ற உணர்வு தான், ஒவ்வொருவருக்கும் தேவையானதை அரசாங்கம் அளிக்கட்டும் என ஏன் இரு கட்சிகளும் ஒரு சமரஸத்திற்கு வரலாகாது? ஓரளவுக்கு சில விஷயங்களில் இரு கட்சிகளும் சமரஸமாகப் போகின்றன. ஒவ்வொரு காங்கிரஸ் உறுப்பினரும் தனது ஜில்லாவில் ஒரு தபாலாபீஸ் அல்லது அணைக்கட்டு கட்ட அரசாங்கம் முன்வர வேண்டும் என விரும்பலாம். மற்ற காங்கிரஸ் உறுப்பினர் இந்தக் கோரிக்கையை ஆதரித்தால் அவர்கள் கோரும் மராமத்து வேலைகளுக்கு இவர் ஆதரவளிப்பார்.

இம்மாதிரி பேரங்களின் மூலம் சமஷ்டி ஆட்சியின் வேலையைப் பெருக்குவதற்கும் ஒரு எல்லையுண்டு. பொது மக்கள் அதிகப்படியான வரி விதிப்பதை வெறுக்கின்றனர். மேலும்

அரசாங்க சேவைகளினுல் பலம் வாய்ந்த தனிப்பட்டோர் உரிமை பாதிக்கப்படுகிறது. உதாரணமாக வியாபார ஏகபோக எதிர்ப்புச் சட்டத்தை அமுல் செய்வதால் பொதுவாக வர்த்தகம் பெருகினுலும், அதிகாரமும் செல்வாக்கும் நிரம்ப உள்ள வர்த்தக நிலையங்கள் பாதிக்கப்படுகின்றன. இப்படிப் பாதிக்கப் படுபவர்கள் தனிப்பட்டோர் உரிமையை ஆதரித்து சமஷ்டி அலுவல்களைக் கட்டுப்படுத்த வேண்டும் என வாதாடுவது இயல்பு தான்.

கட்சிகள் வாதங்கள் பிரத்தியேக நலன்களின் பற்றுதலால் எழுந்தாலும், அவைகள் தர்க்க நியாயத்திற் கொவ்வாத தென்றோ, புத்திசாலித்தனமற்ற தென்றோ, கூறிவிட முடியாது. அராஜகத்திற்கும், சோஷலிஸத்திற்கும் மத்தியில் உள்ள இரு வகை சித்தாந்தங்களில் உள்ள பற்றுதலால் அமெரிக்கர் பொருளாதார முன்னேற்றமடைந்து வருவதுடன், அவர்களுக்கு வர விருந்த பல அபாயங்களிலிருந்தும் தப்பி வந்திருக்கின்றனர். அடிக்கடி அரசாங்க உதவியின் நன்மைகளைப்பற்றியும், தனிப் பட்டோர் உற்சாகத்தைத் தடை செய்வதன் தீமை பற்றியும் பேசிப் பேசி அமெரிக்கர் இந்த நடுப்பாதையிலேயே நீடித்துத் தங்கி வருகின்றனர். தர்க்க ரீதியாகப் பார்த்தால் இந்த இரு வாதங்களிலும் ஓரளவு உண்மை யிருக்கிறது. இருதரத்தையும் சீர்தூக்கிப் பார்த்து ஓட்டர்கள் ஓட்டுச் செய்தால் அமெரிக்க மக்கள் விரும்பும் அரசாங்கம் அமைகிறது.

சமஷ்டி வாதிகள் தனியார் உரிமையை ஆதரித்தும், தாமஸ் ஜெபர்ஸனின் சிஷ்யர்கள் அரசாங்க அலுவல்களை விஸ்தரிப்பதை ஆதரிக்கவும் நேர்ந்த தலைகீழான நிலைமைக்குக் காரணம் விஞ்ஞான வளர்ச்சியும், கற்பனைத் திறனும்தான்.

1800-ம் ஆண்டில் அமெரிக்கர்களில் பெரும்பாலானவர்கள் விவசாயிகள். அவர்களுக்கு அரசாங்க உதவி தேவைப்பட வில்லை. மேற்குப் பகுதிகளை அரசாங்கம் கைப்பற்றியோ, விலைக்கு வாங்கியோ அவர்களை அங்கு எதேச்சையாக விட்டுவிட்டனர். இந்திய குடிமக்கள் ஆக்கிரமிக்காமல் பாதுகாப்பும் அளித்தனர். இதற்குப் பிறகு இந்த ஆதி குடிமக்கள் சுய முயற்சியால் முன்

னேற வேண்டியிருந்தது. அவர்கள் சிறு சிறு சமுதாயமாக ஒன்றுபட்டவுடன் அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலை வர்கள் ஆட்சி புரிந்தனர். அவர்களுடைய குதிரைகளைத் திருடுபவர்களைத் தாங்களே தண்டித்தனர். சமூகத்தினர் ஒன்று கூடி ஆட்சி அமைத்ததற்கு, இதைவிட வேறு சான்று இருக்கமுடியாது. அந்த ஆதி குடிகள் தங்களுக்கு எவ்விதமான ஆட்சிமுறை தேவை என்பதை முன் கூட்டியே அறிந்திருந்தனர். இந்த முறை தேவையென்று அவர்கள் கருதியபொழுது அவர்கள் கூட்டம் கூட்டி அந்த ஆட்சி முறையை வகுத்தனர்.

இந்த மாதிரி அனுபவங்கள் மூலம் மேற்கத்திப் பகுதிகளில் குடியேறினவர்கள் மட்டுமின்றிப்பொதுவாக, அமெரிக்க மக்கள் யாவரும் சர்க்கார் உதவிதேவையானால், அதை அளிக்க ஸ்தல ஆட்சிகளே போதும் என எண்ணினர்.

பின்னர் நாளாவட்டத்தில் விஞ்ஞானத்தின் வியாபாரம் தோன்றிற்று. அமெரிக்கக் கண்டத்தைக் கடந்து பஸிபிக் கடற் கரையோரம் வரையில் ரயில்கள் ஏற்பட்டன. கலிபோர்னியா வாசிகள் ரயில் கட்டண உயர்வைப் பற்றியும், நிர்வாகிகளின் பாரபட்சத்தைப் பற்றியும் குறைகூற ஆரம்பித்தனர். ரயில் நிர்வாகம் சக்தி வாய்ந்ததாயிருந்ததால் அதை எந்த ராஜ்யமும் கட்டுப் படுத்த முடியாது. அப்புறம் பெட்ரோல் எண்ணெய் வந்தது. மக்கள் மெழுகுவர்த்தி மீன் எண்ணெய் விளக்குகளை விட்டுவிட்டு,சீமை எண்ணெய் விளக்குகளை உபயோகிக்கஆரம் பித்தனர். பெட்ரோல் விற்பனை ஏகபோக வியாபாரமாயிற்று. இதன் விளைவுகள் மக்களுக்குத் திருப்தியளிக்க வில்லை. ஆகை யால், ரயில் பாதைகளைச் சமஷ்டி ஆட்சி மேற்கொண்டு, எண்ணெய் ஏகபோகத்தைக் கட்டுப்படுத்த வேண்டும் என மக்கள் கோரினர்.

20-வது நூற்றுண்டில் புதிய அபிவிருத்திகள் துரிதமாகப் பெருகின. சில வர்த்தகங்கள் ராஜ்ய எல்லைகளைக் கடந்து விரி வடைந்தன. இந்த விளைவை ராஜ்ய ஆட்சியைவிட சக்தி வாய்ந்த ஆட்சியினர் கட்டுப்படுத்த வேண்டியிருந்தது. எந்தெந்த ரேடியோ நிலையம் எந்தப் பகுதியில் ஒலி பரப்பலாம்

என்பதை அதிகாரம் கட்டுப்படுத்தினுலொழிய ரேடியோ வியாபாரம் லாபகரமாக நடக்க முடியாது. விமானப் பிரயாணத்தில் பாதுகாப்பு விதிகளை மேற்பார்வை பார்க்கவும், குறிப்பிட்ட பாதையில் குறிப்பிட்ட நிலையத்தார்தான் விமானம் விடலாம் என்பதையும் நிர்ணயித்து லைசன்ஸ் அளிக்க சமஷ்டி அதிகாரம் தேவை. ஓரளவு சமஷ்டி அரசாங்கத்தின் கீழ், நடக்க வேண்டிய புதிய விஞ்ஞான முறைகள் தோன்றினுல், உடனே வாஷிங்டன் அதிகார வர்க்கத்தில் ஒரு புது இலாகா அமைக்க வேண்டியிருக்கிறது. சொந்தக்காரர் ஓட்ட வேண்டிய கார்களுக்குக்கூட நாடெங்கும் சிறந்த ரஸ்தா அமைத்து நிர்வகிக்க சமஷ்டி உதவியிருந்தால்தான் பொதுஜன திருப்தி ஏற்படும்.

இதற்கிடையில் இயற்கை விஞ்ஞானத் துறையில் மக்களுக்கு நன்மை பயக்கும் பல சேவைகளைக் கண்டு பிடித்திருக்கிருர்கள். ஆனுல், மிகக் குறைந்த செலவில் இந்நலன்களைச் சர்க்கார் அளித்தால்தான் அவைகளை மக்கள் பயன்படுத்த முடியும். முதலில் விஞ்ஞான முறை விவசாயம் தோன்றிற்று. விவசாய இலாகாவினர் தங்களுடைய துண்டுப் பிரசுரங்கள் மூலமும், ராஜ்ய ஆதரவு பெற்ற பிரசாரகர்கள் மூலமும் பணி புரிந்தனர். விவசாய ஞானம் பெருகிப் பரவியதன் விளைவாகப் பல குடியானவர்கள் வேறு துறைகளில் பிழைக்க வழி ஏற்பட்டது. இப்படி அதிகப்பட்ட பேர் விவசாயத்தை விட்டு வேறு தொழில்களில் ஈடுபட்டதால் இன்று அமெரிக்கத் தொழில் துறையில் சிறப்பான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. நிலத்திலேயே தங்கிய விவசாயிகள் அதிக விளைச்சல் காண்கின்றனர். விளைச்சல் பெருக்கினுல் தானியத்தை விற்பனை செய்ய வழி காணும் பொறுப்பும் சமஷ்டி ஆட்சியின் மீது சுமந்துவிட்டது.

பொதுஜன சுகாதாரத் துறையில் கண்டு பிடிக்கப்பட்ட புது உண்மைகளின் விளைவாக மக்களின் ஆயுள் நீடித்திருக்கிறது. இந்த நீடிப்பின் காரணமாகத் தனிப்பட்ட டாக்டர்கள் வேலை அதிகரித்திருப்பதுடன் சுத்தமான தண்ணீரும், சுகாதார வசதியும் அளிக்க வேண்டிய ஸ்தல ஆட்சியினரின் பொறுப்பும் அதிகரித்து விட்டது. புதிய சேவைகளுக்கான சந்தர்ப்பங்களும் அதிகரித்து விட்டதுடன் இவைகள் தேசமெங்கும்

அமைக்க அமெரிக்கப் பொது சுகாதார இலாகா தோன்றி விரிவான பணி புரிந்து வருகிறது. வைத்திய சாஸ்திரத்தின் பயனுகவும், கிராமத்திலிருந்து குடியானவர்கள் நகரங்களுக்குக் குடியேறுவதாலும் அதிகப்படியாக முதியோர் பென்ஷன் அளிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டதுடன் ஒரு பிரஜை எங்கெங்கு செல்கிருனே, அங்கெல்லாம் இந்தப் பென்ஷன் வசதியையும் தொடர்ந்து சென்று அளிக்க வேண்டி இருக்கிறது.

மேலும், சீதோஷ்ண நிலை அறிவிப்பு இலாகா, தர நிர்ணய இலாகா, ஜனத்தொகை கணக்கும், மற்றும் விளைச்சல் விவரம் உற்பத்தி சம்பந்தமான புள்ளி விவரங்களில் சேகரித்து அளிக்கும் இலாக்காக்களும் இருக்கின்றன. விஞ்ஞானம், தொழில் நுட்பத் திறமை முதலியன பெருகியதால் ஏற்பட்ட, பலதரப்பட்ட, சௌகரியங்களைப் பயன்படுத்தவே மேற்கூறிய இலாகாக்கள் அமைக்க வேண்டி வந்தது. மற்றும் பல நலன்களைத் தனிப்பட்டோர் ஸ்தாபனங்களும், ஸ்தல, ராஜ்ய அரசாங்கங்களும், அளிக்கின்றன. ஆனுல், இவைகளில் சிலவற்றை சமஷ்டி அரசாங்கம்தான் சிக்கனமாக அளிக்க முடியும்.

கடைசியாக சமஷ்டியின் ஆட்சி சிறப்பாக பிரகாசிக்கத் தொடங்கியது. 1932-ல் பலத்த பொருளாதார மந்தம் ஏற்பட்டு, ரூஸ்வெல்ட் ஜனுதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டபோதுதான், பொருளாதார மந்தம் இயல்பாகவே அகன்று, மக்கள் நம்பிக்கை வளரும் என்று நினைத்தனர். வேலையில்லாத் திண்டாட்டத்தை தனிப்பட்டோர் தர்மத்தின் மூலமும், ஸ்தல ராஜ்ய ஆட்சி உதவியின் மூலமும் நீக்க முயற்சித்தனர். கடைசியாக சமஷ்டி ஆட்சியின் உதவியையும் பரிட்சித்துப் பார்த்தனர். ரூஸ்வெல்ட்டின் முயற்சிகளில் பல பரிட்சார்த்தமாகவே இருந்தன. சுபீட்சம் தோன்றத் தோன்ற மக்கள் அவருடைய யோசனைகளை ஆதரித்தனர். சர்க்கார் உதவி அவசியம் என்பதை 1946-ம் வருஷத்திய வேலையளிப்புச் சட்டத்தின் மூலம் அங்கீகரித்தனர். இதன் மூலம் பொருளாதார மந்தத்தை எல்லாப் பயனுள்ள வழிகளாலும் நீக்குவது அரசாங்கத்தின் பொறுப்பு என ஒப்புக்கொண்டார்.

இப்படி ஒப்புக் கொண்டதனுல் விவாதம் தீர்ந்துவிட வில்லை. இன்னமும் அமெரிக்கர் தனிப்பட்டோர் முயற்சியையும், தனிப்பட்டோர் வர்த்தகப் போட்டியையுமே ஆதரிக்கின்றனர். முன்பு விவாதத்திற்குக் காரணமாயிருந்த பல அரசாங்கப் பணிகளை இரு கட்சியினரும் வரவேற்கின்றனர். ஆனுல், அனுவசியமான தொழில்களையும் தனிப்பட்ட வர்த்தகத்தினர் சிறப்பாகச் செய்யக் கூடியதையும் சர்க்கார் நடத்துவதை மக்கள் விரும்பவில்லை. 1952-ல் சிக்கனம் செய்வதற்காக ஐஸன்ஹோவரை மக்கள் ஜனுதிபதியாகத் தேர்ந்தெடுத்தனர். சர்க்கார் உளுத்துப் போன பகுதிகளைச் சீவி எரிவதற்காகவே அவரைத் தேர்ந்தெடுத்தனர்.

அலெக்ஸாண்டர் ஹமீல்டன் மத்திய ஆட்சி விரிவடையப் பாடுபட்டதனுல் நலம்பெறக்கூடியவர்கள் வர்த்தகர்கள். ஆகையால் அவர்கள் ஹமில்டனை ஆதரித்தனர். 150 ஆண்டுகளுக்குப் பிறகு பிராங்லின் டி ரூஸ்வெல்ட் மத்திய அரசாங்கப் பணிகளை பெருக்குகையில் நேரடியாக நலம் பெற்றவர்கள் வேலையில்லாதவர்கள். ஆகையால், இவர்கள் ரூஸ்வெல்ட்டை ஆதரித்தனர். முடிவாக நலம் பெற்றவர்கள் வர்த்தகர்கள். ஆனுல், அவர்கள் வரி செலுத்த வேண்டியிருந்தது. அடுத்த வருஷம் வருமானம் வருகிறது என்ருல் எவ்வளவு இன்பம் பெருகுமோ அந்த அளவு இப்பொழுது வரி செலுத்துவது என்ருல் வருத்தம் தான் தோன்றுகிறது. பொதுநலச் சாதனங்களைச் சர்க்கார் கட்டுப்படுத்துவது தவிர்க்க முடியாதது. சமஷ்டி அரசாங்கத்தைவிட ராஜ்ய அரசாங்கங்களைச் சுலபமாகச் சமாளித்து விடலாம் என்பதை அவர்கள் உணர்ந்தனர். இந்த உணர்வினுல் பொதுநலசேவை சாதனங்களை நிர்வகித்தவர்கள் சமஷ்டி கட்டுப்பாட்டை எதிர்த்து, ராஜ்ய ஆட்சிக் கட்டுப்பாட்டை ஆதரித்தனர். விஞ்ஞானத்திலும் புதிய கண்டுபிடிப்புகளாலும் ஏற்பட்ட சந்தர்ப்ப மாறுதல்களால் ஜனநாயகக் கட்சியினர் ஹமீல்டன் ஆதரவாளர்களாகவும், குடியரசுக் கட்சியினர் ஜெபர்ஸன் ஆதரவாளர்களாகவும் மாறினர்.

ஆனுல், அமெரிக்கர் உள்ளூர இரு கட்சிகளிலும் பற்றுள்ளவர்கள். வேண்டா வெறுப்பாக சமஷ்டி அரசாங்கத்தின் அவசி

யத்தை நாம் ஒப்புக்கொள்கிறோம். கொள்கையளவில் சமஷ்டி ஆட்சியின் வேலைகளை ராஜ்ய ஆட்சிக்கோ, முடியுமானால் ஸ்தல ஆட்சிக்கோ மாற்ற நாம் விரும்புகிறோம். இம் மூன்று வகை அரசாங்கப்பணிகளைத் தனிப்பட்டோர் நிர்வாகத் திற்கு மாற்ற முடியுமானால் நமக்கு சர்வ சம்மதந்தான் 1952-ல் ஜனாதிபதி தேர்தல் பிரசாரத்தில் ஜெனரல் ஐஸன் ஹோவரும், கவர்னர் ஸ்டீவன்ஸனும் சமஷ்டி அரசாங்கப் பணியின் அளவைக் குறைக்க வேண்டும் என்று அடிக்கடி பேசினார்கள்.

மத்திய ஆட்சிப் பணியை பரவலாக மாற்றலாம், அல்லது அரசாங்கப் பணியையே குறைக்கலாம் என்பது பற்றி அமெரிக் கருக்கு எவ்வித நடைமுறை திட்டமும் இல்லை. அவர்கள் கோருவதெல்லாம் "சிக்கனம்" என்று கூறிவிட்டு தங்கள் வர்த் தகத்திற்குத் தேவையான அரசாங்கப் பணியை ஆதரிப்பது தான். ஆனால், பரவல் ஆட்சிமுறைப் பற்றிய ஒரு கொள்கை வேரூன்றி விட்டது. அதற்கு நாளாவட்டத்தில் அதிக ஆதரவு கிடைக்கலாம். ரூஸ்வெல்ட் காலத்தில் தேசீய மூலப்பொருள் குழுவின் தலைவராயிருந்த பிரடரிக் டிலானோ அதை "திட்ட மில்லா"க் கொள்கை என்றார். இந்தக் கொள்கையை டென்ன ஸிப் பள்ளத்தாக்கு நிர்வாகத்தில் காணலாம்.

ஆரம்பத்திலிருந்து இந்த டென்னஸிப் பள்ளத்தாக்கு நிர் வாகத்தின் சிறப்பு என்னவெனில், அது நிதி நிர்வாகத்தை மட்டும் மேற்கொண்டு மின்சாரம் குறைந்த செலவில் கொடுப்ப தாக உத்தரவாதமளித்து, மற்றவர்கள் மேற்கொள்ள விரும்பாத ஆராய்ச்சி செய்வதாக ஒப்புக்கொண்டது. மற்றப்படி நல்ல சந்தர்ப்பங்களை எடுத்துக் காட்டி தேவையான தகவல்கள் அளித்து அவைகள் மூலம் டென்னஸிப் பள்ளத்தாக்கு ராஜ் யங்கள், கவுண்டிகள், நகரங்கள் தங்களிஷ்டப்படி திட்டம் செய்து கொள்ள விட்டு விட்டது. "திட்டமில்லா" கொள்கை என்றால் சமஷ்டி உதவி மூலம் நிர்மாண வேலைசெய்து, கட்டுப் பாடுகள் செய்து, விஞ்ஞான ஆராய்ச்சி செய்து, பண உதவி யளித்து பெரும்பாகமான வேலையை சமஷ்டியின் உதவியின்றிச் செய்ய விட்டுவிடுவதுதான். இதன் மூலம் சிறப்பான வேலை

நடக்க வேண்டுமென்றால் சமஷ்டியினர் சில்லரை வேலைகளில் கவனம் செலுத்தாமல் திட்டம் நடைபெற வழி செய்வது என்று அர்த்தம்.

இரண்டாவது உலக மகாயுத்தத்திற்குப் பிறகு இந்த திட்டமில்லாக் கொள்கைக்குப் புது விளக்கம் காணப்பட்டது. சமஷ்டி அரசாங்கத்தின் பணி என்னவென்றால் வர்த்தகம் செழிப்பதற்கான "சீதோஷ்ண நிலை"யை சிருஷ்டிப்பது. இதன் மூலம் அமெரிக்கா தனிப்பட்டோர் கொள்கைக்குத் திரும்பி விட்டது என்று கூறலாகாது. சக்கரம் ஓடுவதற்கான அனுபவ சாத்தியமான ஏற்பாடுகள் செய்வது அரசாங்கத்தின் பொறுப்பு என்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது. சக்கரம் நிதானப்பட்ட வுடன் ஒவ்வொரு சக்கரத்தையும் ஓட்டுவதற்கு ஒரு சிவில் அதி காரியை நியமிக்க வேண்டியதில்லை. சிறந்த நிபுணர்களை நிய மித்து வர்த்தக சீதோஷ்ண நிலையில் விரும்பத்தகாத மாறுதல் கள் ஏற்பட்டால் அவைகளைக் கண்டு பிடித்து சமூகமான நிலை ஏற்படுத்துவதற்கு இயன்ற மட்டில் வகை செய்யவேண்டும்.

இரண்டாவது மகாயுத்தத்திற்குப் பிறகு அரசியல் பொரு ளாதார சாஸ்திரத்தை ஆராய்பவர்களின் கடமையில் பெரும் பகுதி அரசாங்க அதிகாரங்களைப் பயன்படுத்தி, சமூக சீதோ ஷ்ண நிலையை ஏற்படுத்தி அமெரிக்கரின் சிருஷ்டி சக்தியைப் பெருக்குவதுதான், பொருளாதார வீக்கம், மந்தம். இரு சந்தர்ப் பங்களிலும் சமஷ்டி அதிகாரத்தைப் பயன்படுத்திப் பார்த்த பிறகு அமெரிக்க மக்கள் தங்களுடைய ஆட்சிக் கொள்கைகளை அமெரிக்க வாழ்க்கை நிலைக்கொப்ப அமைத்துக் கொள்வார்கள் என எதிர்பார்க்கலாம்.

## 13. அயல் நாட்டு உறவுகள்

அமெரிக்க அயல் நாட்டு உறவின் பல விசித்திரமான அம்சங்களுக்குக் காரணம் உலகில் பிறநாட்டு மக்களுக்கு ஏற் படாத சரித்திரப் பூர்வமான அனுபவங்கள் அமெரிக்கருக்கு ஏற் பட்டதுதான்.

முதலாவதாக, இந்தியப் பூர்வ குடிமக்கள் தவிர மற்ற அமெரிக்கர் யாவரும் இங்கு குடியேறியவர்கள். அவர்களோ அல்லது அவர்களுடைய மூதாதையாரோ சென்ற நான்கு நூற்ருண்டுகளுக்குள் வட அமெரிக்காவில் குடியேறியவர்கள். ஆகையால் அவர்கள் எங்கிருந்து வந்தவர்கள் எந்நிலையிலிருந்தவர்கள் என்பதை அறவே மறந்துவிட முடியாது. அமெரிக்கரில் பெரும்பாலோர் ஐரோப்பாவிலிருந்து வந்தவர்கள். ஆகையால், சர்வதேச நெருக்கடி ஏற்படும் சமயங்களில் தாங்கள் துறந்துவிட்டு வந்த நாட்டிடையே சில சமயம் அன்பு கொள்ளுவதும், சில சமயம் வெறுப்பதும் இயல்புதான்.

இவர்களைக் கடல்கடந்து ஓடிவரச் செய்த காரணங்கள் அரசியல் கொடுங்கோன்மையினிடம் அச்சம், வெறுப்பு, தாங்க முடியாத வறுமை, மதவெறியர்களிடம் பட்டகஷ்டம் முதலியன. அவர்கள் உள்ளம் ஒரு புறம் தாய்நாட்டுப்பாசத்தால்உருகியது. மற்ருெரு புறம் வெறுப்பு உணர்ச்சியால் கொதித்தது. இந்த புரட்சிக் காலத்திலிருந்து 1812-ம் வருஷ யுத்தம் வரையில் நீடித்து, இங்கிலாந்துடன் நடந்த கடும் போராட்டத்தில் மேலும் அதிகரித்தது. அமெரிக்க சரித்திரத்தில் தொடர்ந்து நாம் காணும் மனோபாவம், "ஐரோப்பாவிலிருந்து தப்பி வந்தோம்; இனி அங்கு இழுத்துச் செல்லப்படுவதை நாம் விரும்பவில்லை" என்பதுதான்.

ஆனால், ரத்தபாசம் சாமான்யமானதல்ல. சட்டங்கள் பழக்க வழக்கங்களில் பல, அமெரிக்கர் நடத்தும் ஸ்தாபனங்கள் மதிப்பிடும் தன்மை எல்லாம் மேற்கத்தி நாகரிகத்தை ஒன்றியவை. மேற்கத்தி நாகரிகத்தின் தாயகம் ஐரோப்பா. இன்றும் அதில் பாதி அந்த நாகரிகத்தையே பின்பற்றுகிறது. ஐரோப்பாவில் நாச சக்திகள் தாண்டவமாடலாம் எனும் நிலை ஏற்படும் பொழுது நமக்கும் அக்கதி நேருமோ என அமெரிக்கர் அஞ்சுகின்றனர். 20-வது நூற்ருண்டில் ஐரோப்பா பல தடவைகளில் அபாயத்திற்குள்ளாயிருக்கிறது. அம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் அமெரிக்காவில் அரசியல் வாதப்பிரதிவாதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இந்த வாதப் பிரதிவாதங்கள் மும்மரமாகவும், சிக்கல் நிறைந்ததாகவும் ஆகிவிடுகின்றன. இதற்குக் காரணம்

அமெரிக்காவில் பாதிப் பேர் பிரிட்டிஷ் சம்பிரதாயங்களில் ஊறி யவர்கள் என்பதும், அந்தச் சம்பிரதாயத்திற்கும் ஜெர்மன் அல்லது ஐரிஷ் சம்பிரதாயத்திற்கும் முரண் ஏற்பட்டதன் சாயை அமெரிக்க வாழ்க்கையிலிருந்து அகலவில்லை என்பதும் தான்.

அமெரிக்க மனோபாவத்தை உருப்படுத்திய மற்றொரு அம்சம் சமீப காலம் வரையில் இந்நாடு பிற உலகிலிருந்து தனித்திருந்ததனால் கிடைத்த பாதுகாப்பு. பிரஞ்சு தூதுவர் ஜூல்ஸ் ஐஸ்ஸராண்டு ஒரு சந்தர்ப்பத்தில் கூறிய மாதிரி, "அமெரிக்கா ஒரு அதிர்ஷ்ட நாடு; அதன் வடக்கிலும், தெற்கி லும் பலஹீனமான நாடுகள் இருக்கின்றன. கிழக்கிலும் மேற்கி லும் மீன்கள் விளையாடுகின்றன"

ஹாட்டாரஸ் முனைக்கருகில் 1942-ல் மீன்களுடன் ஜெர் மன் நீர் மூழ்கிகள் விளையாடுவதைப் பார்த்த அமெரிக்கர் திடுக் கிட்டனர். இதைவிடப் பெரிய அதிர்ச்சி வடக்கே சைபீரியாவி லிருந்து வந்து சிகாகோ, டெட்ராய்ட் நகர்கள்மீது வெடிகுண்டு வீசமுடியும் என அறிந்தவுடன் ஏற்பட்டது. பல நூற்றாண்டுக ளாக பத்திரமான நிலையிலிருந்தவர்கள் திடீரென தாக்குதல்க ளுக்குட்பட்டவர்களானதால் அமெரிக்கரிடையே கவலைதோயத் தொடங்கியது. ஐரோப்பிய பயங்கரங்களிலிருந்து தப்பிவிட் டோம் என நினைத்துக் கவலையின்றி வாழ்ந்து வந்த நமது நாட்டு எல்லைகளைப் புது பயங்கரங்கள் தாக்கின.

ஐரோப்பிய படையெடுப்புகளுக்கப்பால் நிம்மதியாக அமெ ரிக்கர் வாழ்ந்து வந்ததுமின்றி அடிக்கடி பிரான்ஸ், பிரிட்டன். ஸ்பெயின்முதலிய நாடுகளுக்குள் ஏற்பட்ட யுத்தங்களினால்குடி யரசின் ஆரம்பகாலத்தில் நன்மையடைந்துவந்தோம். உதாரண மாக நெப்போலியன், லூயிஸியானாவைக் கைப்பற்றி அமெரிக் காவுக்கு மேற்கே அபாயகரமான கோட்டை கட்ட உத்தேசித் தான். பின்னர் அவன் மனம் மாறி அதை நமக்கு விற்பதற்குக் காரணம் பிரிட்டனுடன் முழு மனதுடன் போர் புரிவதற்காக. நமது சரித்திரத்தின் துவக்கத்தில், பன்முறை ஐரோப்பிய யுத்தங்களால் அமெரிக்கா அன்னியர் தடையின்றி வாழ முடிந்

தது என்பதால், ஐரோப்பிய யுத்தங்களால் நமக்கு நன்மையே யொழிய தீமை இல்லை என்கிற நம்பிக்கை வேரூன்றி விட்டது. 20-வது நூற்ருண்டில் இரு உலக யுத்தங்கள் ஏற் பட்டதால் இந் நம்பிக்கையைக் கைவிட வேண்டி வந்து விட்டது.

300 ஆண்டுகளாகப் பரந்த கண்டத்தில் பயிராக வேண் டிய நிலப் பரப்பு விஸ்தாரமாயிருந்தது. அமெரிக்கர் எண்ணங் களை உருவாக்கியது. ஐரோப்பியர் முதல் முதலாக இங்கு வந்த சமயம் வட அமெரிக்கா அனேகமாகக் காலியாக இருந் தது. புரட்சிக்குப் பின் அபலாசிய மலைச் சாரல் வழியாக எண்ணற்ற மனிதக் கூட்டம் 2,000 மைல் விஸ்தீரணமுள்ள காலி நிலங்களை நோக்கிக் குவிய ஆரம்பித்தது. நீண்டகாலமாக எல்லைப்புறங்களில் வசித்ததன் பயனுகச் செல்வ நிலை முன் னேற்றத்தைப் பற்றிய நம்பிக்கையும். சிந்தனையும் வளர்ந்தது. இந்த மனேபாவம் நடப்பு நூற்ருண்டு நிலைக்குப் பொருந்தாம லிருக்கலாம். கடல் மூலம் நீண்டகால வர்த்தக அனுபவமும், நமது சிந்தனைகளையும், பழக்கவழக்கங்களையும் சிறப்புறச் செய் தது. கிழக்குக் கரையோரத்திலுள்ள ஆங்கிலக் குடியேற்ற நாடுகள், உற்பத்தியான சரக்குகளுக்கு தாய்நாட்டையே நம்பி யிருந்தனர். புகையிலை, மிருக ரோமம், தேக்கு, தானியம் முதலியவைகளை தாயகத்திற்கு அனுப்பின. ஒரு குடியேற்ற நாட்டிற்கும் மற்ருென்றிற்கும் பல தலைமுறைகள் வியாபாரப் போக்குவரத்து பெரிதும் கடற் கால்வாய்கள் மூலமே நடந்தன. அமெரிக்காவில் பணம் படைத்த பழம் பெரும் பகுதிகள் கடல் அனுபவம் வாய்ந்தவர்கள். இந்த அனுபவம் அவர்களுடைய அரசியல் கருத்துக்களையும் பாதித்தது. மத்திய மேற்குப் பகுதி யில் மலைகளால் அடைபட்டுக் கிடந்தவர்களும் கடலோர நக ரங்களுடன் மிஸிஸிபி நதி வழியாக தங்கள் தானியங்களை எடுத் துச் சென்று நியூ ஆர்லியன்ஸ் மூலம் ஐரோப்பாவுக்கு விற்பனை செய்தனர்.

19-வது நூற்ருண்டில் உள்நாட்டுப் பகுதியை அபிவிருத்தி செய்ய ஏராளமான மூலதனம் வேண்டியிருந்தது. இந்த மூல தனத்தில் பெரும் பகுதி பிரிட்டன், ஹாலண்டு பண முதலாளிக்

ளிடமிருந்து கிடைத்தது. அயல் நாடுகளில் கடன் வாங்குவ தும், இந்தக் கடனுல் அயல் தேச வியாபாரம் பெருகுவதும் அமெரிக்கர்களுக்குப் பழக்கமாகி விட்டது. தாங்கள் கடன் கொடுத்த மூலதனத்தின் வட்டியை அன்னியர்கள் அமெரிக்கா விலிருந்து கால்நடைகளாகவும், கோதுமையாகவும் பெற்றனர். இவைகளை வாங்க அன்னியர்கள் தங்கள் சரக்குகளை விற்றுப் பணம் செலுத்தவேண்டிய அவசியமில்லை. இதன் மூலம் அமெரிக்கருக்குத் தங்கள் சரக்குகளை அன்னிய நாடுகளில் விற்று, அன்னிய சரக்குகள் இங்கே நுழையாமல் தடுக்க காப்பு வரிகள் விதிப்பது பழக்கப்பட்டுப் போய்விட்டது. இந்த கொடுப் பினை மூலம் வரவு, செலவு சரிக்கட்டவில்லை என்பது பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. பல தலைமுறைகளாகப் பெற்ற இந்த அனுபவம் 20-வது நூற்றுண்டு பொருளாதார சிக்கல் களைச் சமாளிக்க அவ்வளவாக உதவி புரியாது.

கடைசியாக அமெரிக்கருடைய மனேபாவத்தைப் புரிந்து கொள்ள வேண்டுமானுல் அவர்களுடைய ஜனநாயக ஸ்தாப னங்களையும், வாழ்க்கை முறைகளையும் அறிந்துகொள்ளவேண் டும். அமெரிக்கரின் அரசியல் நடத்தையில் எவ்வளவு குறை பாடுகள் இருந்தாலும் எதையும் மனம் விட்டு விவாதிக்க அவர் கள் எப்பொழுதும் தயங்குவதில்லை.

அமெரிக்காவைக் கண்டுபிடித்த காலத்திற்குப் பிறகு இந் நாட்டுக்கு வரும் அன்னியர்கள் முன்னுக்குப் பின் முரணுன கருத்துக்கள் நிலவி வருவதைப் பார்த்திருப்பர். பத்திரிகைகள் தங்களுக்குத் தோன்றியதை எழுதுகின்றன. அரசாங்க காரியா லயம் யோசித்து வெளியிட்ட கொள்கைகளுக்கு எதிராகக் காங் கிரஸ் உருப்பினர் பேசுகின்றனர். நேச நாடுகளுடனே, பகை நாடுகளுடனே உடன்பாடு சம்பந்தமாக நடக்கும் பேச்சு வார் த்தைகள் பாதுகாப்பற்றச் சிறிய கூடாரத்தில் சுற்றியும் ஜனத் திரளின் கூக்குரலுக்கிடையேயும் நடைபெறுகின்றன. மிக அபாயகரமான ராணுவ ரகசியத்தை யாராவது ஒருவர் ரேடியோ மூலம் வெளியிடலாம். இது பற்றிப் பேசுபவர், "இம் மாதிரி ரகசியத்தை நாட்டுப் பற்றில்லாத ஒருவன் வெளியிட்டு

விட்டால் என்ன செய்வது?'' என்று சொல்லிக் கொண்டே அதை வெளியிடுவார்.

சோவியத் நாடு மாதிரி திரை மறைவில் சர்வாதிகாரப் பான்மையுள்ள நாட்டுடன் முரண் ஏற்பட்ட சமயத்தில், இம் மாதிரிக் கட்டுப்பாடின்மை அமெரிக்காவை அபாய நிலையில் விட்டுவிடுமே எனத்தோன்றலாம்,வாய்க்கு வந்ததைப்பேசுவது நமது இரத்தத்தில் தோய்ந்துவிட்டதால் அதை அடக்கு வதற்கு எதுவும் செய்ய முடியாது. வாதப் பிரதிவாதம் எவ்வ ளவு கடுமையாக நடந்தாலும் சோவியத்தினர் அனுஷ்டிக்கும் திரை மறைவு சதிப் பேச்சைவிட அதிகமான தார்மீக நன்மை யளிக்கும் எனச் சில அமெரிக்கர் ஆறுதல்மொழி கூறு கின்றனர்.

அமெரிக்கர் எவ்வளவுதான் அடிக்கடி மனம் மாறுபவர்க ளாயும், நம்ப முடியாதவர்களாயும் இருந்தாலும், அவர்கள் உலக சுதந்திரத்தை மாய்க்க ரகசிய சதி செய்வதில்லை என மற்ற சுதந்திர மக்களுக்கு நம்பிக்கை அளிக்கலாம்.

1812-ம் வருஷத்திய சண்டைக்குப் பிறகு 100 ஆண்டு களுக்கு அமெரிக்கர் உள்நாட்டு அபிவிருத்தியிலேயே ஈடுபட் டிருந்தனர். அரசாங்கக் காரியாலயம் கவனிப்பாரற்றுக் கிடந் தது. அயல் நாட்டுக் கொள்கை யிருந்தால், அதை உருவாக்கு வதில் காங்கிரஸே பெரும் பங்கு கொண்டது. ராஜ தந்திரத் தில் ஆழ்ந்த கருத்துச் செலுத்திவந்த ஐரோப்பிய நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், அமெரிக்காவில் ராஜ தந்திரப் பகுதி யினர் அனுபவ மில்லாதவர்கள், திருப்திகரமாகப் பணி புரியத் தெரியாதவர்களா யிருந்தனர். பணக்காரர்கள்தான் தூதுவர் வேலைக் கேற்ப செலவு செய்யக்கூடியவர்கள், இப்படிப் பதவி பெற்ற பணக்காரர்கள் ஜெயித்த கட்சிக்குத் தாராளமாகப் பண உதவி செய்தது தவிர இந்த வேலைக்கேற்ற குணாதிசயம் வேறு எதுவும் பெற்றவர்களல்ல. பெஞ்சமின் பிராங்லின் காலத்தி லிருந்து நாளிதுவரை நெருக்கடியான காலங்களில் அமெரிக்கா தூதுவர்களாகவும், அரசாங்கக் காரியதரிசிகளாகவும் திறமை வாய்ந்தவர்களின் சேவையைப் பெற்றிருக்கிறது.

ஒரு தேச அயல் நாட்டு இலாகாவில் பெரிதும் அயல் நாட்டினருடன் பழகுபவர்கள் பதவி வகித்தால், அந்த இலாகாவை அந்நாட்டு மக்கள் சந்தேகக் கண்கொண்டு பார்ப்பது இயல்பு தான். இந்த விதிக்கு அமெரிக்க அரசாங்க இலாகா விலக்கல்ல. அதனுடைய வேலையின் தன்மையே, பொதுஜன அதிருப்திக்கு அதை ஆளாக்குகிறது. அதனுடைய அயல் நாட்டுத் தொடர்பு மக்கள் எதிர்பார்த்த பயனை அளிக்கவில்லையானல். அந்த அரசியல் காரணங்களினுல் நினைத்த பலன் கிட்டவில்லை என்பதை நாட்டு மக்கள் உணர்ந்துகொள்வதில்லை. அமெரிக்காவின் நலனை யாரோ காட்டிக்கொடுத்து விட்டார்கள் எனும் சந்தேகம் தோன்றுகிறது. இந்தச் சந்தேகத்தை அடிப்படையாகக் கொண்டு எதிர்க்கட்சியினர் வசைமாறி பொழிவார்கள். ஒரு நூற்றுண்டுக்குமுன் நிலவிவந்த சித்தாந்தங்களுக்கு மாருக அரசாங்க இலாகா தனது அயல் நாட்டு உறவுக் கொள்கையை அமைத்துக்கொள்ள நேரிட்டால், தேர்ந்த கொள்கைகளைக் கைவிட்டு விட்டனரே என்று சிலர் கவலைப்படுவதில் ஆச்சரியமில்லை. இவ்வாருக அரசாங்க இலாகா பலவிதமான தாக்குதல்களுக் குள்ளாகிறது.

1900-லிருந்து ஏற்பட்ட அயல்நாட்டு வர்த்தகம், அயல் தேச நட்புறவு, தேசிய ஸ்தாபனங்களில் அங்கம் வகிப்பது, அக்கிரமக்காரர்களை எதிர்ப்பது எல்லாம் சிக்கல் நிறைந்ததாகி விட்டது. இதன் விளைவாக அரசாங்க இலாகாவின் வேலை முறையே மாறிவிட்டது. முன்பெல்லாம் அரசாங்க இலாகா மட்டும்தான் அன்னிய நாடுகளுடன் தொடர்பு கொண்டிருந்தது. இன்று அமெரிக்க அரசாங்கத்தின் சார்பாகப் பணி புரியும் பல ஸ்தாபனங்கள் ஒரு புறம் அமெரிக்க வாழ்வின் பல பகுதிகளை வளம் செய்வதுடன் அயல் நாட்டு உறவை நிர்ணயிப்பதிலும் பங்கு கொள்கின்றன. அனேக ஸ்தாபனங்கள் நேரடியாக அன்னியருடனும், அன்னிய அரசாங்கங்களுடனும் தொடர்பு கொள்கின்றன. மேலும் உலக நிகழ்ச்சிகளை நிர்ணயிக்கும் பல சம்பவங்கள் ஸ்தல நலன்களையும் பாதிக்கின்றன. உதாரணமாக 'வியாபாரம் செழிக்க வழி செய்; உதவி வேண்டாம்' எனும் கொள்கை அமெரிக்கப் பாதுகாப்பை வலியுறச்

செய்வது என்று ட்ருமன், ஐஸன் ஹோவர் இருவரும் ஒப்புக்கொண்டனர். ஆனல், அனேக வர்த்தகர்கள், குடியானவர்கள், தொழிலாளர் பிரதிநிதிகள் இந்தக் கொள்கையை வன்மையாக எதிர்க்கின்றனர். இவர்களெல்லாம் தங்கள் தொழில்களுக்கு ஓரளவு பாதுகாப்பு வேண்டும் என்பவர்கள். இவர்கள் கண்டனத்திற்குத் தலை வணங்கினல் அயல் நாட்டு வர்த்தகத்தில் லாபம் பெறும் வகையில் பேரம் செய்யும் சக்தியை அமெரிக்கா இழந்துவிடும்.

இந்த பல்வேறு அரசாங்க, ஆனல் ஒவ்வொரு சமயம் மாறுபட்ட நோக்கம் கொண்ட ஸ்தாபனங்களை ஒரு ஒழுங்கான அயல்நாட்டுக் கொள்கையை வகுப்பதற்கேற்ப ஒன்றுபட்டு இயங்கச் செய்வது கடினம். விவசாய இலாகா, ராணுவப் பாதுகாப்பு இலாகா போன்ற மாறுபட்ட குழுவினரை ஒன்றுபட்டு இயங்கும்படிசெய்ய ஜனதிபதி ஒருவரால்தான் முடியும். இந்த பல்வேறு இலாகாக்களை ஒழுங்கு படுத்துவதில் சிறிது முன்னேற்றம் ஏற்பட்டாலும், பூரண வெற்றி எதிர் பார்ப்பதற்கில்லை.

காங்கிரஸ் அயல்நாட்டுக் கொள்கையில் தலையிடுகையில் அதை ஸ்தல அக்கறைகளை விட்டு விட்டுப் பரந்த நோக்குடன் பணி புரியும்படி செய்வது ஜனதிபதியினல் மட்டும்தான் முடியும். ஜனதிபதி மக்களுடன் நேரடியாகப் பேச முடியும். அமெரிக்கா இலாகாவின் செய்தி உத்தியோகஸ்தர்கள் திறமை வாய்ந்தவர்களாயிருந்து, அயல் தேச உறவுகள் பற்றிய தகவல்களைத் திறமையுடன் சேகரித்துக் கொடுத்து ஜனதிபதிக்கு உதவி புரியலாம். ஆனல், ஜனதிபதிதான் இணையில்லாத் தலைவராயிருக்க வேண்டும். புகழ்பெற்ற ஜனதிபதிகள் மக்கள் ஆதரவினலேயேதான் செயல் புரிந்துள்ளனர்.

அயல்நாட்டு உறவு திருப்திகரமாயிருக்க வேண்டுமானல் அரசாங்கக் கொள்கைகளுக்குக் காங்கிரஸில் இரு கட்சி ஆதரவும் வேண்டும். காங்கிரஸில் சில உறுப்பினர் தங்களது அரசியல் செல்வாக்கைப் பெருக்கிக் கொள்ளுவதற்காக சர்க்கார் மதிப்பை வீழ்த்தப் பிரயத்தனப் படலாம். ஆனல், பெரும்பா

லோர் தாங்கள் பதவிக்கு வந்தபோது பிரமாணம் செய்து கொடுத்ததற்கேற்ப நாட்டைக் காக்கத் தயாராயிருப்பார்கள். அபாய காலங்களில் இரு கட்சிகளேயும் ஒன்றுபடுத்தும் தலை மையை ஆதரிக்கும் ஆவல் அவ்வளவு ஒழுங்காகப் பரிணமிக் கிறது. என்று சொல்லுவதற்கில்லை. ஸெனடர் வாண்டன்பர்க் கின் புத்திசாலித்தனத்தால் 80-வது காங்கிரஸில் மார்ஷல் திட்டம் விவாதிக்கப்பட்டது. தலைமைப் பீடம் சிறப்புற வேலைச் செய்தது. பொதுவாக அயல்நாட்டு உறவு விஷயத்தில் இரு கட்சி ஒற்றுமை நிலவ வேண்டுமானல், காங்கிரஸில் தன்னல மற்ற தலைவர்கள் இருக்கவேண்டும். எதிர்க் கட்சியைத் தட்டிக் கொடுத்து ஆதரவு பெறும் சக்தி வாய்ந்த ஜனதிபதி பதவியில் இருக்க வேண்டும்.

காங்கிரஸ் உறுப்பினர் 4 வருஷம் தொடர்ந்து பதவியி லிருப்பதற்கேற்றபடி அரசியலமைப்பைத் திருத்தவேண்டுமென வுட்ருவில்ஸன் ஆராய்ச்சி ஸ்தாபனம் யோசனை கூறி இருக்கி றது. இந்த யோசனைக்கு அவர்கள் பின்வரும் காரணங்கள் கூறுகின்றனர். 2-ம் வருஷ தேர்தலின்போது ஜனதிபதி தேர் தல் நடக்காததால் குறைந்த பேர்களே காங்கிரஸ் தேர்தலில் ஓட்டுச் செய்தனர். சீரான அயல்நாட்டு உறவுக் கொள்கை களை விரும்பாத தனிநலப் பிரியர்கள் தங்களிஷ்டப்படி காங் கிரஸ் உறுப்பினரைத் தேர்ந்தெடுப்பார்கள். இப்படித் தேர்ந் தெடுக்கப்பட்டவர்கள் ஜனதிபதி தேர்தலின்போது நடைபெறும் காங்கிரஸ் தேர்தலில் போட்டியிட்டால் தோற்றிருப்பார்கள்.

ஜனதிபதி அயல்நாட்டு உறவுபற்றித் தனது நீண்ட கால உத்தேசங்களைக் காங்கிரஸுக்குத் தெரிவித்து வந்தால் குறுகிய நோக்கமுள்ள யோசனைகள் நிறைவேருமல் செய்யலாம் என இந்த வில்ஸன் கமிட்டியினர் மற்ரெரு யோசனையையும் கூறி இருக்கின்றனர்.

கடுமையான எதிர்ப்பை உண்டாக்காத அயல் தேச உறவு கொள்கைகளை வகுப்பதில் கஷ்டமிருப்பதற்கு இரண்டுகாரணங் கள் கூறலாம். ஒன்று தர்மசங்கடமான நிலைமைகள் ஏற்படு வது. மற்ரென்று இந்த நூற்ருண்டில் ஏற்பட்டுள்ள மாறுதல்

களால் அமெரிக்கர் மதித்து வந்த பழைய கொள்கைகள் அடி பட்டுப் போனது.

சோவியத் நாடுபோல் தந்திரம் வாய்ந்த எதிரியுடன் தொடர்பு கொள்வதில் தர்மசங்கடமான நிலைமைகள் ஏற்படத் தான் செய்யும். இரு தீமைகளில் ஒன்றை அமெரிக்கா மேற் கொள்ளவேண்டிய நிலைமை ஏற்படுத்துவதிலேயே எதிரி கருத் தாயிருக்கிறுன். உதாரணமாகக் கொரியாவில் அம்மாதிரி தர்ம சங்கடம் ஏற்பட்டது. எந்த முடிவுக்கு வந்தாலும் அது தவரு னது என்று சொல்லக் கூடிய நிலை ஏற்பட்டது. ஆனுல், எந்த அயல் நாட்டுக் கொள்கையைப் பின்பற்றினுலும் சுயநலக்காரர் கள் தாக்கத்தான் செய்வார்கள்.

20-வது நூற்ருண்டில் பழைய நிலையான கொள்கைகள் மாறியதால், அமெரிக்காவின் உள்நாட்டு உறவு பலவிதமான அரசியல் சங்கடங்களுக்குள்ளாகியிருக்கிறது. உதாரணமாகத் தொல்லைதரும் கூட்டுறவுகளில் சிக்கிக் கொள்ளாமல், ஒதுங்கி இருக்க வேண்டும் எனும் வாஷிங்டனின் கொள்கையை அமெ ரிக்கா கைவிடவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது.

பிரான்ஸின் உதவியால் சுதந்திரம் பெற்ற சில வருஷங் களுக்கெல்லாம் 1793-ல்பிரிட்டனுக்கும், பிரான்ஸுக்கும், நடந்த யுத்தத்தில் நடுநிலைமை வகிக்க வேண்டும் என்று ஜனுதிபதி வாஷிங்டன் திட்டம் செய்தார். இப்படி அவர் முடிவு செய்த தற்குக் காரணம் புதிய குடியரசு பலம்பெறச் சற்று அவகாசம் வேண்டும் என எண்ணியதுதான். பிரான்ஸின் உதவிக்கு நன்றி செலுத்துவதற்காக அமெரிக்கா, ஐரோப்பிய ராக்ஷசர்களுடன் பலப் பரீட்சை செய்ய வில்லை. அவர் தனது இறுதிப் பிரசங்கத் தில் அமெரிக்க மக்களுக்குப் பின்வரும் உபதேசம் செய்தார்.

> "அயல் நாடுகளுடன் வர்த்தக உறவு கொள்ள லாம். ஆனுல், கூடியமட்டில் அரசியல் உறவு கொள்ளுதல் கூடாது. அயல் தேசத்தொந்தரவுகளைச் சமாளிப்பதில் பொருள் நஷ்டத்தை சகித்துக்கொள் ளும் காலம் வரும். நமது நாட்டைப் பறிக்க முடியாது என்பதை அறிந்து கொண்டு சண்டைக்கார நாடுகள்

நமக்கு ஆத்திரம் மூட்டத் தயங்கலாம். நீதியான நமது நலன்களைக் காக்க யுத்தம் புரியவேண்டுமா, சமாதானமாய் இருக்க வேண்டுமா என்பதை நம் இஷ்டப்படி முடிவு செய்து கொள்ளும் காலம் வரும்.''

1823-ல் ஜனாதிபதி மன்ரோ தமது கொள்கையைப் பிரகடனம் செய்தார் :

''ஐரோப்பாவைக் கலக்கிவந்த பல யுத்தங்களின் தொடக்கத்திலேயே, ஐரோப்பியத் தொடர்பு பற்றிய நம் கொள்கைகளை வெளியிட்டிருக்கிறோம். ஐரோப்பிய நாடுகளின் உள்நாட்டு விவகாரங்களில் நாம் தலையிடலாகாது என்பதுதான் அந்தக் கொள்கை.''

இந்தப் பிரகடனம் கிரேக்கர்களின் சுதந்திர யுத்த சம்பந்தமாக வெளியிடப்பட்டது. அந்த யுத்தத்தில் பல அமெரிக்கர் அனுதாபம் காட்டினர். ஐரோப்பாவில் என்ன நிகழ்ந்தாலும் சரி; அதில் அமெரிக்கா புகலாகாது என்பதுதான் நமது மக்களில் பெருவாரியானவர்களின் ஆதரவு பெற்ற அமெரிக்கர் கொள்கை.

இந்தக் கொள்கையை மேற்கொண்டுதான் 1914-1917 யுத்தத்தில் அமெரிக்கா நடுநிலைமை வகிக்க வேண்டுமென விரும்பினர். ஆனால், துரிதப் போக்குவரத்து சாதனத்தினால் அட்லாண்டிக் மகா சமுத்திரத்தை விரைவாகக் கடப்பது சாத்தியமாகி விட்டது. மேலும், அமெரிக்கக் கொள்கைகளுக்கு ஜீவாதாரமான கடல் சுதந்திரத்துக்கு ஆபத்து ஏற்பட்டு விட்டது. சந்தர்ப்பங்களின் நிர்ப்பந்தம் வில்ஸனின் மனம் மாறச் செய்தது. அவரும் 1917-ல் ஜெர்மனியுடன் யுத்தம் தொடுக்க காங்கிரஸின் அனுமதி கோரினார். யுத்தம் முடிவதற்குள் அமெரிக்கா சர்வதேச சங்கத்தில் சேர செனட் இணங்க வேண்டும் என எவ்வளவோ வாதாடிப் பார்த்தார். அமெரிக்கர்களில் பாதிக்கு மேற்பட்டவர்கள் அமெரிக்கா சர்வதேச சங்கத்தில் சேருவதை ஆதரித்தும் செனட் இணங்க மறுத்தது.

ஆனால், அமெரிக்கா தனித்து நிற்கவேண்டும் எனும் பழங் கொள்கை மடிந்து விடவில்லை. இரண்டாவது யுத்தம் ஆரம்

பித்தது. நாஜிகள் ஐரோப்பாவில் தங்கள் அண்டை நாட்டினரை மட்டும் தாக்கவில்லை; சுதந்திர உலகத்தையே தாக்கினர் என்று ஒப்புக்கொள்ள அமெரிக்கர் தயங்கினர். பெர்ல் துறைமுகத்தை ஜப்பானியர் தாக்க மட்டும், ஜெர்மானியர் இதாலியர், அமெரிக்கா மீது போர் தொடுக்கு மட்டும் இந்தத் தனித்திலங்கும் கொள்கைபலம் பெற்றிருந்தது. இன்றும் அந்தக் கொள்கை அமெரிக்க அரசியலில் லேசாக நடமாடி வருகிறது.

இந்தக் கொள்கைக்கு அடிப்படைக் காரணம் அமெரிக்கருக்கு ஐரோப்பாவிடம் உள்ள வெறுப்புதான். ஆனால் இதே வெறுப்பு பிற கண்டங்களிடம் அவர்களுக்கு இல்லை. "அமெரிக்கர் மேற்கே பார்த்துக் கொண்டுதான் பிறந்தனர்" என்று கூறுவதுண்டு. தனித்திலங்குவது என்றால் மேற்கே சைனா வரை உள்ள நாடுகளிடமெல்லாம் தொடர்பு கொள்ளலாகாது என்பதில்லை.

அயல் நாட்டுக் கொள்கையில் விவாதத்திற்கிடமான மற்றொரு பிரச்னை உயர்ந்த காப்பு வரிகளைக் குறைப்பதுதான். ஜனநாயகக் கட்சியினர் என்றுமே காப்பு வரிக் குறைப்பில் நம்பிக்கை கொண்டவர்கள். ஆகையால் 1933-ல் அவர்கள் அதிகாரத்திற்கு வந்தவுடன் காப்பு வரி குறையவேண்டும் என அவர்கள் கட்சியினர் வற்புறுத்தினர். தெற்கே தொழில் பெருக்கத்தினால் கட்சி வாதத்தின் கடுமை ஓரளவு மங்கி இருக்கிறது. தெற்கத்தி ஜனநாயகக் கட்சினர் தங்கள் தொழிலுக்குப் பாதுகாப்புக் கோரினர். ஆனால், சரித்திரப் போக்கு காப்பு வரிக்கு எதிராயிருக்கிறது.

முதல் மகா யுத்தத்தில் அமெரிக்கா கடன்பட்ட நாட்டிலிருந்து, கடன் கொடுக்கும் நாடாக மாறியது. அதற்குப் பிறகு நாட்டினர் அமெரிக்கக் கோதுமையோ, மோட்டாரோ வாங்க வேண்டுமானால் அவைகளின் பெறுமானத்தை டாலராகவோ அல்லது அதற்கு ஏற்ற சரக்குகளை அமெரிக்காவுக்கு விற்றோ தான் வாங்க வேண்டும். இதற்கு மேல் தாங்கள் வாங்கினதற்குப் பிற நாட்டினர் வட்டி கொடுக்க விரும்பினால் அந்தத் தொகைக் கேற்ற சாமான்களை அதிகப்படியாகக் கொடுத்தாக வேண்டும். சுருங்கக் கூறின் கடனையும் திரும்ப வாங்கிக்

கொண்டு, அமெரிக்கச் சரக்குகளையும் வெளி நாடுகளில் விற்க வேண்டுமானால் அமெரிக்கா ஏற்றுமதி செய்வதை விட அதிகமாக இறக்குமதி செய்யவேண்டும். கடன் கொடுக்கும் நாடு தேவைக்கு மீறி இறக்குமதி செய்யா விட்டால் கஷ்டம் வந்து விடும். ஆகையால், காப்பு வரிகளைக் குறைக்க வேண்டும்; அப்படிக் குறைக்கா விட்டாலும் கஷ்டம் வரும்.

ஆனால், அமெரிக்கத் தொழில் வழக்கமாக பிறநாட்டுச் சரக்குக்கு அதிக வரி விதித்தே செழித்தது. இதனால் அரசியல் செல்வாக்கும் பெருகிற்று. முதல் மகா யுத்தத்திற்கு 12 ஆண்டுகளுக்குப் பின்பும் அதிகமான காப்பு வரிவிதிக்கப்பட்டு வந்தது. அதனால் கஷ்டம் ஏற்பட்டது. யுத்தக் கடனெல்லாம் மீளாக் கடனாயிற்று. மேற்கத்தி நாகரிகத்தின் பொருளாதார அமைப்பும் குலைந்தது. பெரிய பொருளாதார மந்தம் ஏற்பட்டதற்கும் உயர்ந்த காப்பு வரியே காரணம்.

இரண்டாவது மகா யுத்தத்திற்குப்பின் யுத்தக் கடன் பிரச்னை அவ்வளவு கவலை அளிப்பதாயில்லை. ஏனெனில் புதிய கடன் திட்டப்படி அமெரிக்க ஆயுதங்கள் நேச நாடுகளுக்கு விற்கப்பட்டன. ஆனால், விலைப்பணம் பூராவும் உடனே கொடுக்க வேண்டியதில்லை. அப்புறம் நிவாரணத்திற்கும், புனரமைப்புக்கும் ஏராளமாக அமெரிக்கப் பணம் இலவசமாக அளிக்கப்பட்டது. வருஷத்திற்கு லட்சக் கணக்கான டாலர்கள் அமெரிக்கா இவ்வாறு கொடுத்து வரும்வரையில் வியாபாரத்தில் வரவு செலவு நேராக வேண்டிய அவசிய மில்லை. ஆனால், பண உதவி செய்ய அமெரிக்கா விரும்பா விட்டால் அன்னிய நாட்டு வியாபாரம் நிரம்பச் செய்ய வேண்டும், உலக நிலையினால் ஏற்பட்ட "வியாபாரம் செய், பண உதவி வேண்டாம்'' எனும் கொள்கை பல அமெரிக்கர் கொண்டுள்ள பரம்பரை நம்பிக்கைக்கு மாறாயிருக்கிறது. இம்மாதிரிப் பல்வேறு உணர்ச்சிகளைக் கிளப்புவதால், அயல் நாட்டுக் கொள்கையை வகுப்பது எளிதான காரியமல்ல.

மேற்கூறப்பட்ட கொள்கை மாறுதலால் அநேக அமெரிக்கருக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. ஆனால், மற்றும் சில மாறுதல்கள் அவ்வளவு அதிர்ச்சி அளிக்கவில்லை.

இவைகளில் மன்ரூே கொள்கை ஒன்று. இது முதன் முதலில் பிரிட்டிஷ் ஆட்சியினர் யோசனையின் மூலம் வகுக்கப் பட்டது. பிரிட்டனும், அமெரிக்காவும் சேர்ந்து லாடின் அமெ ரிக்க நாடுகள் ஐரோப்பிய நாடுகள் தாக்காமல் பாதுகாக்கலாம் என பிரிட்டன் யோசனை கூறிற்று. பிரான்ஸ், ஸ்பெயின் அல்லது ருஷ்யா மேற்கத்தி உலகில் புதியசாம்ராஜ்யம் அமைப் பதை பிரிட்டனோ அமெரிக்காவோ விரும்பவில்லை. இந்த யோச னையை மேற்கொள்ளுவதன் மூலம் பிரிட்டனிடம் சிக்கிக் கொள்ளுவதை ஜனாதிபதி மன்ரூே விரும்ப வில்லை. ஏனெனில் பிரிட்டனுக்கு இணங்கினால் பின்னர் அமெரிக்காவுக்குப் பிடிக் காத கொள்கைகளை, பிரிட்டன் மேற் கொள்ளுமானால் சங்கடம் ஏற்படலாம் என அவர் அஞ்சினார். ஆகையால் அவர் 1823 டிசம்பர் 2-தேதி யன்று ஐரோப்பாவுக்கு, அமெரிக்காவிலுள்ள இடங்களை விஸ்தரித்தால், அது அமெரிக்காவின் அமைதிக்கும் பத்திரத்திற்கும் பங்கம் விளைப்பதாகும் என அறிவித்தார். கடலாதிக்கம் வகிக்கும் பிரிட்டிஷ் கடற்படை பிரிட்டிஷ் நலன் களை உத்தேசித்து மன்ரூே கொள்கையை ஆதரிக்கலாம்.

இந்த நிலைமை அந்த நூற்றாண்டு பூராவும் நீடித்தது. 1900-க்கு பிறகு லாடின் அமெரிக்க நாடுகளில் கடன் வசூலிப் பது மன்ரூே கொள்கைக்கு ஆபத்தாயிருந்தது. கரிபியன் கடற்கரையோரங்களில் தங்களுக்கு வரவேண்டிய கடன்களை வசூல் செய்வதற்காக ஐரோப்பியர் தங்களுடைய ராணுவ பலத்துடன் அங்கேயே தங்கலாம். ஆகையால், மன்ரூே கொள்கையின் அனுபந்தமாக ஜனாதிபதி தியடோர் ரூஸ்வெல்ட் தமது கொள்கையைப் பிரகடனம் செய்தார். ஐரோப்பிய லேவாதேவிக்காரர்கள் இங்கு வரலாகாது என எச்சரித்தார். அவர்களுக்கு வரவேண்டிய கடன்களை அமெரிக்கா வசூல் செய்யும் பொறுப்பேற்றது. சுங்க வரிகள் வசூலித்து அமை தியை நிலை நாட்டி, ஊழல்களைக் களைந்து, கடன்பட்ட நாடு களை கை தூக்கி விட்டார்.

இந்தப் பணி செய்வதற்காகக் கடற்படையைப் பயன்படுத் தியதால் லாடின் அமெரிக்கர்களுக்கு மனத்தாங்கல் ஏற்பட்டது. ஆகையால், ரூஸ்வெல்டின் கொள்கையை ஜனாதிபதி ஹெர்பர்ட்

ஹூவர் ரத்து செய்தார். லாடின் அமெரிக்கரின் நாட்டைப் பெறுவதற்காக அவர் 1928-ல் அவர் தேர்தலுக்கும், 1929-ல் அவர் பதவி ஏற்பதற்கும் இடையில் அவர் இந்நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்தார். இந்த நேசப்பான்மை கொள்கை பிராங்க்லின் ரூஸ்வெல்ட்டாலும், ட்ருமனாலும் தொடர்ந்து கையாளப்பட்டது. மற்ற அமெரிக்க ராஜ்யங்களின் உள் நாட்டு விவகாரங்களில் தலையிடுவதில்லை என்பதை அமெரிக்கா ஒப்புக் கொண்டது. புது உலகத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு எல்லா அமெரிக்க நாடுகளுக்கும் சமமாக உள்ளது என்பது ஒப்புக் கொள்ளப்பட்டது.

மன்ரோகொள்கையில் ஏற்பட்ட இந்த மாறுதலால் சுதந்திர உலகத்தைப் பாதுகாப்பதில் ஒரு பொதுவான தர்ம சங்கடம் ஏற்படுகிறது. சுதந்திர நாடுகள் அமெரிக்கக் கடற்படை தங்கள் வட்டத்தில் அமைதியை நிலைநாட்ட பிரவேசிப்பதை வரவேற்கா அதே சமயத்தில் தென் அமெரிக்காவிலும், பிற இடங்களிலும் சர்வாதிகார ஆட்சி நடத்தும் நாடுகளை அமெரிக்கா ஆதரிப் பதைச் சுதந்திர உலகிலுள்ள தாராள நோக்குள்ளவர்கள் வெறுக்கின்றனர். இந்த அமெரிக்கப் போக்கைக் கம்யூனிஸ்ட் கட்சி தனது பிரசாரத்திற்குப் பயன்படுத்திக் கொள்கிறது.

100 ஆண்டுகளாக அநேகமாக நிலவிவரும் இந்தத் தர்ம சங்கட நிலைமைக்கு அமெரிக்கா பின் வரும் பதிலைக் கூறுகிறது; சர்வாதிகாரம் வகிக்கும் சிறு நாட்டை ஒரு அன்னியன் கைப் பற்றுவதால் ஏற்படும் அபாயத்தைவிட அச்சிறு நாட்டில் சர்வாதிகாரம் நிலவுவது அவ்வளவு அபாயமல்ல. ஆகையால் ஒரு நாடு ஜனநாயக ஆட்சி அமைக்க முடியாவிட்டாலும் அது தன் சுதந்திரத்தைக் காத்துக்கொள்வதில் அமெரிக்கா உதவி செய்ய விரும்புகிறது.

கடலோடும் சுதந்திரத்தை அமெரிக்கர் பிரிட்டிஷாரிட மிருந்து பெற்றனர். பிரிட்டிஷார் எலிஸபெத் ஆட்சி காலத்தி லிருந்து சுதந்திரமாகக் கடலோடி உலகெங்கும் வர்த்தகம் செய்யும் உரிமையை வற்புறுத்தி வந்திருக்கின்றனர். ஆனால், சர்வாதிகார ஆக்ரமிப்பாளர்களுக் கெதிராகச் சுதந்திர உலகை ஒன்று கூடிக் காப்பதற்கு இந்தக்கடலோடும் சுதந்திரம் ஏற்ற

தாயில்லை. வர்த்தகம்செய்யும் உரிமை, அதுவும் யுத்தகாலத்தில் நடுநிலைமை நாடுகள் வர்த்தகம் செய்யும் உரிமையினுல் முதல் உலக யுத்தக்காலத்தில் தகராறு ஏற்பட்டது. தங்கள் சுதந்திரம் பறிபோகிறதே என்று ஜனுதிபதி வில்ஸன் ஜெர்மனியோடும் பிரிட்டனேடும் கோபாவேசமாக வாதம் செய்தார். ஆனல், இவ்விரு நாடுகளும் அமெரிக்கக் கப்பல்கள் பிறநாடுகளுடன் வியாபாரம் செய்ய அனுமதிக்க வில்லை. அப்படி அனுமதித் தால் யுத்தத்தில் தாங்கள் தோற்று விடுவோம் என அவர்கள் அஞ்சினர். கடைசியாக அமெரிக்காவும் இந்த யுத்தத்தில் சேர்ந்து இந்தப் பிரச்னைக்கு வழி காணவில்லை.

இரண்டாவது உலக யுத்தத்தில் நடுநிலைமைச் சட்டம் மூலம் யுத்த களத்திற்கு அமெரிக்கர் போவதைத் தடுத்தது. ஆனல், இந்த யுத்தத்திலும் அமெரிக்கர் நேசக் கட்சியுடன் சேரச்சேர நடுநிலைமை கைவிடப் பட்டது.

கடைசியாக 1945-லிருந்து நடக்கும் பிரசாரப் போராட்டத் தில் சோவியத் நாடுகளுடன் நடக்கும் வர்த்தகத்தைக் கட்டுப் படுத்த வேண்டும் என்பதில் அமெரிக்கா உலகத்திற்கு வழி காட்டிற்று. சந்தர்ப்பத்திற் கேற்றவாறு பரிகாரங்களும் மாறிவரு கின்றன. ஆனல், கடல் சுதந்திரத்தைப் பற்றிச் சூடான விவா தம் நடப்பது தணிந்து விட்டது. கட்டுப்பாடு அவசியமா என்பது பற்றி விவாதம் இல்லை. எந்த அளவுக்குக் கட்டுப்பாடு செய்தால் நற்பயன் கிட்டும் என்பது பற்றியே சர்ச்சை செய் கிருர்கள்.

கடல் சுதந்திரத்தை ஒட்டியதுதான் சீனுவில் யார்வேண்டு மாலுைம் நுழையலாம் எனும் பிரச்னையும், சீனுவுடன் வர்த்த கத்தில் அமெரிக்கா சம உரிமை வேண்டுமென வற்புறுத்தியது. ஆனல், சீனுவில் கம்யூனிஸ்ட் புரட்சி ஏற்பட்டபின் இந்தப் பிரச்னை எழவேயில்லை.

கடைசியாக அமெரிக்காவின் அயல் நாட்டுக் கொள்கை 1898-க்குள் ஒரு சமயம் சாம்ராஜ்ய கட்டத்தை அடைந்தது. 1898 ஸ்பானிஷ் சண்டைக்குப் பிறகு இந்தக் கட்டம் முற்றுப் பெற்றது. 19-வது நூற்ருண்டில் அமெரிக்கா பஸிபிக் மகா சமுத்திரத்தை நோக்கியும், தெற்கே ரியோகிராண்டே வரையும்

விரிவடைந்தது. இந்த விஸ்தீரணப் படலத்தில் 1846—1848-ல் நடந்த மெக்ஸிக் சண்டை மிகக் கடுமையானது. க்யூபாவை யும் மற்றும் கரிபியன் பிராந்தியத்தையும் கைப்பற்றும் யோசனை யும் இருந்தது. ஆனால், இதனால் எவ்வித சாம்ராஜ்ய வேட்டை யும் தொடங்க வில்லை.

1898-ல் ஸ்பானிஷ் சண்டைக்குக் காரணம் கியூபா வாசி களிடம் பொது மக்கள் காட்டிய அனுதாபமும், ஸ்பெயின் மீது ஆக்ரமித்து வரும் ஜெர்மனியர்கள் கியூபாவையும் கைப்பற்று வரோ என்கிற அச்சமும்தான். இந்தச் சண்டைக்குப் பிறகு தங்கள் வசம் கியூபா, புவர்ட் டோரிகோ, பிலிப்பைன் தீவுகள் மூன்றும் இருப்பதைக் கண்டு அமெரிக்கர்களே அதிக ஆச்சர்ய மடைந்தனர்.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் ருடியோர்டு கிப்ளிங் எனும் ஆசிரியர் எழுதிய கவிதையில் "வெள்ளையர் சுமை"யைத் தாங் கும்படி அமெரிக்கரை அழைத்தார். இந்தப் புது ஸ்தலங்களை என்ன செய்வது என்பது பற்றி முடிவு செய்கையில் சாம்ராஜ்ய தத்துவத்தைப்பற்றி நாடெங்கும் பலத்த விவாதம் நடந்தது. சாம்ராஜ்ய எண்ணத்திற்கு விரோதமாகவே மக்கள் அபிப்பிரா யம் தெரிவித்தனர். மாறுபட்ட பாஷை பழக்கங்களுடைய எட்டாக்கையிலுள்ள மக்கள்மீது ஆட்சி நடத்தலாகாது என்றே தற்போதைய அமெரிக்கர்களில் பெரும்பாலோர் நினைக் கின்றனர். அன்னிய நாட்டில் பறக்கும் அமெரிக்கக் கொடியை தாழ்த்தலாகாது எனும் சுலோகத்தில் இப்பொழுது உற்சாக மில்லை. ஜெர்மனி அல்லது ஜப்பான் போன்ற நாடுகளை அமெ ரிக்கர் ஆள நேரிட்டால் அவர்களின் பிரதானநோக்கம் சீக்கிரம் தாய் நாடு திரும்ப வேண்டும் என்பதுதான்.

அரசியல் கட்சிகள் உள்நாட்டு விவகாரங்களில் இயங்கு வதுபோல் அயல் தேச விஷயங்களில் கருத்துக் கொள்ளவில்லை. அயல்தேசப் பகைவர்கள் அல்லது நண்பர்களுடன் நடவடிக்கை எடுப்பதில் தேசாபிமான நோக்குடன் இரு கட்சி ஒத்துழைப்பு ஆர்வமிருக்கிறது. பொறுப்பற்ற மேடைப் பிரசங்கிகளுக்குத் தான் இந்த உணர்ச்சி இருக்காது, ஆனால், பொதுப் பணத் தைச் செலவிடுவது சம்பந்தமாக ஏற்படும் நியாயமான அபிப்பி

ராய பேதத்தால்தான் அயல் நாடுகளுக்கு உதவிபோன்ற பிரச்னைகளில் விவாதம் ஏற்படுகிறது. மேலும் காங்கிரஸ் உறுப்பினர் தன்னல நோக்குள்ள பொருளாதார அக்கறையுள்ளவர்களை மதிக்கவேண்டி இருக்கிறது. அப்படி மதிக்கத் தவறினுல் அவருடைய ஸ்தானத்திற்கு இந்த நலன்களில் அக்கறையுள்ளவர் வந்து விடுவார். உலகத்தில் பல மாறுதல்கள் ஏற்பட்டதன் விளைவாகப் பழைய கொள்கைகளை மாற்றிக்கொள்ள நேரிடுவதால் அரசியல் விளைவுகள் ஏற்படுவதையும் கவனிக்கவேண்டும். உலக நிலை அமெரிக்க மக்களைப் புது வழிகள் காணத் தூண்டுகிறது. நீடித்து விரிவாக அரசியல் விவாதம் செய்தால் தான் தாங்கள் வேண்டுவது என்ன என்பதை அறிந்து அமெரிக்கர் ஒரு முடிவுக்கு வர இயலும்.

## 14. அரசியலும் ஜனநாயகமும்

உலகில் மனிதப் பண்புகள் நிறைந்த நாடுகளில் ஒன்று அமெரிக்கா. மனிதப் பண்புகளே அற்ற நாடு ருஷ்யா. இப்படி எதிரும்புதிருமாய் உள்ள இரு நாடுகளிடமும் குற்றம் குறைகள் இருக்கின்றன. ஆனுல், எவ்விதமான தவறுகள் செய்கிருர்கள். என்பதில் மிகுந்த வித்தியாசம் உண்டு. பொருளாதார அமைப்புகள், மதப்பற்று, சிறுபான்மையோரிடம் அரசாங்கப்பான்மை முதலியவற்றில் மாறுபாடுகள் காணப்படுகின்றன. இரு நாடுகளுக்குமுள்ள வித்தியாசத்தை அரசியல் துறையில் தெளிவாக்கிக் காட்டலாம்.

ருஷ்ய ஆட்சியினர் கூறுவது உண்மையானுல் ருஷ்ய மக்களும் அரசியல் பற்றிச் சிந்தனை செய்து செயல் புரிகின்றனர். நிர்ப்பந்த தொழில் முகாம்களில், 40 லட்சத்திலிருந்து, 200 லட்சங்கள் வரை அரசியல் கைதிகள் அடைத்துவைக்கப் பட்டிருப்பதாக வதந்திகள் நிலவுகின்றன. நியாயமாகவோ. அநியாயமாகவோ இவர்களெல்லாம் அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். அரசியல் பிரச்னைகளைப் பற்றிச் சிந்தித்தனர் என்ற குற்றச்சாட்டின் பேரிலேயே தண்டிக்கப்பட்டனர்.

ருஷ்யாவில் அரசியல் குற்றத்திற்குத்தான் அதிகக் கடுந் தண்டனை அளிக்கப்படுகிறது என்பதிலிருந்தே ருஷ்ய அரசாங்க முறையின் மிருகத்தன்மையை நாம் அறிந்து கொள்ளலாம்.

மற்ற ஜனநாயக நாடுகள்போலவே, அமெரிக்காவிலும் அரசியல் குற்றமாகக் கருதப்படுவதில்லை. சிலரகமான அரசியல் குற்றமாகலாம். அரசியல் என்பது மனிதப் பண்பு நிறைந்தது. ராஜ தந்திரத்திலிருந்து, லஞ்ச ஊழல் வரை அரசியல் ஊடுருவி நிற்கிறது.

பிரஜா உரிமைகள் பற்றி இரு நாடுகளுக்குள் கருத்து வேற்றுமை இருக்கிறது. இரு நாடுகளிலும் பல்வேறு பழக்க வழக்கங்கள், பல பாஷைகள் பேசி மக்கள் பெருவாரியாக இருக்கின்றனர். ஒரே மத்திய ஆட்சியின் கீழும், ஒரே பொருளாதார அமைப்பின் கீழும் இம்மாதிரி பல்வேறு மக்கள் வாழ்ந்தால் பல விதமான தகராறுகள் ஏற்படுவது இயல்புதான். இம்மாதிரி தகராறுகளை இரு நாடுகளும் தீர்ப்பதில் வெவ்வேறு முறைகளைக் கையாளுகின்றன.

சோவித் நாட்டில் ஏதாவது ஒருவித ஜாதி சோவியத் கூட்டத்தில் ஒன்றமுடியாத தனிப் பழக்க வழக்கங்கள் இருந்தால், அம்மக்கள் பயனற்றவர்களாகி விடுகின்றனர். அவர்களை ஒழித்துக்கட்ட முடிவுசெய்து விடுகின்றனர். மத்திய அரசாங்கத்திலிருந்து சாமான்கள் ஏற்றிச் செல்லும் ரயில்களை அனுப்பி இவர்களை அப்புறப்படுத்துகின்றனர். இவர்களில் சிலர் அடிமை முகாம்களில் மடிந்துவிடுவர்; வட ஆர்ட்டிக் பனிக்கடல் அருகே சிலர்குடியேற்றப்படுவர்; மற்றும் சிலர் ரஷ்யஜனக் கூட்டத்தில் இனம் தெரியாமல் மறைந்துவிடுவர். இவர்கள் தங்களுக்கென மதம், பண்பாடு உள்ளவர்கள் என்று சொல்லிக் கொள்ளாமல் உலகிலிருந்தே அகற்றப்படுவர்.

ருஷ்யாவில் செல்வாக்குள்ள பகுதியினர் தங்களுக்குக் கீழ்ப்பட்டவர்களைக் கொன்றழிக்கும் முறை. மிருகங்கள் தங்களுக்குள் பலஹீனமானவைகளைக் கொன்று தின்பதற்கொப்பாகும். ஒரு போலீஸ் ராஜ்யத்தில் எஞ்சி நிற்பவர்கள் நாகரிகமானவர்களல்ல; கல்நெஞ்சர்களே.

அமெரிக்காவிலும் அனேக ஜாதியினர், பண்பாடுகள், மதங்கள் இருக்கின்றன. அவைகளில் சில பெரும்பாலோருக்கு முற்றிலும் மாறுபட்டவை. இவர்கள் மற்றவர்களுடன் ஒன்றரக் கலந்துபோகும் காலம் வருமா என்பது சந்தேகம்தான். இங்கு வியாபாரப் போட்டிகள் உண்டு; இனத் தகராறுகள் உண்டு ; இவைகளால் கடுமையான போராட்டங்கள் நிகழ்வதுமுண்டு. மதத் தகராறுகள் நிகழ்வதுமுண்டு. வெள்ளையரும், நீக்ரோவும் யூதரும், கிருஸ்தவர்களும், கத்தோலிக்கர்களும், புரொடெஸ்டண்டுகளும் தங்களுடைய சந்தேகங்கள், விரோத மனப்பான்மைகளை விட்டு, ஒன்ருக வாழ்ந்து, உண்டு எல்லோரும் சமம் என எண்ணி வாழ்வார்களா என்பதும் சந்தேகம் தான். அனேகர் தங்களுக்கருகில் வாழும் இனத்தவரை வெறுக்கின்ருர்கள் ; அவர்களைக் கண்டு பயப்படுகின்றனர். தங்கள் வெறுப்புக்குள்ளான சிறுபான்மையினரின் வாழ்க்கை சந்தர்ப்பங்களைக் குறைக்கும் சட்டங்கள் இயற்றலாம். இதெல்லாம் மனித இயல்பு தான்.

மாறுபட்ட மதம், இனத்தைச் சேர்ந்த மக்களுக்குள் நேசமும், நல்லெண்ணமும் நிலவுவதும் இயல்புதான். ஒரு ஜன நாயக சமூகத்தில் இம்மாதிரி நற்குணங்கள் நிலவுவது நாளா வட்டத்தில் நன்மையையே பயக்கும். பல வகுப்பினர் ஒன்றுபட்டு வாழும் நிலை ஏற்படுவது நிதானமாகத் தான் நடக்கும். ஆனுல், அமெரிக்காவில் இவ்விஷயத்தில் முன்னேற்றமடைவதற்கான பல அறிகுறிகள் தென்படுகின்றன, அமெரிக்க சுபாவத்தை வளர்க்கும் ஸ்தாபனங்களிலும், பழக்கவழக்கங்களிலும் சிறப்பிருக்கிறதுஎன்பதை இந்தமுன்னேற்றத்தின்மூலம் அறிந்து கொள்கிருேம். சங்கடமான இனப் பிரச்சினையைத் தீர்க்க, நமக்கு வேண்டாத மக்களைக் கொன்றுறழித்துவிட, அமெரிக்கர் தங்கள் அரசாங்கத்திற்கு அதிகாரமளிக்கவில்லை. அதற்குப் பதிலாகக் கல்வி, சட்டம், பொதுஜன விவாதம் எல்லாம் கலந்து முறையில் பிரஜைகளின் உரிமைகளைப் பாதுகாத்து விஸ்தரிக்கத் தக்க வழியைத் தேடிக்கொண்டிருக்கின்றனர்.

அமெரிக்காவில் வெள்ளையர், நீக்ரோக்களைக் கொடுமையாக நடத்துகின்றனர் என்று அமெரிக்க நீக்ரோக்களிடையே

பிரசாரம் செய்து வருகின்றனர். ஆனால், அமெரிக்கர் இந்தப் பிரசாரத்திற்குத் தப்பமுடியாது. இத்துறையில் ஏற்பட்டுள்ள அபிவிருத்தியைக் காட்டி இப்பிரசாரத்தை எதிர்க்கவேண்டும். சோவியத்தினர் கைக்கொள்ளும் சிறுபான்மையினரை ஒழித்து, குற்றத்தை மூடிவைக்கும் வழியை அமெரிக்கர்கள்பின்பற்றமாட்டார்கள். ஜனநாயக முறையில் மக்கள் உரிமைகளைப் பெற முயற்சிப்பதுதான் அமெரிக்கர் பின்பற்றும் வழி. ஜனநாயக முறை நிதானமானது. ஆனால், உருவான பயன் அளிக்கக் கூடியது.

எவ்வளவோ குறை இருப்பினும் அமெரிக்காவில் அன்னியர் பார்த்து பரவசமடையத் தக்க சில நற்குணங்கள் இருப்பதற்குச் சான்றுகள் இருக்கின்றன. வெளி நாடுகளிலிருந்து, இந் நாட்டை மேலோட்டமாகப் பார்ப்பவர்களில் பெரும்பாலோர் இதையே தங்கள் தாயகமாகக் கொண்டுவிடுகின்றனர். அமெரிக்கரின் சுதந்திரத்தில் எவ்வளவோ குறைபாடுகள் காணப்பட்டாலும் அது அவர்கள் வாழ்க்கையைப் பலவகைகளில் வளமாக்கி வளர்ந்தோங்கச் செய்கிறது. அமெரிக்கசுதந்திரத்தின் இந்தச் சிறப்பான அம்சத்திற்குக் காரணம் இந்நாடு அமைந்த தன்மையே ஆகும்.

முதலாவது, அமெரிக்காவுக்கு வந்தவர்கள் சிறைவாசம் போன்ற சூழ்நிலையிலிருந்து விடுபட்டவர்கள். அவர்கள் வந்தடைந்த புதுநாட்டில் வாழ்க்கை கரடுமுரடாகவும், அபாயமாகவுமிருந்தது. அனேகர் பட்டினியாலும், குளிரினாலும் மாண்டு போயினர். மற்றும் பலர் அந்நாட்டு இந்தியரால் துன்புறுத்தப்பட்டனர். ஆனால், அவர்கள் இங்கு சுதந்திரத்தைக் கண்டனர், தங்கள் விலங்குகள் அறுபட்டுப் போனதை அறிந்தனர்.

இரண்டாவதாக, மூன்று நூற்றாண்டுகளாக அமெரிக்கர் இந்த நாட்டின் அமைப்பின் மூலமே பாதுகாப்பும், வாழ்க்கை, வசதியும் பெற்றனர். சுதந்திரம் இயல்பாகவே கிடைத்தது. நாட்டின் வளர்ச்சியில் எல்லாக் கட்டங்களிலும், பிரிட்டனோ, மற்றெந்த நாடுகளோ 3000 கடல் பரப்பைத் தாண்டி அனுப்பும் படைகளை, எதிர்த்து நிற்கும் வீரர்களை ஒன்று திரட்ட

முடிந்தது. இதில் ஆரம்ப சௌகரிய நிலை 19-வது நூற்றாண்டுத் தொடக்கத்தில் மற்றொரு காரணத்தால் பலம் பெற்றது. ஐரோப்பிய நாடுகளுக்குள் பல சண்டைகள் நிகழ்ந்ததால் அவைகள் எதுவும் அமெரிக்கா மீது கண் வைத்து அதன் வளர்ச்சியைப் பாழ்படுத்தவில்லை.

பூகோள அமைப்பினால் அமெரிக்கா பெற்ற மற்றொரு சௌகரியம் அதன் மேற்குப் புறத்தில் ஏராளமான நிலம் காலி இருந்ததுதான். சுதந்திரம் என்றால் ஒரு இடத்தை விட வேறொரு இடத்திற்குச் செல்லும் திறமை என்ற கூற்றில் நிரம்ப உண்மை இருக்கிறது. மக்கள் திடீரெனக் கிளம்பி வேறு இடம் செல்லக் கூடியவர்கள் என்றால் அவர்களைப் பிறர் அடக்கிஆள முடியாது. வெளியேறும் சுதந்திரம்தான் அமெரிக்க வாழ்க்கையில் இன்றும் சிறப்பான அம்சம். எங்கும் நிரம்பத் திறந்த வெளி இருந்த வரையில் அமெரிக்கர் அதிகாரத்தை அவ்வளவாக மதிக்காமல், தனிப்பட்டோர் உரிமையில் மிகப் பற்றுடனும் வாழ்ந்தனர்.

கடைசியாக அமெரிக்கர் ஆங்கிலேயரின் சட்டங்களையும், பரம்பரை பாத்தியம்போல் பெற்றனர். இந்தச் சட்டங்களும் ஸ்தாபனங்களும், மக்களுக்கும், மன்னருக்கும் நடந்த கடும் போராட்டத்தின் பயனாககே கிடைத்தன. பிரஜையை அரசாங்கத்தின் அக்கிரமத்தினின்று காப்பாற்றுவதற்காக; இவை வகுக்கப்பட்டு அமைந்தன. அமெரிக்க அரசியலமைப்புக்கு ஐந்தாவது திருத்தம் கூறுகிற மாதிரி அரசாங்கம் சுதந்திர பிரஜையின் உயிரையோ, சுதந்திரத்தையோ, சொத்தையோ சட்டப் பூர்வமாக அல்லாமல் பறிக்கலாகாது. ஒரு பிரஜையினுடைய சொத்தை நஷ்ட ஈடு கொடுக்காமல் பொது உபயோகத்திற்குக் கூட எடுத்துக்கொள்ளலாகாது.

அமெரிக்கர் பெற்ற இந்த ஸ்தாபனங்கள் மத்திய வகுப்பினருக்கு ஏற்றவை. ஐரோப்பாவுக்கும், அமெரிக்காவுக்கும் நீண்ட தூரமிருந்ததால் அமெரிக்கா சிந்தனை மத்தியதரவகுப்பினருக்கு ஏற்றமுறையிலே இருந்தது. அமெரிக்காவில் கூலிவேலைசெய்து பிழைப்பவன் சொந்த வீடு வாங்க ஆசைப்படலாம்; அல்லது

வியாபாரத்திற்கு வசதியான சொத்து வாங்கப்பிரியப்படலாம். ஆனால், நாம் பாட்டாளிவர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்;முதலாளியின் சொத்தைப்பறிக்கவேண்டும் என அவன் எண்ணவேமாட்டான். அனேக தொழிலாளிகள் மேற்குப் பகுதிக்குச் சென்று நிலம் வாங்கி விவசாயம் செய்கின்றனர், அல்லது புதிய வர்த்தகம் தொடங்குகின்றனர். ஆகையால் இன்று இருந்த வகுப்பு அதே நிலையிலிருந்து பிற வகுப்பாருடன் போராட்டம், நடத்துவர் எனும் எண்ணம் இந்நாட்டில் ஒப்புக்கொள்ளப் படுவதில்லை.

இவ்வாறாக அமெரிக்கர்களுடைய சட்டங்களும், ஸ்தாபனங்களும் மக்களுடைய சுதந்திரத்தைக் காக்கும் சாதனங்களாக அமைந்திருக்கின்றன. கடல் ஒரு இயற்கையான பாதுகாப்பு என்பது இன்று அவ்வளவாகப் பொருந்துவதில்லை, எல்லைப்புறத்தில் தங்கு தடையின்றி நிலமெடுத்துப் பயிர் செய்யலாம் என்பதும் சாத்தியமில்லை. இவ்விரு காரணங்களின் விளைவாக அரசாங்க சாதனங்களைப் பெருக்கி மக்களுக்குத் தேவையாயிருக்கும் புதுப் பாதுகாப்புகளைப் பெறவேண்டியிருக்கிறது.

அமெரிக்கச் சரித்திரத் தொடக்கத்தில் கஷ்டத்திற்கு உள்ளாகுபவன் எல்லைப் புறத்திற்கு ஓடித் தன் திறமைக் கேற்பப் பிழைக்கலாம் எனும் வசதியினால் ஜனநாயகம் உருவாயிற்று. ஆனால், கிழக்குக் கரையில் நிலையாயிருந்தவர்களிடையே ஆங்கில சமூக, பொருளாதார வித்தியாசத்தினால் பல வகுப்புகள் தோன்றின. அரசியல் ஜனநாயகம், சொத்துடையவர்கள் உடமையாயிற்று. ஏனெனில் சொத்துள்ளவர்கள்தான் ஓட்டுச் செய்யலாம்.

ஆனால், எல்லை மேற்குப் புறமாக நகர்ந்தது. பள்ளத்தாக்கிலிருப்பவர்கள் கனவான்களைவிட எண்ணிக்கை அதிகமானதால் வெற்றி பெற்றனர். ஓட்டுரிமை விஸ்தரித்து பெண்களும் வாக்காளர்களானதால் அரசியல் ஜனநாயகம் பரவிற்று. ஜனாதிபதியையும் செனட் உறுப்பினரையும் தேர்ந்தெடுக்கும் உரிமையை மக்கள் பெற்றனர், அரசியல் அதிகாரம் உயர் வகுப்பினர் கையைவிட்டு நழுவிய உடன் மொத்த ஜனத்தொகை

யின் குணங்களும், குற்றங்களும் அரசியலில் நன்கு பிரதிப லிக்க ஆரம்பித்தன. 20-வது நூற்றுண்டில் ஏற்படக்கூடிய நெருக்கடிகளில் அமெரிக்கர் ஜெயிப்பதோ தோற்பதோ இந்தக் குணங்களையும் குற்றங்களையும் பொறுத்ததாகி விட்டது.

எது நியாயம், எது அநியாயம், எது புத்திசாலித்தன மானது, எது அசட்டுத்தனமானது என்பதை மக்களே முடிவு செய்கின்றனர். 'மக்கள் குரலே கடவுள் குரல்' என்று ஒரு மூதுரை உண்டு இதை அமெரிக்க நிலைக்குப் பொருத்திப், பார்த்தால் அமெரிக்க சமுதாயம் மக்கள் தங்களது பூரண உரி மையைப் பயன்படுத்துவதனுல் அமைந்தது என்று கூறலாம். மிக அற்ப விஷயத்தைச் சோதித்துப் பார்த்து, தவருக இருந் தால் திருத்தித்தான் உண்மையறியலாம் என்ருல், மக்கள் உடனே சோதனை செய்து விடுகின்றனர். தவறு செய்வதன் மூலம் எது அசட்டுத்தனமான காரியம் என்பதை அவர்கள் உணர்கின்றனர். தப்பான காரியத்தைச் செய்வதன்மூலம் எது தப்பு என்பதை அறிகின்றனர். சில சமயம் மக்கள் நியாயமான காரியங்கள் செய்கின்றனர். அவைகளில் நற்பயனைக் கண்டு சந்தோஷமடைகின்றனர்.

முதல் மகாயுத்தத்தின் பிறகு சர்வதேச சங்கத்தில் சேர மறுத்தது. உலக பாதுகாப்புக்கான பொறுப்பை ஏற்க மறுத்துப் பின் தங்கியது, சமாதான ஆரவாரத்தைக் கண்டு மயங்கியது —எல்லாவற்றிலும் அமெரிக்கர் தவறு செய்தனர். தாங்கள் தவறு செய்தோம் என்பதை அவர்கள் எப்படி அறிவது ?

எழுத்து மூலம் நிறுவிய பாதுகாப்புகள் பெர்ல் துறைமுகத் தில் தவிடு பொடியானதும் தெரிந்துகொண்டனர். மறு சந் தர்ப்பம் வந்தபோது அதே தவறை செய்யவில்லை.

அடுத்த சமயம் ஐ. நா. வில் ஆவலுடன் சேர்ந்து அது உயிர் வாழ்ந்து பலம் பெறப் பாடுபட்டனர். கொரியா சவாலை அமெரிக்காதான் துணிந்து ஏற்றது. அமெரிக்காவின் ஆணித் தரமான பதில்தான் ஐ.நா,வை மடியாமல் காப்பாற்றிற்று. பெர்ல் துறைமுகத் தாக்குதலுக்கு முன்பே பிற நாடுகளுக்கு கடன் உதவி செய்ய அமெரிக்கா முன் வந்தது. 2-வது உலக-

யுத்தத்திற்குப் பின் மார்ஷல் திட்டத்தை அமெரிக்கர் ஆதரித் தனர். இந்தச் சம்பவங்களிலிருந்து அமெரிக்கர் எப்படி பழைய தவறுகளிலிருந்து திருந்திக்கொண்டார்கள் என்பதையும், எப் படிப் புது அபாயங்களைச் சமாளிக்கப் புது சாதனங்களை மேற் கொண்டனர் என்பதையும் அறியலாம்.

எதிர்காலத்தில் மக்கள் நல்லதும் செய்யலாம், கெட்டதும் செய்யலாம், இவைகளுக்குத் தப்பிப் பிழைத்தால் புதிய விஷ யங்களை அறிந்து கொள்வார்கள், அபாயத்திற்கிடையே முன் னேறுவதே அவர்கள் குறிக்கோள். ஏனெனில் முன்னேற்றத் தில் அவர்களுக்கு நம்பிக்கை உண்டு என்பதே சரித்திரத்தி லிருந்து அவர்கள் கற்ற படிப்பினை, இந்த நம்பிக்கையே தவருக வும் இருக்கலாம். ஆனல் இது ஒன்றுதான் ஒளி வீசும் எதிர் காலத்திற்கு அழைத்துச் செல்லும். அமெரிக்கர் இந்த முன் னேற்ற உணர்வை பரம்பரையாகப் பெற்றதுமின்றி உலகத்திற்கு வழிகாட்டும் பொறுப்பும் அவர்களுடைய விருப்பமின்றியே, அவர்களுக்கு வாய்த்திருக்கிறது. அவர்கள் சரித்திரத்தின் தலைவாயிலில் நிற்கிருர்கள். அங்கே கண்ணுக்குப் புலப்படாத பல சக்திகள் அவர்களை எதிர்நோக்குகின்றனர். பதில் கூற முடியாத பல கேள்விகளுக்கு அவர்கள் மறுமொழி கூறவேண்டி இருக்கிறது. சரியோ, தவருே எதிர் வந்ததற்கெல்லாம் அவர் கள் பதில் சொல்ல வேண்டியவர்களா யிருக்கின்றனர்.

அமெரிக்காவின் அரசியல் சக்திகள் அந்த நாட்டை சில சமயம் முன்னுக்கும், சிலசமயம் பின்னுக்கும் இழுப்பது இயல்பு மட்டுமல்ல; முறையுமாகும். சரித்திரத்தின் எல்லையிலிருப்ப வர்கள் தைரியமாகவு மிருக்கவேண்டும்; முன் ஜாக்கிரதையா கவுமிருக்கவேண்டும். மேலும் செயல் புரிவதில் தீரம் காட்ட வும் வேண்டும்; அனுவசியமாக அச்சம் புரையோடாமல் அதை வெளிப்படுத்துவதும் அவசியம். நம்பிக்கையையும், அச்சத்தையும் மனம் விட்டுக் கூறவேண்டும். முடிவுசெய்யும் காலம் வரும்போது அதை நிலைத்திருக்கத் தக்க வரையில் திட்டம் செய்யவேண்டும். வாதிப்பிரதிவாதம் எவ்வளவு கார சாரமாக நடந்தாலும் இந்த முறைகளை அமெரிக்கா வெற்றிகர மான முறையில் கையாண்டு வருகிறது.

உலகத் தலைமைப் பதவிக்கான பல அபாயங்களை எதிர்த்து நிற்கையில் அமெரிக்க மக்கள் பலதிறப்பட்டவர்களாயிருப்பது ஒரு சுப சூசகம், அமெரிக்காவில் உள்ள பல ஜாதியினர் இனத்தினரின் நம்பிக்கைகள், அச்சங்கள், பரஸ்பர விருப்பு வெறுப்புகள், சந்தேகங்கள் இவ்வளவையும் சமாளித்து ஒன்றுபட்டு இழைய வேண்டிய அவசியம்—இவையாவும் அமெரிக்கர்களுக்குத் தெரியாததல்ல. இந்தப் பிரச்னைகளெல்லாம் நம் நாட்டிலிருக்கின்றன. அவ்வளவாக நல்லெண்ணமும், ஒத்துழைப்பு ஆர்வமும் பொங்கி வழிவதாகக் கூறமுடியாது, ஒன்று கூடி வாழ்வதால் உள்நாட்டுச் சண்டை ஏற்படுவதில்லை. உலகத்திற்கு வேண்டியது இம் மாதிரி நிலையே ஒழிய கனவுலகமில்லை. தங்கள் நாட்டிலும் பல சங்கடங்களை அனுபவித்தார்களாகையால் இதன் அர்த்தத்தை அவர்கள் நன்கு உணர்வார்கள்,

அமெரிக்கர் கற்பனை உலகைப் பற்றிக் கனவு காண்பவர்களல்ல. 300 வருஷங்களாக நாம் ஒரு யாத்திரையில் ஈடுபட்டிருக்கிறோம். நாம் நீண்ட தூரம் கடந்துவிட்டாலும் போக வேண்டிய இடம் இன்னும் கண்ணுக்குத் தெரியவில்லை. இது குறிப்பான ஒரு இடத்திற்குப் போவது போலல்ல. மீளாத யாத்திரை சுகத்தையும், சங்கடத்தையும் சமமாகப் பார்த்தால் இந்தப் பிரயாணம் மக்களுக்குப் பிடித்ததாகவே இருக்கிறது. நாம் வரவர உயரப் போய் வருகிறோம். அங்கிருந்து பார்த்தால் முன்பைவிட காட்சி ரம்மியமாகவே இருக்கிறது.

ஒரு நூற்றாண்டுக்கு முன் ஒரு பிரஞ்சு யாத்ரிகர் கூறினர். "நீண்ட காலமாக தங்கள் நலன்களை தாங்களே காத்தறியாதவர்களுக்கு, மிகத் தாழ்மையானவர்களுக்கும் அரசியல் சாஸ்திரத்தை அறியாதவர்களுக்கும் ஏற்ற தல்ல அமெரிக்க அரசாங்கத்தின் அமைப்பு." சர்வாதிகாரத்திலிருந்து சமீபத்தில் விடுபட்டவர்கள் அமெரிக்க அரசியல் முறையை மேற்கொள்ளும்படி நாம் சிபாரிசு செய்யமாட்டோம். ஏனெனில் அமெரிக்க மக்களின் விசித்திரமான அனுபவங்களின் விளைவாக ஏற்பட்ட அமெரிக்க அமைப்பின் விசேஷ அம்சங்கள் புதிதாக விடுபட்டவர்களுக்கு விளங்காது. ஆனால், அரசியலில் சுதந்திரத்தைப் போராடிப் பெற்றவர்கள் ஜனநாயக

யாத்திரை தொடங்குவார்களானால் தங்களுடைய சம்பிரதாயங்களையும் சுய மரியாதையும்பயன்படுத்திக்கொண்டு எவ்வளவோ கஷ்டங்களிலிருந்தாலும் இந்த யாத்திரை மேற்கொள்ளத் தக்கதுதான் என நம்பிச் செல்பவர்களுக்கு தங்களுடைய அரசியலமைப்பைப் பின்பற்றும்படி அமெரிக்கர் சிபாரிசு செய்வர்.

ஒரு யாத்திரையை ஒவ்வொரு மக்கள் ஒவ்வொரு மாதிரியாக நடத்தலாம். விஞ்ஞானத்தின் மூலம் அறிந்து கொள்ளக் கூடியதைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். மத உபதேசங்களையும் பயன்படுத்திக் கொள்கின்றனர். தினசரி வாழ்க்கையில் சுகதுக்கங்களைச் சமமாக அனுபவித்து அமெரிக்க வாழ்க்கை முறையைச் சமைக்கின்றனர்.

அரசாங்க ஸ்தாபனங்களில் அவர்களுக்கு தெரிந்த மட்டில் சர்ச்சை செய்து, சமாதானம் செய்து உடன்பாடு அடைகின்றனர். அதாவது அரசியல் கலையைப் பயன் படுத்துகின்றனர் அரசியல் அறவே இல்தாத சர்வாதிகாரத்திற்கும், ஜனநாயக முறையின் அமளிக்கும் குழப்பத்திற்குமிடையே அமெரிக்கர்—அதனால் நன்மைக் கிட்டுமோ அல்லது தீமை சம்பவிக்குமோ—20-வது நூற்றுண்டின் சவால்களை நோக்கி ஜனநாயகப் பாதையில்தான் செல்வது என்று திட்டம் செய்துவிட்டனர்.



# அமெரிக்கா

## வழிகாட்டுகிறது

டேவிட் குஷ்மன் காயில்

தமிழில் : ரா. நா.